தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை - 23

# மானிடவியல்

## ( Anthropology )

ஆசிரியர்

ம. சு. கோபாலகிருஷ்ணன், எம்.ஏ., எம்.லிட்.,

விரிவுரையாளர், மானிடவியல் துறை, சென்னைப் பல்கலைக்கழகம்




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

—o—

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி. ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணி புரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில், அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர். இவற்றுள் ஒன்றான 'மானிட இயல்' என்ற இந்நூலை அனைவரும் வரவேற்பார்கள் என நம்புகிறோம்.

கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் இதுவரை வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளிலும் 58 நூல்கள் வெளிவந்துள்ளன.

இத்துறையை இன்னும் விரிவு படுத்தச் சென்னை அரசினர் தமிழ் வெளியீட்டுக் கழகம் ஒன்றை நிறுவியுள்ளனர். அதன்மூலம் இன்னும் வேறு பல நூல்கள் தமிழில் வெளிவர இருக்கின்றன.

கணக்கிலடங்காத தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக! 'உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை' ஆதலின் உழைத்து வெற்றி காண்போம்.

தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்,
தமிழக நிதி, கல்வியமைச்சர்.

# முகவுரை

ஆசிய நாடுகளிலேயே குடியாட்சி முறையைச் சிறப்புடன் நிலைக்கச் செய்துள்ள நம் இந்திய நாடு இன்று இரண்டு முன்னேற்றத் திட்டங்களைச் செவ்வனே முடித்துள்ளது. மக்கள் வாழ்க்கைத் தகுதியைப் பிற நாட்டினர்கூடப் பெரிதும் போற்றும் அளவு முன்னுக்குக் கொண்டு வந்திருப்பதுடன், முன்னேற்றத்தின் அடிப்படைக் கருவியாகிய சிந்தனையையும் நாட்டுக்குரியதாக, உண்மை மதிப்புக்கு உரியதாக ஆக்க எண்ணி, தாம் தவழும் பருவம் முதல் பழகிவரும் தம் மொழியில் எதையும் சிந்தித்துப் பிறர்க்கு வழங்கும் சிறப்பை மக்கள் பெற இன்று அரசியலார் எடுத்துக்கொண்டுள்ள முயற்சி பெரும் பாராட்டுக்கு உரியதே. என்றாலும், விழைவு வேறு, நடைமுறை வேறு. விழைவு எப்பொழுதும் முடிந்த தோற்றத்தை உடையது; நடைமுறை அத்தோற்றத்தை உருப்படுத்தும் செயல் முறை.

ஒரு நாகரிகம் தோன்றுவதே மனிதனின் சிந்தனையில் தான். எனவே, ஆங்கில ஆட்சிக்கு உட்பட்டிருந்த இந்திய நாடு, அம் மேனாட்டு நாகரிகத்தின் பல கூறுகளை ஏற்றுத் தன் வாழ்க்கையில் புகுத்தித் தன் நாகரிகத்தையேகூட ஓர் அளவு மாற்றிக் கொண்டுள்ளது என்னலாம். இம் மாற்றம் நாம் இன்று காணும் மின்விளக்கிலிருந்து மில் துணி வரை, அட்ரினலினிலிருந்து அணுப்பிளவாயுதம் வரை காணப்படும் ஒன்று. இவை நம் சிந்தனையில் எழுந்தனவாய் இரா விடினும், இவற்றிலிருந்து இனி எழக்கூடிய பல முயற்சிகளும் பயன்களும் நம்மவைகளாய் இருக்கவும், எளிதில் நம் சிந்தனைத்திறம் வளரவும், நம் மொழி காக்கப்படவும் நாம் இன்று தமிழில் எதையும் கற்கவேண்டி உள்ளது. என்றாலும், இவ்விழைவை நிறைவேற்ற ஆங்கில மொழியை அறவே நீக்குதல் நன்றன்று.

பழகிவிட்ட மொழி என்றதாலேயே ஒன்று சிந்தனையை வளர்க்கும் மொழி என்றாகாது. பழகிவிட்ட மொழியைச் சிந்தனையிலிருந்து பிரித்தலும் எளிய செயல் அன்று. எனவே, நம் சிந்தனையெல்லாம் நம் மொழியில் உருவெடுக்கக் கலைச்சொல்—மொழிபெயர்ப்பை ஓர் ஆயுதமாகப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். மொழிபெயர்ப்பையே இறுதிவரை இருத்திக்கொள்ளக்கூடாது. மொழிபெயர்ப்பும் ஓர் ஆங்கிலச் சொல்லுக்கு ஒரு தமிழ்ச்சொல் என்றிராமல், ஆங்கிலத்தில் சொல்லப்பட்ட கருத்தமைந்த ஒரு தமிழ்ச் சொல்லாக இருத்தலே நலம். மெல்ல மெல்ல அடைப்புக்களில் ஆங்கிலச் சொற்களைத் தரும் பழக்கமும் நீங்கவேண்டும். இல்லையேல் கொடுக்கப்பட்ட ஆங்கிலச் சொல்லே கண்முன் நிற்கும். இதைத் தொடர்ந்து சிந்தனையும் அவ்வாங்கிலத்திலேயே செல்லும். முடிவாக ஆங்கிலத்தில் சிந்தித்த பொருளைத் தமிழ்ப்படுத்தவேண்டிய பேரிடர் வந்துறும். இது தமிழ் வளர்ச்சிக்கும் சிந்தனை வளர்ச்சிக்கும் பெருங் கேடு விளைக்கும் என்பதை மாணவர்கள் நன்கு உணர்தல் வேண்டும். இம் முகவுரையில் அடைப்புக்குள் ஆங்கிலச்சொல் தரவேண்டிய சில இடங்களில்கூடத் தராமல் விட்டமை படிப்பவர் எவ்வண்ணம் புரிந்துகொள்கின்றனர் என்பதைப் பார்க்கவேயாம். என்றாலும், இதன்கண் உள்ள அருஞ்சொற்களுக்குப் பொருளைப் பின் சேர்க்கையெனத் தரப்பட்டுள்ள அருஞ்சொற்பொருள் அகராதியில் காண்க.

இந் நூலில் தரப்பட்டுள்ள சொற்கள் சிலவற்றுக்கு அடைப்புக்குள் ஆங்கிலத்தில் சொற்கள் உள்ளனவென்றாலும், தமிழில் எந்தச் சொல் அந்த இடத்துக்குப் பொருந்துமோ அந்தச் சொல்லையே பயன்படுத்தியிருக்கிறேனே தவிர, ஆங்கிலச் சொல்லின் நேர் மொழிபெயர்ப்பு அன்று. எடுத்துக்காட்டாக, 'இரானியர்களுக்கும் ஸ்கைதியர்களுக்கும் நெருக்கம் (*affinity*) இருப்பதாலும் இவர்களை இரானியஸ்கைதியர்கள் என்றே கூறலாம்' என்ற சொற்றொடரில் நெருக்கம் என்ற சொல்லுக்கு நேர்ச்சொல்லாக

ஆங்கிலத்தில் *Closeness* என்றும், *affinity* என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நேர்தமிழ்ச் சொல்லாகப் பற்று என்றும் கொள்ளலாம் என்றாலும், மேற்கண்ட இடத்தில் பற்று என்ற சொல் சற்றுப் பொருந்தாமை காண்க.

மானிடவியலை ஆங்கிலத்தில் கற்று, ஆங்கிலத்தில் சிந்தித்து, ஆங்கிலத்திலேயே இந்நாள் வரை மாணவர்களுக்கும் சொல்லிக் கொடுத்து வரும் நான் இந் நூலை ஆக்கும் முயற்சியில் பெரும்பாலும் தமிழில் சிந்தித்துத் தமிழ் வழக்குக்கு ஒப்பவே சொல்லும் விதத்தையும் அமைத்து, இவ்வமைப்புக்கு உதவியாக ஆங்கிலச் சொற்களை அடைப்புக்குள் தந்துள்ளேன். இதை விளக்குவது போல் விட்னி என்ற ஆங்கில மொழிநூல் பெரும் புலவர் தம் 'மொழியும் மொழியைக் கற்றலும்' என்ற நூலில் சொல்லியதை அம் மொழியில் படித்தே உணர்கவென்று மொழிபெயர்க்காமல் அப்படியே தருகிறேன்: *"A word is not the natural reflection of an Idea, nor its description, nor its definition; it is only its designation, an arbitrary and conventional sign with which we learn to associate it. Hence it has no internal force conservative of its identity, but is exposed to all the change which external circumstances, the needs of practical use, the convenience and caprice of those who employ it, may suggest." (Language and the study of languages - p. 70).* எனவே, சொற்கள் யாவையும் கருத்துக்களின் அறிகுறிகள் எனக் கொண்டு, கருத்துக்களை உணர்த்தும் ஆற்றல் அவற்றுக்கு இருக்கின்றனவா என்றுமட்டுமே கொண்டமை காண்க.

தமிழ் உரைநடை என்றாலே இறையனார் அகப்பொருளுரை போன்ற பழந்தமிழ் உரைநடைகளே பலர் கண்முன் நிற்கின்றன. இத்தகைய அச்சத்துடன் கருத்துக்களை ஆங்கிலத்தில் எழுதுவதைப் போலவே தமிழில் எழுதுவதால் உண்டாகும் பொருள் குழப்பம் ஊட்டும் அச்சமும் சேர, தமிழில் சொல்வதைவிட ஆங்கிலத்தில்

சொன்னாலே எளிதில் விளங்குகிறது என்ற தவறான எண்ணம் உண்டாகிறது. அந்த எண்ணத்தைப் போக்க வேண்டுமாயின், முதலாவதாக எதையும் தமிழில் கற்றல் தமக்கு மிகுந்த பெருமையைத் தருவது என்று கொள்ளலும், இரண்டாவதாகச் சொல்லை மொழிபெயர்க்காமல் பொருள் உணர்ந்து, அப் பொருளைத் தமிழாக்கும்பொழுது சில கலைச்சொற்கள் தேவைப்படின், அவற்றைக் காரணம் தெரிந்து, தமிழ் மொழிக்கு ஏற்ப உருவாக்கிப் பயன்படுத்தலுமே மாணவர்கள் செய்யவேண்டுவன என்னலாம்.

இன்றைய உரைநடையின் சிறப்பே சொற்களை ஒன்றுடன் ஒன்று சங்கிலிபோல் சேர்த்து எழுதாமல் பிரித்தே எழுதுவதும், எச்சம், உம்மை, முற்று என்றெல்லாம் இருந்தும், நிறுத்தற் குறிகள் இட்டே தொடர்களை எளிதில் பொருள் விளங்குமாறு செய்தலும் எனின் பொருந்தும். எனவேதான் இந்நூலில் முடிந்தவரை சொற்களைப் பிரித்தே தந்துள்ளேன். ‘சாதியமைப்பு’ என்ற கூட்டுச் சொல்லை, ‘சாதி அமைப்பு’ என்றும், ‘இருந்ததென்னலாம்’ என்று எழுதக்கூடிய இரு சொற்களை, ‘இருந்தது என்னலாம்’ என்றும், ‘உடற்றொடர்பு’ என்பதை ‘உடல் தொடர்பு’ என்றும், ‘நான்முகம்’ என்பதைக்கூட ‘நால் முகம்’ என்றும் மாணவர்கள் எளிதில் படித்துப் பொருள் தெரிந்துகொள்ள வேண்டும் என்றே தனித்தனி அமைத்துள்ளேன். சில இடங்களில் மட்டுமே உம்மையை அடுத்துச் சிறு நிறுத்தற் குறி /,/ இட்டுள்ளேனாகையால் உம்மைகள் வரின் சற்றே நின்று படிக்கவும். மேலும், மிகத் தேவையான இடங்களில் மட்டுமே நிறுத்தற் குறிகள் இடவேண்டியிருப்பதால், தமிழ் தெரிந்தவர்கள் படிக்கும் பொழுது இயற்கையாகவே நிறுத்திப் படிக்கவேண்டிய இடங்களைச் சற்று நினைவில் இருத்திப் படிக்கவும். இல்லையேல் பல இடங்களில் பொருள் மயக்கம் உண்டாகலாம். எடுத்துக்காட்டாக ஒன்றைப் பாருங்கள்: ‘பிற்காலத்து இந்து மதச் சாதி அமைப்பு, பிராமணர்களின் உயர்வு, உள்நாட்டுக் கீழ்ச்சாதிகளிடம் வெறுப்பு, உள்நாட்டில் உள்ள

மாமிசம் உண்பவரைத் தாழ்த்துவது போன்ற உயர்ந்து விளங்கிய எதையும் தாழ்த்திய மனப்போக்கைக் காட்டு கின்றது என்றும் சொல்லலாம்'.

மானிடவியலைத் தமிழில் கல்லூரி மாணவர்களுக்கு முதன் முதலில் ஆக்கித் தரும் வாய்ப்பு எனக்குக் கிடைத் தமை குறித்து மகிழ்கிறேன். ஆனல் இந்நூலில் உள்ள பொருள்கள் யாவும் என்னையும் சேர்த்துப் பல மானிட வியலாரின் கருத்துக்களும் முடிவுகளுமே என்னலாம். எடுத்துக்காட்டாக, சாதி என்ற தலைப்பில் சாதியைப் பற்றி எழுதியுள்ள அத்தனையும் பலர் கருத்துக்களே. சாதிகள் எத்தனை இருக்கின்றனவோ, ஏறத்தாழ அத்தனை கருத்துக்கள் அவற்றைப்பற்றி நிலவுகின்றனவாகையால் அவற்றில் சிலவற்றையேனும் மாணவர்கள் தெரிந்து கொள்ளவும், அவர் தம் சிந்தனைக்குத் தூண்டுகோலாக இந் நூல் அமையும் என்னலாம். என் ஒருவனுடைய கருத்தே, கல்லூரி மாணவர்களுக்கு என்று ஆக்கும் ஒரு நூலுக்குப் பொருந்தாது. அதனுடன் மானிடவியலாருள் ஒருவர் ஒரு பொருளில் தேர்ச்சி பெற்றவராய், ஆராய்ச்சி அறிவு நிரம்பப் பெற்றவராய்ச் சீரிய முடிவுகளைக் கண்டவராய் இருக்கலாம். அவரது கருத்தைப் புறக்கணித்தல் மாணவர்களுக்குப் பயனளிக்கக்கூடிய செயல் அன்று. எனவே, இந்நூல் ஒரு வகுப்பு மாணவர்க்கு என்று குறிக்கப்படினும், கொடுக்கப் பட்டுள்ள பொருளின் பரப்பும் ஆழமும் அக் குறிக்கோளைச் சிறிது கடந்தே உள்ளன என்னலாம். பின்சேர்க்கையென கொடுக்கப்பட்டுள்ள நூல் திரட்டு மாணவர்க்குப் பெரிதும் பயன்படக்கூடியது.

சென்னைப் பல்கலைக்கழக மானிடவியல் துறைத் தலைவரும், எனக்கு இவ்வியலைக் கற்றுத் தந்தவருள் ஒருவரு மான டாக்டர் ஏரன்பெல்ஸ் செய்துள்ள காடர் ஆராய்ச்சி எனக்குப் பெரிதும் பயன்பட்டமை இங்குக் குறிக்கத் தக்கது. இவ்வண்ணமே எனக்கு இவ்வியலைக் கற்றுத் தந்தவருள் ஒருவரும், இன்று உட்கல் பல்கலைக்கழகத்து மானிடவியல் துறைத் தலைவருமான டாக்டர் ஏ. ஐயப்பன்

அவர்களுடைய பல சீரிய கருத்துக்களும் பயன்பட்டமை குறித்தற்குரிய ஒன்று. இந்நூலை ஒருமுறை செவ்வனே படித்துப் பார்த்து, என் முயற்சியைச் சிறப்பித்த மானிடவியல் பேரறிஞர் உயர்திரு. சி. ஜ. ஜயதேவ் அவர்களும் இவண் குறிப்பிடப்பட வேண்டியவரே. எனவே, மேல் சொன்ன மூவரும் என் நன்றியுணர்ச்சியை ஏற்பாராக. இதனுடன் இந்நூலில் காணும் சில கருத்துக்களின் உரிமையாளர்களுக்கும் என் நன்றி. இதை எழுத எனக்கு வாய்ப்புத் தந்த சென்னைப் பல்கலைக்கழகத்துக்கும், இதற்கு என்னைத் தெரிந்தெடுத்தமைக்குத் தமிழ்க்குழு உறுப்பினர்களுக்கும், இதைச் சிறந்த முறையில் அச்சிட்டு வெளியிட்ட தமிழ் வெளியீட்டு அலுவலகத்துக்கும் என் நன்றியைத் தெரிவிக்க விழைகிறேன்.

கடைசியாக, இம் மானிடவியல் நூலை பின்சேர்க்கப்பட்ட அருங்கலைச் சொற்பொருள் அகராதியும் சேர, மாணவர்கள் எளிதில் புரிந்து பயனடையக்கூடிய நல்ல தமிழில், சொல்லும் பொருளும் இயைய எனக்குப் பேருதவியாக இருந்து ஆக்கித் தந்த சிறந்த எழுத்தாளரும், ஜெர்மன், பிரெஞ்சு மொழி ஆசிரியரும், அறிவியல் அறிவு பெற்றவருமான திரு. ச. ம. பாலசுப்பிரமண்யம் அவர்களுக்கு என் மனம் உவந்த நன்றி என்றும் உரித்தாகுக.

ம. சு. கோபாலகிருஷ்ணன்,
மானிடவியல் விரிவுரையாளர்,
சென்னைப் பல்கலைக்கழகம்.

மதராஸ்-5
5—9—1963

# நூன்முகம்

மனிதன் எதையும் சிந்தித்துப் பார்க்கும் தன்மையைப் பெற்றவன். இத்தன்மையை அறிவு என்கிறோம். உலகத்துப் பொருள்கள் யாவையும் சிந்தனையைத் தூண்டக்கூடியனவே. ஆதலால்தான் பல அறிஞர்கள் சிந்தித்துச் சிந்தித்துப் பல புதுப் பொருள்களையும், பல புது உண்மைகளையும் கண்டுபிடிக்கின்றனர். இப்படிக் கண்டுபிடிக்கப் படும் பொருள்கள் யாவையும், ஆய்ந்து பார்க்கப்படும் உண்மைகள் யாவையும் ஒரு தன்மையவை அல்லவாகையால் இப்பொருள்களையும் உண்மைகளையும் பல தலைப்புக்களில் பிரித்துப் பார்க்கவேண்டியிருக்கிறது. இப்படிப் பிரிக்கப் பட்ட பிரிவுகளே கலவையியல் (*chemistry*), பொருளியல் (*economics*), உடலியல் (*physiology*), மனவியல் (*psychology*) என்பனவும் பிறவும். இப்படிப்பட்ட பிரிவுகளில்ஒன்றேமானிடவியல் (*anthropology*). ஆன்த்ரொபோ (*anthropos*): மனிதன்; லொஜி (*logos* இதன் திரிபே *logy*): அறிவியல். மனிதனைப் பற்றிய, அதாவது மனிதனின் அன்றைய, இன்றைய பிறப்பு, வளர்ப்பு, வாழ்வு போல்வனவற்றின் உண்மைகளை எடுத்துச் சொல்லும் ஓர் அறிவியல் (*science*) என்ற பொருளில் மானிடவியல் எனப்பட்டது. மனிதன் வாழ்க்கை வரலாற்றைப் பொதுப் படத்தெரிந்துகொள்ளச் செய்யும் முயற்சி இது. இவ்வரலாறு கடல் போன்றது என்னலாம். ஒரு காலத்தை மட்டுமோ, ஒரு நாட்டை மட்டுமோ, ஒரு கலையை மட்டுமோ, அல்லது ஒரு நாகரிகத்தை மட்டுமோ பற்றியது அன்று இவ்வியல். மனிதன் மிருகத்தன்மை யுடையவனாக, நாகரிகம் கொஞ்சமும் அற்றவனாக இருந்த காலத்தையும் நன்கு ஆய்ந்து பார்ப்பதே இவ்வியல். எல்லா நாகரிகங்களும், எல்லாப் பண்பாடுகளும், எல்லா நாடுகளும், எல்லா மனிதர்களும், எல்லாப் பழக்க வழக்கங்களும் இவ்வியலுக்குள் அடங்கியவையே. மனிதனைப் 'படித்தல்' என்

ளுல், மனிதனின் மனப்போக்கு (*feeling*), நினைவுகள் (*thoughts*), செயல்கள் (*deeds*) எவ்வெப்படி அமைந்திருந்தன, எவ்வெப்படி மாற்றமுற்றுள்ளன என்பனவற்றையெல்லாம் நன்கு தெரிந்துகொள்ளவேண்டும் அல்லவா? இவற்றைக் கொண்ட ஓர் அறிவியல் நூலே மானிடவியல் என்னலாம். மானிடவியல் ஓர் இயற்கை வரலாறு (*natural history*). இயற்கையில் (*in nature*) மனிதனின் இயல்பும் ஓர் இடம் பெறுகிறது. எனவே, இவ்வியல்பைத் தெரிந்துகொள்ளும் முயற்சியே ஓர் இயற்கை வரலாறு. இவ் வரலாறு மனிதனை மட்டும் தனித்துப் பார்க்காமல் மனிதன் வாழும் சமூகத்தையும் பார்க்கிறது; மனிதனின் இனத்தையும் பார்க்கிறது. எனவே, ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த மனிதனின் நிலையையும் இயல்பையும் கூட இவ்வியல் நமக்குத் தருகிறது. நாம் இதுவரை தெரிந்துகொண்டவற்றிலிருந்து மனிதன் மிகத் தொன்மையிலிருந்தே, அவன் பிறந்த அந்த நாளிலிருந்தே ஒருவகைக் கூட்டு அமைப்பில் இருந்து வருவதையும், இவ்வமைப்பு நாளுக்குநாள் சிக்கல் நிரம்பியதாக ஆகி வந்துகொண்டிருப்பதையும் அறிகின்ளும். இன்றைய மனிதனையும் ஆதி மனிதனையும் ஒப்பிட்டால், ஆதி மனிதன் ஒரு தனிவகையெனத் தோன்றும். அப்படியேதான் அம்மனிதனின் நாகரிகமும் பண்பாடும்கூட. இன்றைய மனிதனின் நாகரிகமும் பண்பாடும், அன்றைய மனிதனின் நாகரிகத்தினின்றும் பண்பாட்டினின்றும் வேறுபடவே செய்கின்றன. அன்றைய மனிதனுக்கு நாகரிகம் ஏது, பண்பாடு ஏது என்றுகூடக் கேட்கத் தோன்றும். அந்த அளவு மாற்றம் இப்பொழுது ஏற்பட்டுவிட்டது. வருங்காலத்தும் இப்படியே எனின் தவருகாது. எடுத்துக்காட்டாக, போர் (*war*) ஒன்றை எடுத்துகொள்வோம். எக்காலத்தும் மக்களிடையே போர் நிகழாமல் இருந்ததில்லை. அன்றும் போர் புரிந்தனர்; இன்றும் போர் புரிகின்றனர். அப்போருக்கும் இப்போருக்கும் எத்துணை வேறுபாடு! கல் அம்பாயிற்று; அம்பு வாளாயிற்று; வாள் குண்டாயிற்று; அக்குண்டும் அணுக்குண்டு என்றும், ஹைட்ரஜன் குண்டு என்றும் ஆயிற்று.

இவையெல்லாம் கெட இப்பொழுது மரணக்கீற்று (*death ray*) உருவாகி வருகிறது. இவை அத்தனையும் மனிதன் வளர வளர, மனிதனின் நாகரிகம் வளர வளர, அவன் திறமை வளர வளர வளர்ந்து வந்தவையே அல்லவா? எனவே, ஒரு நாகரிகம் எப்படி வளர்ந்து வருகிறது என்பதையும், அந் நாகரிகம் எப்படி அழிகிறது என்பதையும், இவ் வளர்ச்சியிலும் அழிவிலும் மனிதனுக்கு எத்துணைப் பங்குண்டு என்பதையும் மானிடவியல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

மானிடவியலை முப்பெரும் பிரிவின்கீழ்ப் படிக்கலாம்: உருவத்தோற்ற மானிடவியல் (*physical anthropology*), சரித்திரகாலத்துக்கு முற்பட்டதும் (*pre-historic*), சரித்திர காலத்ததும் (*historic or cultural*) ஆன மானிடவியல், செயல்முறை மானிடவியல் (*applied anthropology*). மானிடவியல் அறிஞன் சரித்திரம், மொழி, பொருளாதாரம், கலை போன்ற பல நூல்களை நன்கு கற்றவனாக இருக்க வேண்டும். இல்லையேல் இவ்வியலைச் சிறப்பாகக் கற்கவோ அல்லது அறிந்து பயனடையவோ முடியாது.

பச்சை குத்துதல் (*tattooing*), பல்லை இழைத்தல் (*filing of the teeth*), சிறுநீர்க் குழலின் முன்தோல் கழித்தல் (*circumcision*), தலைமயிர் கழித்தல், குடுமி வைத்தல் போன்ற பலவும் உருவத்தோற்ற மானிடவியலைச் சேர்ந்தவையெனவே அப்பிரிவினைச் சிறப்பாகப் படிப்போர் அவற்றை நன்கு ஆயவேண்டும். ஆனால் சரித்திர மானிடவியலாரே, அதாவது மனிதனின் பண்பாட்டை ஆய்ந்து பார்க்கும் சிலரே மேற்கூறப்பட்ட உருவ மாற்றங்களுக்குக் காரணம் சொல்லவோ அல்லது அவற்றை நன்கு விளக்கவோ முடியும். சரித்திர காலத்துக்கு முற்பட்ட எதையும் தெரிந்துகொண்ட பின்னரே இவ்வியலாரின் அறிவு முழுமை பெறுகிறது என்னலாம்.

தொல் சமூக அமைப்பை நாம் ஏன் தெரிந்துகொள்ள வேண்டும்? இடம், காலம், பண்பாடு எவற்றுக்கும் அப்பாற்பட்டது மானிடவியல் எனின், தொல் சமூகத்தைச் சரித்திர கால மானிடவியலில் காணுவது ஏன்? இதற்குக்

குறிப்பிட்ட ஒரு காரணம் இல்லை ; சரித்திரத்தில் நிகழ்ந்த ஒரு தற்செயல் என்றே கொள்ளவேண்டும். எப்படியும் மானிடவியல் தோன்றிய காலத்தில் மட்டும் மனிதனின் தொன்மையைத்தான் இவ்வியலார் ஆய்ந்தனர். ஆராய்ச்சி மிகவும், இவ்வியலின் வரையறையும் பெரிதாயிற்று. இன்று காலத்துக்கும், இடத்துக்கும், பண்பாட்டுக்கும் கட்டுப் படாத ஓர் அறிவியல் ஆராய்ச்சிப் பொருளாகப் பல சமூகங்களையும், அச் சமூகங்களின் நாகரிகங்களையும், பண் பாடுகளையும் தெளிவுடன் அறிந்து, அவ்வறிவைச் செயல் படுத்திப் (*applying the knowledge*) பயனடையவும் முடிந்த ஒரு துறையெனத் திகழ்கிறது இவ்வியல் எனின் பொருந்தும்.

மானிடவியலின் தோற்றம் தொன்மைப் பொருளது என்றும், இதற்குக் காரணம் சொல்வதற்கில்லை என்றும் சொன்னேம் அல்லவா? ஆனல் மனிதனின் மனப் போக் கைக் கூர்ந்து நோக்கின், அவன் எதையும் பழமையி லிருந்தே கற்பது நன்கு விளங்கும். ஒரு பொருளின் இன்றைய தோற்றத்தைக் கண்ட ஓர் அறிவியல் ஆராய்ச்சி யாளன் (*research scientist*) அப்பொருள் எங்கு, எப்படி, எப்பொழுது பிறந்து வளர்ந்து இந்நிலையை இன்று அடைந் திருக்கிறது என்றே ஆய முனைவான். அப்பொருளின் இன்றைய நிலையை மட்டும் அலசிடுவது குறையுள்ள ஆராய்ச்சி. எனவே, மனிதன் தன் தொன்மை வாழ்க் கையை முதலில் எடுத்துப் பார்த்ததில் வியப்பேதும் இல்லை என்றே சொல்லலாம். இதையே ஒரு காரணமாகச் சொன் னுலும் தவறில்லை.

தற்கால மனிதன் (*modern man*) முற்கால மனித னுக்குப் (*primitive man*) பண்பாடு, பொருளியல் (*economics*), சமூகம், நன்னிலை (*hygiene*) இவற்றில் பல சிக்கல் களை உண்டுபண்ணிவிட்டான் என்றே சொல்லலாம். நாக ரிகம் முற்ற முற்ற, தொல் சமூக அமைப்புப் பெரிதும் கெட் டுக் கெட்டே வந்திருக்கிறது. எடுத்துக்காட்டாக, 1820ஆம் ஆண்டில் ஆங்கிலேயர் நீலகிரி மலையைக் கோடைகால் வாழிடமாகக் (*summer resort*) கொண்டனர். அந்த

ஆண்டிலேயே அங்கிருந்த பழங்குடி மக்களான தோடர்களின் வாழ்க்கை கெடத் தொடங்கிற்று என்னலாம். இவ்வாங்கிலேயர் இத்தோடர்களுக்குக் கொடுத்த முதற் பரிசு பெண் தொடர்பால் உண்டாகும் நோய். இந்நோய் இவர்களைப்பெரிதும் தாக்கியது. இந்நோயின் தாக்குதலால் இவர்களுடைய இனமே செத்துப்போகும் (*extinct*) நிலை எய்தி விட்டது என்றே சொல்லலாம். பழங்குடி வாழ்க்கையை நன்கு கூர்ந்து நோக்கின், வாழ்க்கையின் ஒரு கூறு (*aspect*) கெடின், அவ் வாழ்க்கையே கெட்டுவிடுகிறது என்பதை உணரலாம். ஏனெனில், ஒரு பழங்குடியின் பல பழக்க வழக்கங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளனவாக உள்ளன. இத்தொடர்பு அவர்களுடைய வாழ்க்கை முறையின் தொகுப்புக்கு அடிப்படையாக உள்ளது. எனவே, இத்தொடர்பைக் கெடச் செய்யும் எந்தச் செயலும் இவர்களுடைய வாழ்க்கை அமைப்பையே மாற்றி விடுகிறது. தற்கால மனிதனின் நாகரிகம், முற்கால மனிதனின் வாழ்முறை மாற்றத்துக்கும் அழிவுக்கும் காரணமாகவே இருந்து வருகிறது என்னலாம். இவற்றையெல்லாம் நன்கு உணர்ந்து செயலாற்ற மானிடவியல் உதவுகிறது. ஒரு நாகரிகம் அல்லது ஒரு பண்பாடு எங்ஙனம் மாற்றம் உறுகிறது என்பதைத் தெரிந்துகொண்டால், அம் மாற்றத்தால் கேடு ஒன்றும் சமூகத்துக்கு வாராதபடி தடுக்க ஆவன செய்யலாம் அல்லவா? இப்படிச் செய்வதால் ஒரு சமூகத்தின் மாற்றத்தை இயற்கைக்கே விட்டுவிடாமல், நாமே நம் தேவைக்குத் தகுந்தபடி அமைத்துக்கொள்ளலாம். எனவே, மானிடவியலை எவ்விடத்து வைத்துப்படித்தல் வேண்டும் என்ற கேள்விக்கு விடையாக இவ்வியல், சமூகம் திருந்தி வாழ வழி செய்யும் பொறுப்பேற்றவர்கள் அனைவரும், தாம் கற்கும் நூல்களின் முதலில் வைத்துப் படிக்க வேண்டிய ஒன்று எனின் மிகையாகாது.

மானிடவியல் ஒரு மனிதனின் தனி நாகரிகத்தையோ, பண்பாட்டையோ மட்டும் எடுத்து அறிக்கை வடிவில் கொடுக்கும் ஓர் அறிவியல் (*Science*) அன்று. பல நாகரிகங்

களை, பல பண்பாடுகளை, பல சமூக அமைப்புக்களைச் செவ்வனே கண்டு, அதன் மூலம் எவ்வெப்படி ஒரு சமூகம் தோன்றி, வளர்ந்து, மாறி வருகிறது என்பதையும், அம் மாற்றத்துக்குக் காரணமாக அமைந்தவை இன்னின்னவை என்பதையும் நன்கு தெரிவிக்க முடிந்த ஒரு நூல் என்பது விளங்கும். இவற்றைத் தெரிந்துகொள்வதன் மூலம் சமூகம் எத்திட்டத்தின்படி வளர்கிறது அல்லது மாறுகிறது அல்லது அழிகிறது என்பதைத் தெரிந்துகொள்ளலாம். கடவுளால் மனிதன் படைக்கப்பட்டான். ஆனால் மனிதனால் சமூகம் படைக்கப்பட்டது. எந்த ஒரு மனிதனின் எந்த ஒரு செயலும் தனக்குக் கடவுளால் கொடுக்கப்பட்ட சிந்தனைத் திறத்தின்படியும் செயல் திறத்தின்படியும்தான் (*mental as well as physical powers*) அமைகிறது எனினும், தன் சிந்தனைக்கு எட்டியதாக, தன் செயலுக்கு உட்பட்டதாகவே சமூகம் இருப்பதால் மனிதனின் முயற்சியே சமூகம் எனினும் பொருந்தும். ஒரு மனிதன் மட்டும் சமூகம் அன்று. ஆனால் அம்மனிதன் சமூகத்துக்கு அடிப்படை. சமூக மாற்றத்துக்கு அடிப்படையாக ஒரே மனிதன்கூடக் காரணமாகலாம். ரஷ்யாவைப் (*Russia*) பாருங்கள். சார் (*Czar*) ஆட்சியில் இருந்த சமூகம் கெட ஒரு கார்ல்மார்க்ஸ் (*Karl Marx*) காரணமாகவில்லையா? அரசியல் அமைப்புக்கும், சமூக அமைப்புக்குமே கூடப் பெரிதும் தொடர்புண்டு. இதற்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டு ரஷ்யா என்னலாம். ஒரு நாகரிகமோ, பண்பாடோ ஓரிரவில் கெட்டுவிடுவதில்லை. அரசியல் அமைப்பால் மாறிய சமூகங்களைப் பாருங்கள்; பெரு வெள்ளத்தால் அழிந்த நாகரிகங்களைப் பாருங்கள்; ஒரு நாகரிகத்தின் தொடர்பால் ஒரு வாழ்க்கை முறையே கெடுவதையும் பாருங்கள். அழிந்த நாகரிகமோ, மாறிய பண்பாடோ இன்றுள்ள நாகரிகத்தோடும் பண்பாட்டோடும் தொடர்பு ஏதும் இல்லாததாகவும் இல்லை. எனவே, அரசியல் அமைப்பு (*political system*), பெருவெள்ளம் (*great flood*), ஒரு நாகரிகத்தின் தொடர்பு (*the relation of a civilization*) எல்லாம் சமூக மாற்றத்தின் மூலம் வளர்ச்சியுற (*evolve*) காரணங்களாக அமைந்தனவே என்னலாம். இக் காரணங்களைச் சரித்திர (*history*) வடிவில் காண்கிறோம்.

எனவே, மானிடவியலுக்கும் சரித்திரத்துக்கும் பெரிதும் தொடர்புண்டு என்னலாம்.

மேற்சொன்னவற்றிலிருந்து மானிடவியலுக்கும் சமூகவியலுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு நன்கு விளங்கும். எனவே, சமூகவியலைச் சிறிது பார்ப்போம். அறிவியல் முறைப்படி ஒரு சமூகத்துக்குக் கோவையை அலகிட்டுப் பார்த்தலே முதல் வேலை. இவ்வேலைக்கு அடிப்படையாக உள்ளதே மானிடவியல். ஒரு சமூகத்தின் பல கூறுகளை நன்கு பார்ப்போமானுல் அச்சமூகத்து மேலமைப்புப் புலனுகும். இக்கூறுகளைக் காட்டுவதும் மானிடவியலே. ஆனுல் சமூகவியலுக்கும் மானிடவியலுக்கும் உதவுவது வரலாற்றுவியல் (*history*). சுருங்கச்சொல்லின், ஒரு சமூகத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அப்படியே கூறுவது வரலாற்றியலெனவும், அந்நிகழ்ச்சிகளில் நாகரிக, பண்பாட்டு மாற்றங்களைக் கண்டு, சமூக மாற்றத்தைக் காண்பது மானிடவியலெனவும், கடைசியாக எஞ்சிய மக்களின் நிலையைப் பற்றியதே சமூகவியலெனவும் சொல்லலாம். சமூகவியலின் பகுப்புக்களாகச் சமூகச் சிக்கல் நிலை, மனிதனின் வாழ்க்கைச் சூழ்நிலை, இனமும் பண்பாடும், கூட்டு நடத்தை, சமூக ஏற்பாடுகள், தனி மனிதனின் சமூகத் தொடர்பு, அதாவது சமூகத்தால் அவன் மாறுவதும் அவனுல் சமூகம் மாறுவதுமான சிலவற்றைக் கொள்ளலாம். இவையே சமூகப் பகுப்புக்கள் என்பதைவிட இவையும் இவைபோல்வனவும் சமூகவியல் என்றே சொல்லலாம்.

மேற்கு நாடுகளில் மானிடவியலைச் சமூகச் சிக்கல்களைத் தீர்க்க ஒரு வழிகாட்டியாக ஆக்கியுள்ளனர். வளர்ந்து வரும் நம் இந்திய நாட்டுக்கும் இம்மானிடவியல் பயன்தரும் ஒன்று எனின், இவ்வியலின் அறிக்கை உண்மைகள் (*facts of the report*) சீரிய முறையில் எடுக்கப்பட்டுப் பின் நாட்டின் நலன் நாடும் நல்லறிஞர்களால் நன்கு ஆயப்பட்டு, அப்படி ஆயப்பட்ட நுட்பங்களின் அடிப்படையில் சமூக நன்மாற்றத்துக்கு ஆவன செய்தல் நம் முதல் கடமை எனின் மிகப் பொருந்தும். மக்களுடன் பழகி, மக்களின் நலன் கருதி, மக்களுக்காகத் தம் வாழ்நாட்களைச்

செலவிடும் தலைவர்களும் தொண்டர்களும் அம்மக்களின் வழிப் பழக்கங்களையும் (*customs*), செயற்பாடுகளையும் (*practices*), கலைகளையும் (*arts*), மதங்களையும் (*religions*), நீதிகளையும் (*moralities*), சட்டங்களையும் (*laws*), விலக்கு களையும் (*taboos*), நடத்தை விதங்களையும் (*behaviour-patterns*) செவ்வனே தெரிந்து செயலாற்றின், நம் இந்திய நாடு பெரிதும் நலம்பெறும் என்பதில் ஐயம் இல்லை. சாதியை அடிப்படையாகக் கொண்ட நம் இந்திய வாழ்க்கை யைச் சாதியே அற்றுப்போன ஒரு வாழ்க்கையாக, எவரும் ஒன்றுகூடிச் செயலாற்றும் வாழ்க்கையாக மாற்ற வேண்டு மாயின் இச்சாதியின் அன்றைய நிலையையும் இன்றைய நிலை யையும் நன்கு தெரிந்துகொள்ள வேண்டுமல்லவா? அப்படி யேதான் இனமும் பண்பாடும் கூட. இவற்றைமட்டும் தெரிந்துகொண்டால் போதுமா? பழங்குடிகளின் அன்றைய வாழ்க்கையையும், இன்று அவர்களிடையே நிகழ்ந்து வரும் மாற்றங்களையும் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. கிராமங்களே இந்திய நாடு எனின் மிகையாகாது. கிராம மக்களே இந்திய நாட்டின் பெரும்பாலோராகின்றனர். இக் கிராமங்களையும் கிராம மக்களின் வாழ்க்கை முறைகளையும் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. மக்களின் மனப் போக்கே வாழ்க்கை முறையாகிறது. எனவே, இம்மனப் போக்கிற்கு ஓர் அடிப்படைக் காரணமாக இருந்து வரும் மதத்தையும் நன்கு தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. இப்படி ஒன்றுடன் ஒன்று தொடர்புகொண்ட பலவற்றை யும் இங்குத் தந்துள்ளோம். இவைமட்டுமே மானிடவியல் அன்று. இவ்வறிவியல் கடல் போன்றது, கடலினும் பெரிது என்றுகூடச் சொல்லலாம். ஆழமும் பரப்பும் மிகுந்தது மனிதனின் அறிவியல் (*science of man*). எனவே, இங்குக் கொடுக்கப்பட்டவை ஒரு சிலவே. எனினும், இவற்றைச் செவ்வனே படித்தல் பயன்தரும் ஒரு நன்முயற்சியாகும். இம் முயற்சி ஏட்டளவில் இருந்துவிடக்கூடாது. மானிட வியல் கற்கும் மாணவர்கள் தம் சொந்த அறிக்கைகளையும் ஆராய்ச்சிகளையும் அறிவியலறிஞன் (*scientist*) என்ற நினை வுடன் எவ்வித வேற்றுமையுணர்ச்சியுமில்லாமல் (*without bias*) செயல்படுத்த முனைதல் வேண்டும். இம் முனைவே நாட்டின் முன்னேற்றம்.

---

# பொருளடக்கம்



முடுகா குடும்பம், அட்டப்பாடி கேரளா
(உதவி: கண்காணிப்பாளர், அரசினர் பொருட்காட்சி சாலை, சென்னை)

# 1. சாதி

*(Caste)*

இந்தியாவில் ரிக்வேத காலம் தொட்டு இன்றும் இருந்து வருகிற ஒரு சமூகப் பாகுபாடே (*social division*) சாதி (*caste*) என்னலாம். மக்கள் ஒன்றுசேர்ந்து வாழும் தன்மையுடைய வர்களே என்றாலும் பயன் (*purpose*) காரணமாகவோ, பழக்க வழக்கங்கள் (*habits and practices*) காரணமாகவோ இவர்கள் பலப்பலத் தொகுப்புக் (*groups*)களாகப் பிரிந்தே வாழ்ந்து வரு கின்றனர். இது உலகில் எங்கும், எந்தக் காலத்திலும் காணக் கூடிய ஓர் உண்மை.

ஹிரோடட்டஸ் பழைய எகிப்தில் புரோகிதர், போர்வீரர், இடையர், பன்றி மேய்ப்பவர், வணிகர், எழுதுவோர், கப்ப லோட்டுபவர் என ஏழு பிரிவுகள் இருந்தன என்கிறார். இந்தக் காலத்தில் ஸிஸிலித் தீவில் செல்வந்தர், வணிகர், தொழிலாளர், உழவர் என்ற நான்கு பிரிவுகள் இருப்பதும், அமெரிக்க ஐக்கிய நாட்டில் நீக்ரோக்களும் வெள்ளையர்களும் இவர்கள் வழிவந்த வர்களும் (*descendants*) தனித் தனிப் பிரிவுகளாக இருந்து வாழ் வதும் நோக்கத்தகுவன. எனவே சாதிப்பிரிவு மக்களிடையே இயற்கையில் ஏற்பட்ட ஒன்று எனின் மிகையாகாது.

சாதி என்ற சொல் பல சந்தர்ப்பங்களில் பல பொருள்படப் பயன்படுத்தப்படினும், அடிப்படையில் அது பிரிவு ஒன்றையே குறிக்கிறது. மிகத் தொன்மையான சமூகத்தில் (*primitive society*) ஒருவரையொருவர் வேறுபடுத்தியதில்லை என்றும், இன்றுபோல் பிரிவுகள் பலவாக இருக்கவில்லை என்றும் மார்கன் (*Morgan*) போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால்

மாரட் (*Marett*) என்பவர் மிகத் தொன்மையான சமூகத்தில் கூட உயர்வு மனம் (*superiority*) இருந்தே வந்தது என்றும், இந்த உயர்வு மனம் வளர, ஒருவன் தகுதியும் வளர்ந்தது என்றும், ஒரு சமூகத்தில் ஒருவன் தகுதி பெற்று வாழ்கிறான் என்றால் அப்படி வாழும் மக்கள் ஒரு பிரிவாகின்றனர் என்றும், இவர்கள் தங்களை உயர்வாகவும் பிறரைத் தாழ்வாகவும் மதிக்கின்றனர் என்றும் கூறுகிறார்.

ஒருவன் பல காரணங்களால் தன்னை உயர்வாகக் கருதுகிறான். வீரம், செல்வம், அறிவு, அனுபவம் இவைபோல்வன பலவும் ஒருவனுக்குச் சமூகத்தில் உயர்வையும் தகுதியையும் தருகின்றன. எடுத்துக்காட்டாக, வருமானத்தால் உயர்ந்து விளங்கும் சில வகுப்பினரை நாம் காண்கின்றோம் அல்லவா? ஆஸ்திரேலிய தொல்சமூகங்களில் சில, வயதானவர்களையே தலைவர்களாக ஏற்கின்றன என்றும் அறிகின்றோம். இப்படிப் பல.

உடலமைப்பால் மட்டும் அல்லாமல் நோக்காலும் போக்காலும் (*interests and ways*) ஒன்றுபட்ட சிலர் ஒரு தொகுப்பாகின்றனர். இதனால் சமூகத்தில் படிவு (*stratification*) ஏற்படுகிறது. உயர்ந்தவரும் தாழ்ந்தவருமாக இரு வேறு தொகுப்புக்களாகப் பிரிகின்றனர். இவற்றிற்குத் தகுதித் தொகுப்புக்கள் (*status groups*) என்பது பெயர்., இத்தகுதித் தொகுப்புக்குள் நுழைவு எளிதில் கிட்டுமானால் இத்தொகுப்பை வகுப்பு என்னலாம். எளிதில் சேர முடியாத ஒரு தொகுப்பே சாதி (*caste*) என்றாகிறது.

எந்தக் காரணம் பற்றியும் ஒருவர் தம் தொகுப்பை விட்டு இன்னொரு தொகுப்புக்குள் நுழைய முடியாத கட்டுப்பாடு உடையதே சாதி. இத்தகைய அமைப்பு ஒருவரைப் பிறவியிலேயே ஒரு தொகுப்பில் சேர்ந்தவராக ஆக்கிவிடுகிறது. ஒரு சாதியில் பிறந்த ஒருவர் அந்தச் சாதித் தொழில் முறைகளையே, பழக்கங்களையே, கட்டுப்பாடுகளையே ஏற்க வேண்டியும் அமைந்து விடுகிறது. இந்த அமைப்புக்கு மாறாக, அல்லது இந்த அமைப்பை மீறி, அல்லது இந்த அமைப்பினின்றும் சிறிது

வழுவி நடப்பின், அப்படி நடப்பவர்கள் அந்தச் சாதியினின்றும் விலக்கப்படுகின்றனர்; சில நேரங்களில் அச்சாதியினும் தாழ்ந்த சாதிக்குத் தள்ளவும்படுகின்றனர்.

சாதி அமைப்பு (*caste system*) ஒருவரைத் தம் விருப்பம் இன்றியே பல கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்துகிறது. ஒரு சமூகம் பல வகுப்புக்களையும் (*classes*), சாதிகளையும் (*castes*) கொண்டிருப்பின், அது பல பிரிவுகளை ஒன்றன்மேல் ஒன்று கொண்டுள்ளதாக, படிவுறச் செய்ததாக அமைகிறது. எனவே இத்தகைய சமூகத்தைப் படிவுபட்ட சமூகம் (*stratified society*) என்கின்றோம். வகுப்புக்கள் அல்லது சாதிகளைத் தொல்சமூகங்களில்கூடக் காணலாம்.

உலகெங்கும் மக்களிடையே பிரிவுகள் என்னவோ இருக்கவே செய்கின்றன என்றாலும், இந்தியாவில் மட்டும் இந்தச் சாதிப் பிரிவு, தனிச் சிறப்பு (*special feature*) உடைய ஓர் அமைப்பாக இருந்து வருகிறது. இந்தியாவில் இது ஒரு சமூக ஏற்பாடாக (*social institution*) இந்து மதத்துடன் பிணைந்து இருக்கிறது. இச்சமூகமும் படிவுபட்ட சமூகமே. எனவேதான் ஒரு பிரிவு (*section*) இன்னொரு பிரிவைத் தகுதி (*status*)யின் மூலம் வேறுபடுத்துகிறது. இத்தகுதி இந்தியாவில் பிறவியிலேயே முடிவுசெய்யப்பட்டு, ஒருவர் சமூக (*social*), மத (*religious*), பொருளாதார (*economic*) வாழ்க்கையின் அடிப்படையாகவும் அமைந்துவிடுகிறது.

சாதிப் பாகுபாடு வேத காலத்தில் வகுப்புப் பாகுபாடாகவே இருந்தது என்னலாம். வேத காலத்தில் ஆரியர்கள் என்றும், தாசர்கள் என்றும் இரு பெரும் பிரிவுகள் மட்டுமே இருந்தன என்பதற்குப் போதிய சான்றுகள் உள்ளன. இப் பிரிவுகள், ஒன்றினின்றும் மற்றொன்று பல வகைகளில் வேறுபட்டே இருந்தன. மதம் வேறு, மொழியும் வேறு; நிறம் வேறு, உடலமைப்பும் வேறு. தாசர்கள் கருமையாகவும் தட்டை மூக்கர்களாகவும் இருந்தனர்; ஆண்குறி வழிபாட்டினர் (*Phallus worshippers*); ஆரியர்களுக்குப் புரியாத மொழி பேசினர். ஆரியர்கள் நெருப்பை வணங்கினர்; பலிகளும் (*sacrifices*)

தந்தனர். நீண்ட மூக்கும் செம்மை நிறமும் இவர்களிடம் காணப் பட்டன.

நாள் செல்லச் செல்ல ஆரியர்களிடம் வகுப்புப் பிரிவுகள் உண்டாயின. பின்னர் கலப்பால் இப்பிரிவுகள் ஒன்றை யொன்று நெருங்கின. வகுப்புப் பிரிவுகள் சாதிப் பிரிவுகளாக மாறின. இன்றுள்ள சாதிப்பிரிவு அன்று இல்லை யென்றாலும் இந்து மதத்தின் வளர்ச்சியாலும், இந்திய மக்களின் தொழில் முறைகளாலும், பழக்க வழக்கங்களாலும், கட்டுப்பாடுகளாலும் பல பிரிவுகள் ஏற்பட்டு இன்று ஏறத்தாழ 3000 சாதிகள் இந்தி யாவில் இருப்பனவாகத் தெரிகிறது. இத்தனை சாதிகளும் பிற்காலத்தில் தோன்றியவைகளே. சாதி அமைப்பு வேத காலத்தில் இருந்ததில்லை என்று ஸிம்மர் (*Zimmer*), வெபர் (*Weber*), மியூர் (*Muir*) ஆகியோர் சொல்லினும், கெல்ட்னர் (*Geldner*), ஓல்டன்பர்க் (*Oldenberg*), மாக்டொனெல் (*Macdonell*), கைட் (*Keith*) போன்றவர்கள் மாறுபட்ட கருத் தையே தெரிவிக்கின்றனர். வேதங்களில் தொன்மையான ரிக்வேதத்தில் புருஷசூக்த (*X. 90*) அடிகள் பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என்ற நான்கு பிரிவு களைப் புலப்படுத்துகின்றன. இதன்படி படைப்புக் கடவுளின் (*Supreme Being*) முகத்திலிருந்து பிராமணர்களும், தோள்களி லிருந்து க்ஷத்திரியர்களும், தொடைகளிலிருந்து வைசியர்களும், பாதங்களிலிருந்து சூத்திரர்களும் தோன்றினர். பிராமணர்கள் அறிவை வளர்த்து, மக்களுக்கு நன்னெறி புகட்டி, ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்று வாழ வேண்டியவர்களாயும், க்ஷத்தரியர்கள் நாட்டைக் காத்து, நாடுவதைத்தர முடிந்த ஒரு பொன்னிடமாக நாட்டை ஆட்சிபுரிய வேண்டியவர்களாயும், வைசியர்கள் நாட்டு மக்கள் வாழத் தேவைப்படும் பொருள்களைப் பெற்றுத் தரவேண்டியவர்களாயும், சூத்திரர்கள் இம்மூன்று பிரிவினர்களுக்கும் பணி புரிய வேண்டியவர்களாயும் இருந்தனர். எனவேதான் ஒவ்வொருவர் தொழிலுக்கும் முதன்மையாகத் தேவைப்படும் மனித உறுப்பை அவரவர் பிறப்பிடமாகச் சொன்னது. புருஷசூக்தம் பிற்காலத்தது என்றோ, ரிக்வேதத் துக்கு உரியது அன்று என்றோ கொள்பவர்கள் ரிக் வேதத்தி லேயே இன்னொரு பாவினை (*Hymn VIII. 53. 16-18*) ப்

பார்க்கலாம். இது பிராமண, க்ஷத்திரிய, வைசியர்கள் நன்னிலை யெய்த அசுவினிகளுக்கு விடுத்த வேண்டுகோள்.

பிராமண, க்ஷத்திரிய, வைசியர்கள் என்ற மூன்று பிரிவினர்களும் வழிவழி (*hereditary*) வந்தனர் என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லை. தொழில் காரணமாகவே இவர்களுக்கு இப்பெயர்கள் வந்தன என்று கூறலாம். ஓர் ஆரியன் பிராமணனாகவோ, க்ஷத்திரியனாகவோ, வைசியனாகவோ அவன் விருப்பப்படி ஒரு தொழில் செய்ய வாய்ப்பு இருந்தது. ஒரு தொழில் புரியும் ஒருவனின் மகன் அதே தொழில்தான் புரிய வேண்டும் என்ற கட்டாயம் ரிக்வேத காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. ரிக்வேதத்திலே கூட ஒரே இடத்தில் தவிர, வழி வருதல் (*Hereditary*) என்பது சிறப்பாகச் சொல்லப்படவில்லை. எனவே ரிக்வேத காலத்தில் மக்கள் தொழில் காரணமாகப் பிரிந்து வாழ்ந்தனரே தவிரப் பிறப்பின் காரணமாகப் பிரியவில்லை என்று கொள்ளலாம். வகுப்புக்கள் இருந்தன. ஆனால் இன்றுள்ள சாதிப் பிரிவுகள், வகுப்பு சாதியாக மாறவில்லை என்றால் பொருந்தும்.

காதக ஸம்ஹிதா (*XXX. 1*)வில் ஒரு கற்றறிந்த பிராமணனின் பிறப்பைத் தெரிந்துகொள்ள வேண்டிய தேவை இல்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே,

> 'அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
> செந்தண்மை பூண்டொழுகலான்.'

என்ற குறள் நோக்கற்பாலது.

சதபத பிராமணத்தில் (*X. 4·1·10*) ஸ்யாபர்ண ஸாயகாயனனின் புதல்வர்களுள் சிலர் பிராமணர்களாகவும், சிலர் க்ஷத்திரியர்களாகவும், சிலர் வைசியர்களாகவும் ஆயினர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. வேத பாராயணத்துக்குப் பிராமணர்களே உரியவர்கள் என்ற கருத்தும்கூட வேத காலத்தது அன்று; ஸ்மிருதிகள் காலத்ததே. தரும சாஸ்திரங்களில் (*C. 500 B.C.*) ஒரு பிராமணன், தேவையிருப்பின் ஒரு க்ஷத்திரியனிடம் பாடம் கற்கலாம் என்றும் இருக்கிறது.

அவர்களுடைய போதனைகளைப் பின்பற்றும் மக்கள் பிரிவை உண்டாக்கி, அப்பிரிவின் மதம் இந்து மதத்தினின்றும் மாறுபடச் செய்த கௌதம புத்தர், மகாவீரர் போன்றவர்களும் க்ஷத்திரிய தத்துவ ஞானிகளே. எனவே செய்தொழில் கட்டாயமோ (*rigidity of profession*), வழிவழி வருதலோ (*heredity*) வேத காலத்தில் இல்லை. ஆரியர்கள் சூத்திரப் பெண்களை மணக்க மனம் ஒப்பாதவர்களாயில்லை. பல பிரிவினர்களும் ஒன்றுசேர்ந்து உண்டனர். சூத்திரர்கள் சமைத்த அல்லது தொட்ட உணவை மட்டுமே, அதுகூட தெய்வத்துக்கென்றால் மட்டுமே, தவிர்த்தனர். சூத்திரங்களில் தெய்வத்துக்கென்றாலும்கூடச் சூத்திரர்கள் முகமயிர் கழித்து, குளித்துப் பின்னர் சமைத்த உணவை ஏற்றனர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எனவே இந்த நான்கு பிரிவினர்களும் ஒருவரையொருவர் வெறுக்கவோ, தள்ளவோ செய்யவில்லை என்பது தெரிகிறது.

சாதி அமைப்புக்கு அடிப்படை நான்கு வருணங்களே. வருணம் என்றால் நிறம் அல்லது வண்ணம் என்று பொருள். இச்சொல் இனப் பொருள்சிறப்பு (*racial significance*) உடையது. ஆரியர் வருகைக்கு முன், இந்தியாவில் இருந்த மக்களின் நிற வேறுபாட்டால் ஆரியர்கள் தங்களை ஒரு வருணத்துக்கு உரியவர்களாய்க் கொண்டிருக்கலாம். அப்படியென்றால், ஆரிய வருணம் என்றும், தாச வருணம் என்றும் இரண்டு வருணங்களே இருந்திருக்க வேண்டும். ஆனால் ஆரியர்களுக்குள்ளேயே நான்கு பிரிவுகள் உண்டாகி, ஒவ்வொன்று ஒவ்வொரு வருணமாகக் கருதப்பட்டது எப்படி? வருணம் என்ற சொல்லை ஒரு பிரிவினரை வருணிக்க வந்த சொல்லாக எடுத்துக்கொண்டோமானால் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு பிரிவுகளும் நால்வேறு தொழில்களை விளக்கி நிற்கும் நான்கு வருணங்களாகக் கருதலாம்.

சாதித் தகுதி (*caste status*) என்பது ஒருவர் செய்யும் தொழிலின் புனிதத் தன்மையைப் பொருத்து எழுந்த ஒன்று. வேதம் ஓதுதல் போன்ற தொழிலைப் புனிதமாகவும்,

தோலுரித்தல் போன்ற தொழிலைப் புனிதமற்றதாகவும் கருதினர். இக்கருத்து வளர வளரத் தகுதியில் ஏற்றத் தாழ்வுகளும் வளர்ந்தன. பல உட்பிரிவுகள் உண்டாகி ஒவ்வொன்றும் ஒரு சாதி என்றாயிற்று. ஒரு சாதி இன்னொரு சாதியை நெருங்காமல் வாழத்தொடங்கிற்று. ஆயிரம் இரண்டாயிரம் என்று சிறுசிறு பிரிவுகள் ஏற்பட்டு, ஒவ்வொரு பிரிவும் தனக்கென்ற பழக்கவழக்கங்களையும், வாழ்க்கை முறையையும் பின்பற்றலாயிற்று.

தன் சாதியிலேயே மணம் செய்துகொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாடும், தாழ்ந்த சாதியினர் சமைத்த உணவை அதைவிட உயர்ந்த சாதியினர் உண்ணக்கூடாது என்ற கட்டுப்பாடும் ஒருவன் ஒரு சாதியைச் சேர்ந்தவனாக இருக்க முக்கியத் தகுதிகளாக ஏற்பட்டன. சாதிக்குச் சாதி வேறுபாடு மிகுந்தது. தீட்டு, தீண்டாமை, நெருங்காமை, புண்ணியாக வசனம், பிராயச்சித்தம், டோட்டமிசம் (*totemism*), விலக்கு (*taboo*) எல்லாம் வளர வளரச் சாதிக் கட்டுப்பாடு தீவிரமாயிற்று. இதன் பயனாக இன்று ஏறத்தாழ அறுபது மிலியன் மக்கள் தாழ்த்தப் பட்ட சாதியினர் (*depressed castes*)ராக இந்தியாவில் வாழ்கின்றனர். மிக மிகப் பாதிக்கப்பட்டவர்கள் தீண்டப்படாதவர்கள் என்ற பிரிவினரே. இவர்கள் கைப்பட்டாலே புனிதம் கெட்டுவிடும் என்று கருதலாயினர். தென்னிந்தியாவில் பார்க்கப்படாதவர்கள் (*unseeables*) என்றுகூட ஒரு பிரிவினர் இருப்பதாகத் தெரிகிறது. இவர்களைப் பார்த்த மாத்திரத்திலேயே இரு பிறப்பாளரின் (*twice born*) புனிதம் கெட்டுவிடுகிறதாம். தீண்டப்படாதவர்கள் பொதுவிடங்களைப் பயன்படுத்தக் கூடாது என்ற கட்டுப்பாடு இருந்து வந்தது. தீண்டாமை ஒழிப்புச் சட்டம் வந்த பின்னரே இந்நிலைமை மாறி வருகிறது.

வேதகாலத்து ஆரியர்களுள் ஒரு வருணத்தார் மற்றொரு வருணத்தாருடன் திருமணத் தொடர்பு கொண்டனர் என்பதற்கு அகத்தியர். உலோபாமுத்திரை என்ற க்ஷத்திரியப் பெண்ணை மணந்ததும், இதுபோன்ற பலவும் சான்றுகளாக அமைந்துள்ளன. ரிக்வேதத்தில் புருஷ சூக்தத்தில் தவிரச் சூத்திரர்களைப் பற்றி வேறெவ்விடத்திலும் சொல்லப்படவில்லை என்பதனாலேயே

அந்த வர்ணம் இருந்ததில்லை என்று கொள்ளக்கூடாது. இந்த நான்காவது வருணத்தைச் சேர்ந்த பெண்களையும்கூட மேல் மூன்று வருணத்தாரும் திருமணம் செய்துகொள்ள ஒப்பியவர்களே. பிற்காலத்தில் வகுப்பு, சாதியாக மாறி, விலக்குகள் (*taboos*) தீவிரமாகக் கடைப்பிடிக்கப்பட்டு, ஒரு வருணத்தார் இன்னொரு வருணத்தாரினின்றும் வேறுபட்டவர்களாய்ப் பிரிந்தனர்.

சாதி எப்படிப் பிறந்தது ? ரிக்வேத காலத்திலேயே சாதிக் கட்டுப்பாடுகள் இருந்தனவா எனின், மத்திய ஆசியாவினின்றும் பாரசீகத்துக்கும் இந்தியாவுக்கும் குடிபெயர்ந்த (*migrated*) ஆரியர்களின் சாதிஅமைப்பு ஏறத்தாழ ஒன்ருகவே இருந்ததாகத் தெரிகிறது. அவெஸ்தியன் சாஸ்திரங்களில் (*Avestian Literature*) புரோகிதர், போர் வீரர், வேளாளர் என்ற பிரிவுகள் இருந்தன என்று இருப்பதால் சாதிப் பிரிவு ஆரியர்களிடம் எங்கும் காணப்பட்டது என்னலாம். இந்தச் சாதிப் பிரிவு சாதிப் பிளவாகக் காணப்படவில்லை. வகுப்பு என்ற பொருளில் சாதி காணப்பட்டது என்றே சொல்லலாம். இரானில் அதர்வர் (*Atharvas*), ரதெஸ்தர் (*Rathestas*), வஸ்திரிய ஸுயந்தர் (*Vastrya Fshovyanta*), விதியர் (*Huiti*) என்ற நான்கு பகுப்பினர் இந்தியாவில் உள்ள நான்கு வருணத்தினர் போல அமைந்திருத்தல் நோக்கவேண்டிய ஒன்று. தீவிர சாதி அமைப்பு (*rigidiy of caste system*) ரிக்வேத காலத்துக்குப் பின்னரே வளரத் தொடங்கியது. தெரிந்தோ தெரியாமலோ மேனுட்டு எழுத்தாளர்கள் சாதி தோன்றிய விதத்தை இன வேறுபாட்டுடன் இணைத்து எழுதினர். வீலெ (*Weala*) என்பவர் கருமை நிறமுள்ள தாசர்கள், செம்மை (*fair*) நிறமுள்ள ஆரியர்களுடன் கலந்துவிடக் கூடாது என்றே இந்தச் சாதி அமைப்பை உண்டாகிக்கினர் என்கிருர்.

சாதி எப்படித் தோன்றியது என்னும் கேள்விக்கு, இப்படித் தோன்றியிருக்கலாம் என்று கூறலாமே தவிர, இப்படித்தான் தோன்றியது என்று திட்டமாகக் கூற முடியாது. அப்படித் திட்டமாகச் சொல்லப் போதிய சான்றுகள் இல்லை. டென்சில் இபெட்ஸன் (*Denzil Ibetson*) என்பவர் சாதிப் பிரிவுகள்

பழங்குடிகள் தோற்றுவித்த பகுப்புக்களே என்கிறார். சாதிகளின் தோற்றம், தொழில் வேறுபாட்டால் உண்டானதே என்றும், வழி வழி ஒரு தொழிலைச் செய்த ஒரு தொகுப்பினர் ஒரு சாதியினராய்க் கருதப்பட்டனர் என்றும் நெஸ்பீல்டு (*Nesfield*) கூறுகிறார். கோத்திரங்களால் சாதிகள் உண்டாயின என்பது சேனரின் (*M. Senart*) கருத்து. சாதிகள் வருணங்களாலும் அனுலோம மணத்தாலும் ஏற்பட்டன என்னும் ரிஸ்லி (*Risley*) சொல்வது. இப்படி எத்தனை சாதிகள் இருக்கின்றனவோ அத்தனை கருத்துக்கள் நிலவுகின்றன.

பிரின்டன் என்பவர் உயர்ந்த பிராமணர்கள் நடுத்தர உயரம், முட்டை வடிவ முகம், ஒழுங்கு கெடாத அமைப்பு, முரண்பாடில்லாத உடற்கட்டு (*symmetrical body*), நீண்ட தலை (*dolicocephalic*), மாம்பழ நிறம், நீர்த்த பழுப்பு நிறக்கண்கள் (*hazel eyes*), அலைபோன்ற மயிர் அமைப்பு உடையவர்கள் என்கிறார். இக்கருத்தைத் தொடர்ந்து டபிள்யூ. ஜே. தாமஸ் (*W. J. Thomas*) உடலமைப்பால் வேறுபட்ட மக்கள் பண்பாடுகளிலும் (*cultures*) வேறுபடுகின்றனர் என்றும், இப்படி ஏற்படும் வேறுபாடுகளுள் உயர்வு தாழ்வு எப்படியும் காணப்படுகின்றன என்றும், இவ்வுயர்வு தாழ்வே சாதி வேறுபாட்டுக்குக் காரணம் என்றும் சொல்கிறார். பலதிறப்பட்ட மக்களிடையே இன வேறுபாடுகளால் சாதி ஏற்பட்டிருக்கலாம் என்கிறார் கில்லின். மாக் ஈவர் (*Mac Iver*) கூடச் சாதி அமைப்புக்குப் பிறப்பிடம் இனம் என்பதை ஒப்புக்கொள்கிறார். எந்தக் காரணத்தாலோ ஒரு தொகுப்பு ஏற்படுமானால், அதுவே இந்தியாவில் ஒரு சாதியை உண்டாக்கப் போதுமானது என்று பேராசிரியர் கிரீபர் (*Prof. Kroeber*) சொல்வது ஒருவாறு பொருத்தமே.[1]

எல்லா நாடுகளிலும் ஆரியர்களின் பொது அமைப்பாகச் சாதி உண்டாகி இருந்தாலும், இந்தியாவில் மட்டும் அது வேரூன்றி வளர்ந்ததற்குக் காரணம் இவ்வமைப்பை எதிர்த்துப் பழங்குடிமக்களின் வேறுபாடு (*tribal differences*)களைக் களைந்து ஒரு தன்மைத்தான சட்டங்களும் (*uniform laws*), வழக்குகளும்

1. Whatever sets off a group in any way may be sufficient to make it a caste in India.—Prof. Kroeber.

நிலவுமாறு செய்ய ஒரு நல்ல அரசியல் அமையப்பெறுததே என்கிருர் என். கே. டட்.

சாதியின் தோற்றத்துக்கு இனம் ஒரு காரணம் என்ருலும், அதாவது, இனம் சாதியமைப்புக்குப் பிறப்பிடம் என்று கொண்டாலும், அதன் வளர்ச்சிக்கு அது காரணமாக இருக்க முடியாது என்றே கூறலாம். அதன் வளர்ச்சிக்கு மக்களின் போக்கு ஒருதலைக் காரணமாம். தூய்மையற்றதை என்றும், எவரும் வெறுக்கமட்டும் செய்யவில்லை; அப்பாற்படுத்தியும் வைத்தனர். ஆரியர்கள் இந்தியாவிற்குள் நுழைந்த பிறகு இவர்கள் வருகைக்கு முன் இந்தியாவில் குடியிருந்த மக்களுடன் திருமண உறவு கொள்ளாமலும், இவர்களிடையே நான்கு பிரிவுகளை உண்டாக்கிக்கொண்டும், ஒரு சமூக ஏற்பாட்டை அமைத்து, அதன்படி நடந்தனர் என்று தெரிந்துகொண்டோம் அல்லவா? இந்த நான்கு பிரிவினர்களுள்ளும் ஒரு பிரிவினர் இன்னொரு பிரிவினரைவிடச் சற்று உயர்வால் குறைந்தே (*inferior*) இருந்தனர். இதற்குக் காரணம் தொழில் என்றே ஒருவாறு புலப்படுகிறது. நான்கு வருணத்தார்களின் தொழில்களும் வேறுவேறு. பிராமணர் அறிவை வளர்த்து, ஒழுக்கம் காத்து, மற்றவர்க்குப் புத்தி புகட்டினர். எனவே அவர்கள் உயர்ந்தவராய்க் கருதப்பட்டனர். அதற்கு அடுத்தபடியாக நாட்டைக் காத்து மக்கள் சீருடன் வாழச் செய்யவேண்டிய பொறுப்பை ஏற்ற க்ஷத்திரியர்கள் சற்று நிறம் மாறியவர்களாய் இரண்டாவது வருணத்தாராயினர். வைசியர்கள் வியாபாரிகள்; சூத்திரர்கள் பணி புரிபவர்கள். இவர்கள் செய்யும் தொழில் தூய்மையற்றவை என்பதனுல் இவர்களைத் தாழ்ந்த வருணத்தவராய்க் கருதினர். இவர்களுள்ளும் ஒரு தொழில் மற்றொரு தொழிலைவிடத் தூய்மை குறைந்ததாக இருப்பின் தூய்மை குறைந்த தொழிலைச் செய்பவர்கள் தாழ்ந்தவகள் ஆனுர்கள். இப்படிஇந்த நான்கு பிரிவுகளுக்கும் உட்படாதவர்கள் மிலேச்சர்களாய்க் கருதப்பட்டனர். தூய்மை காரணமாகவே, ஒரு தொகுப்பினர் மற்றொரு தொகுப்பினரைச் சந்தித்துப் பேச வேண்டுமானுல், சில அடிகள் எட்ட இருந்தே பேச வேண்டும் என்று ஆயிற்று. எடுத்துக்காட்டாக, மலையாளத்தில் உயர்ந்த சாதியினரான நம்பூதிரிப் பிராமணர்களுக்கு அடுத்த சாதியினரான நாயர்கள் 7 அடி தொலை

விலும், இவர்களுக்கு அடுத்த தீயர் 32 அடி தொலைவிலும், இவர்களுக்கு அடுத்த செருமர் 64 அடி தொலைவிலும், நாயாடிகள் 128 அடி தொலைவிலும் இருக்க வேண்டும் என்று இருந்ததாம். இதனால் ஒரு பிரிவினர் மற்றொரு பிரிவினரை நெருங்கும்போது அப்பிரிவினர் செய்யும் தொழிலின் தூய்மையைக் காரணமாகக் கொண்டு, 'தொட்டால் கெடும்' என்று நினைந்து, நெருங்காமல் நின்றனர் என்பது தெரிகிறது. சாதி வளர்ச்சிக்கு இந்தத் தூய்மை உணர்ச்சிமட்டும் காரணம் அன்று. மக்களின் தெய்வ வழிபாடு கூட ஒரு காரணமே என்னலாம். தெய்வத்தை எத்தனையோ முறைகளில் வழிபட்டனர். அத்தனை முறைகளும் பல பிரிவுகளை உண்டாக்க ஏதுவாயின. பழங்கால மூடநம்பிக்கை (*primitive superstitions*)களும், கண்கட்டு (*magic*)களில் இருந்த நம்பிக்கையும் சாதி வளரத் துணைபுரிந்தன.

ஸர் ஹெர்பர்ட் ரிஸ்லி (*Sir Herbert Risley*) சாதி அமைப்புக் (*caste system*)கும் இன வேறுபாட்டுக் (*racial difference*)கும் உள்ள தொடர்பை விளக்குவது கவனிக்க வேண்டிய ஒன்று. சரித்திர காலத்துக்கு முன் பாரசீகச் சமூகம் நான்கு பிரிவுகள் கொண்டதாகவும், இந்திய ஆரியர்கள் அப் பிரிவுகளையே தாம் குடியேறிய நாட்டில் நிலைக்கச் செய்யப் பாடுபட்டதாகவும், எனவே அவர்கள் சாதி வளர வழி வகுத்ததாகவும் கொள்கிறார். அகமணம் (*endogamy*) என்பது சாதி அமைப்பின் அடிப்படைச் சிறப்பு (*fundamental trait*) வாய்ந்தது. ஆனால் பாரசீகத்திலோ அது இல்லை. ஏனென்றால், அந்நாட்டு மக்கள் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள்; ஒரே பொதுப் பண்பாடு (*common culture*) உடையவர்கள். வந்தவர்களுக்கும் இருந்தவர்களுக்கும் உள்ள இன வேறுபாட்டை நோக்கும்பொழுது வளர்ப் (*breed*)பின் முக்கியத்துவம் தென்படாமல் இல்லை. இரு வேறு வர்க்கங்கள் ஒன்றியிருக்கவேண்டிய தேவை ஏற்பட்டபொழுது கலப்பு மணம் அனுமதிக்கப்பட்டது. அதுகூடத் தேவை எந்த அளவோ, அந்த அளவுக்கு மட்டுமே. 1931-ஆம் ஆண்டு இந்தியக் குடிக்கணக்கு அறிக்கை (*Report on the Census of India 1931*)யில் ஜே. ஹெச். ஹட்டன் என்பவர் ஆரியர்களுக்குப் எழுந்த சாதிக்கோட்பாட்டை (*caste theory*) எதிர்த்தார். திராவிடர் காலத்துக்கு முன் (*Pre-Dravidian*) உணவுக்கும்

திருமணத்துக்கும் விதிக்கப்பட்ட விலக்கு (*taboo*), மாற்றாரின் (*strangers*) தீய மனம் கண்டு வெகுண்டதன் பயனே யாகும். அஸ்ஸாமில் உள்ள நாகர் (*Nagas*)களைப் பார்க்கும்பொழுது, பழங்காலத்தில் இருந்துவந்த விலக்கு (*taboo*), தொழிலை அடிப்படையாய்க்கொண்ட சமூகப் பிரிவுகள் (*occupational divisions*), பழக்கமில்லாத எந்த ஒரு புதுமை (*strange and unfamiliar*)யிடத்தும் இருந்துவந்த கண்மூடித் தனமான மதிப்பு (*superstitious regard*) இவையே இந்தியச் சமூகத்தை உருவாக்கி இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

தீண்டாமை என்பது தென்னிந்தியாவில் தீவிரமாக உருவாகி நிலவிய ஒரு கட்டுப்பாடு. ஒரு தொகுப்பினர் இன்னொரு தொகுப்பினரிடம் நெருங்கிப் பழகுவது தடுக்கப்பட்டது. ஒரு தொகுப்பினரின் வாழ்க்கை முறையோ, பழக்கவழக்கமோ இன்னொரு தொகுப்பினரின் வாழ்க்கை முறையுடனும் பழக்க வழக்கத்துடனும் கலவாமல் இருக்க முடிந்தது. இப்படித் தனித்து வாழ்ந்ததால் ஒருவர் வாழ்க்கையை இன்னொருவர் பார்த்துப் பொறுமைப்படவோ. அப்படி வாழ ஆசைப்படவோ முடியாமல் இருந்தது. அப்ப்டி இருந்ததால் அவரவர் தொழிலை அவரவர் சரிவரச் செய்ய முடிந்தது.

தீண்டாமை என்பதற்கு ஒரு தொகுப்பினர் மட்டுமே இன்னொரு தொகுப்பினரை நெருங்காமல் இருப்பது என்பது பொருள் அன்று. ஒரு சேரிக்குள் ஒரு பிராமணன் புகக்கூடாது என்பது மட்டுமன்று கட்டுப்பாடு. அப்படி ஒரு பிராமணன் புகுவானாயின், அச்சேரி மக்களும் அச்செயலைக் கண்டித்து நடந்தனர். எனவே தீண்டாமை என்பது இருவர்க்கும் பொது என்று சிலர் கருதுகின்றனர். இங்கே ஒன்று நோக்கற்பாலது. வீதி வழியே சென்றுகொண்டிருக்கும் இருவர் ஒருவரை யொருவர் மோதாமல் செல்ல வேண்டுமென்றால், ஒருவர் மட்டும் இன்னொருவரைப் பார்த்து விலகினால் போதாது. இன்னொருவரும் இவரைப் பார்த்து விலக வேண்டும்; அல்லது விலகுகிற வர்க்கு வழிவிட வேண்டும். அப்படியன்றித் தம்மிச்சைப்படி ஒருவர் செல்லும் இடத்துக்கு இன்னொருவரும் சென்றால் மோதல் ஏற்படவே செய்யும். இப்படித்தான் ஒரு சமூகத்தில் கூட

ஒருவர் இன்னொருவரை நெருங்காமல் இருந்து அவரவர் தொழிலைச் செய்ய முனைந்தனர். அதாவது கல்வியற்று, வாழ்க்கை வசதிகளும் நிரம்பப் பெறுமல், சமூகத்தில் அவர் களுக்கென்று கொடுக்கப்பட்ட தொழிலைச் செவ்வனே செய்து வந்த ஒரு தொகுப்பினர், அவர்களை விட உயர்ந்து வாழும் தொகுப்பினரைக் காணும் பொழுது எப்படியும் மனம் மாறத் தான் செய்யும். மனமாற்றம் ஏற்பட்ட மாத்திரத்திலேயே தொழில் கெடும்; திட்டம் கெடும்; கட்டுப்பாடு கெடும்; சமூக அமைப்பே கெட்டுவிடும். எனவேதான் இவர்களைத் தாழ்த்தப் பட்டோர் என்கிறோம். அப்படி அவர்கள் தாழ்த்தப்பட்டதற்குக் காரணம் தனி ஒருவரின் அல்லது தனி ஒரு தொகுப்பினரின் தன்னலம் அன்று; ஆனல் அதற்கு மாருக ஒரு சமுதாயத்தின் பொதுநலம் (*common interest of a society*) என்றே கூறலாம். இவ்விதச் சமூக முறை (*social order*) சரியானதா, தவருனதா என்பதை நாம் இங்கே ஆய முடியாது. சரியோ தவருே இப்படி ஓர் அமைப்பு இந்த ஒரு காரணத்தால் நிலவியது அல்லது நிலவி வருகிறது என்றே சொல்லலாம்.

ஏறத்தாழ ஐம்பது அல்லது அறுபது கோடி மக்கள் தாழ்த்தப்பட்டவர்களாய் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் நிலையை உயர்த்த வேண்டி அரசியலார் இவர்களுக்குப் பலவாருக உதவி வருகின்றனர்.

இந்தியாவில் சாதி அமைப்பு, பிராமணீயத்துடன் (*Brahmanism*), அல்லது முதல் மூன்று வருணங்களுடன் பொருத்திப் பார்க்கவேண்டிய ஒன்று, நாளடைவில் சில சமூகத் தொகுப்புக்களுக்குச் சில உரிமைகளை வழங்கி, அத்தொகுப்புக் களுக்கு இடம் கொடுக்க வேண்டியதாயிற்று. உயர்ந்த சாதியினர், அதாவது, முதல் மூன்று வருணங்களைச் சார்ந்தவர் களை உடலாலும், மனத்தாலும், இனத்தாலும், பண்பாட்டா லும் தூய்மையானவர்கள் என்றும், 'தூய்மையற்றவர்கள்' என்றும் பகுக்கவும் வேண்டியதாயிற்று. ஆனல் அவ்வமைப்பைச் சேர்ந்த பலதரப்பட்ட சமூகத் தொகுப்புக்கள் உள்ளூர் மக்களைக் (*indegenous population*) கொண்டு அமைந்தனவே; அதாவது திராவிடர்களுக்கு முற்பட்டவர் (*Pre-Dravidian*)களும் மத்திய

தரையை ஒட்டியவர் (*Proto-mediterranean*)களும், ஆஸ்ட்ரலாயிட்டு (*Australoids*)களும், திராவிடர்களும் பண்பாட்டில் ஏதோ ஒரு வித ஒருமைப்பாடு (*uniformity*) கொண்டிருப்பினும், கூர்ந்து நோக்கினுல் அவர்களிடையேயும் அடிப்படை வேறுபாடுகளைக் காணலாம். சாதி ஏற்பாட்டில் (*hierarchy of easte*) தொழில் ஏற்றத்தாழ்வு காணப்படுவதாக நெஸ்பீல்டு (*Nesfield*) சொல்லி இருக்கிருர். இரத்தக் கலப்பு ஏற்படாத தொகுப்பே தகுதி பெற்ற சாதியாகிறது. இப்படிப் பார்த்தால் பிராமணர்களே இனக்கலப்பு மிகையாகாமல் தங்களைக் காத்து வந்திருக்கின்றனர். பழங்குடி மக்களின் தொகுப்புக்கள் (*tribal groups*) கலப்பு மிகையகாதவையே. ஆனுல் சமூகத்தில் இவை மிகக் கீழான நிலையைப் பெற்றவை. இவை இரண்டுக்குமிடையே அனேக தொகுப்புக்கள் உள்ளன. இவை அத்தனையும் இந்துக்களின் சாதி அமைப்பே என்று தவருக வழங்கி வருகிறது.

நல்ல வாழ்க்கை வசதிகளும், நிலபுலங்களும், மேம்பட்ட உரிமை (*superior rights*)களும், உடலுழைப்பு (*manual labour*) இல்லாமையும் உயர்ந்த சாதியின் தகுதியைத் தருகின்றன. குடிமையும் (*Peasant*), விவசாயமும் ஒரு தொகுதியினர்க்கு இடைநிலையைத் (*middle rank*) தருகின்றன. மிகத் தாழ்ந்த நிலையில் இருப்பவர்கள் நிலத்தொழிலாளர் (*field labourers*)களே. ஒரு சமூகத்தின் பொருளாதார உயர்வுக்குப் பயிர்த்தொழிலே அடிப்படை. எனவேதான் இத்தொழில் மற்றத் தொழில்களைவிடச் சிறந்ததாக மதிக்கப்படுகிறது.

தசப்ராமண ஜாதகத்தில் பத்து வகைப் பிராமணர்கள் சொல்லப்படுகிருர்கள். மருத்துவர், தூதுவர், வரி சேமிப்பவர், (*physician. messenger, tax-collector*), விறகு வெட்டி, வணிகர், வேளாளர், (*wood-cutter, tradesman, cultivator*), இடையர் (*shepherd*), ஆடு மாடு வெட்டுபவர் (*butcher*), படைத்துறைக் காப்பாளர் (*military guard*), வேட்டுவர் (*hunter*) எனப் பத்துவகையினர்.

மனுவும்கூடப் பிராமணர்கள், சமூக ஏணியில் எவ்வப் படிகளில் இருந்தனர் என்பதை விளக்குகிருர். பிராமணர்களில்

சிலர் அவர்கள் செய்யும் தொழில் காரணமாக அவ்வளவாக மதிக்கப்படுவதில்லை. பல ஏழைப் பிராமணர்கள் கீழ்ச்சாதிக் காரர்களுக்குப் புரோகிதர்களாகவும், சாவுச் சடங்குகளை நிறை வேற்றி வைப்பவர்களாகவும் இருப்பதால் அவர்கள் பிற பிராமணர்களால் ஒருபடி தாழ்த்தப்பட்டே இருக்கின்றனர். அப்படிப்பட்டவர்களை வட்டார வழக்கில் பஞ்சாங்கக்காரர்கள் என்று இழிவாகச் சொல்வதும் உண்டு.

சாதிக்குச் சாதி விலகி இருக்க முனைந்தனர். தீண்டா மையுடன் நெருங்காமை (*unapproachability*) வளர்ந்தது. நெருங்காமை எல்லாச் சாதிக்காரர்களிடையேயும் காணப்பட்டது. நெருங்குவதாலேயே ஒரு தொகுப்பினரின் தூய்மை கெட்டு விடும் என்று எண்ணினர். எனவேதான் ஒரு சாதிக்காரர் இன்னொரு சாதிக்காரருடன் நெருங்குவதென்றால் அந்தச் சாதிக்குத் தகுந்தபடி இத்தனை அடி தூரத்தில் நிற்கவேண்டும் என்ற கட்டுப்பாடு உண்டாயிற்று.

சென்னையில் பறையர் தொகுப்பைச் சேர்ந்தவர்கள் மேல் சாதிக்காரர்களை 64 அடித் தொலைவுக்குள் நெருங்கக் கூடாதென்ற கட்டுப்பாடு ஒரு காலத்தில் இருந்தது. நாயர் தொகுப்பைச் சேர்ந் தவர்கள் மேல் சாதிக்காரர்களைத் தொட்டமாத்திரத்தில் தூய்மை கெட்டுவிடுகிறது என்றும், கம்மாளர், கொத்தர், தச்சர், கருமார், தோல் வேலை செய்பவர் முதலியோர் 24 அடிக்கு உள்வரின் தூய்மைகெடுகிறது என்றும், சாணார் அல்லது கள் இறக்குபவர் (*toddy drawers*)களுக்கு, 36 அடிகளும், பயிர்த்தொழிலாளர் களுக்கு 28 அடிகளும், இப்படிப் பல சாதிக்காரர்களுக்கும் தூர அளவு கொடுக்கப்பட்டது. இன்னும் ஒரு பிராமணன் இன் னொரு பிராமணனிடமிருந்து நன்கொடையோ பரிசோ பெற்றால் அதை உயர்த்திய குரலால் தெரியப்படுத்திக் கொள்ளவேண்டும் என்றும், அதையே ஒரு பிராமணன் ஒரு க்ஷத்திரியனிடம் பெற்றால் மெல்லிய குரலாலும், ஒரு வைசியனிடம் பெற்றால் குன்றிய குரலாலும் (*whisper*), சூத்திரனிடமிருந்து பெற்றால் குரல் மூலம் இன்றி மனத்துக்குள்ளேயேயும் தெரியப்படுத்திக் கொள்ள (*Acknowledge*) வேண்டும் என்ற நியதிகள் இருந்தன என்பது தெரிகிறது.

இடம், வழக்கு, மதம், தொழில், இப்படிப் பலவற்றின் மூலம் சாதி வளர்ந்தாலும் பணம் பதவி மூலம் இரு வேறு சாதியினர் ஒன்றுபடவும் செய்கின்றனர். ஒருவரையொருவர் பிரிக்கும் சாதி வெறியில் மக்களுக்கு ஏற்பட்டுவரும் தீவிர வெறுப்புணர்ச்சி இதை வளர முடியாமல் தடுத்தும் வருகிறது.

நாகரிகம் வளர வளர, கல்வி உயர உயர, பலர் ஒன்று சேர்ந்து நாட்டின் வளர்ச்சிக்குப் பாடுபடப்பட, இவ்வுணர்ச்சி பட்டணங்களில் குன்றியே வருகிறது. ஆனால் இந்தச் சாதி அமைப்பு முஸ்லிம்களையும் கிறித்துவர்களையும்கூட விடவில்லை. ஏ. கே. நாஸ்மல் கரீம் என்பவர் 'இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் மாறும் சமுதாயம்' என்ற புத்தகத்தில் இஸ்லாமியர் எப்படி இந்துக்களைப் பார்த்து, அவர்களும் சயத் (*Sayed*) முகல் (*Mughal*), ஷேக் (*Sheikh*), பதான் (*Pathan*) என்னும் நால்வகைப் பிரிவுகளை உண்டாக்கினர் என்று எழுதியுள்ளார். கதோலிக்கர்கள் சாதியை ஒப்புக்கொள்ளவே செய்கிறார்கள் என்பது ஜே. ஹெச். ஹட்டனின் (ப. 350) கருத்து. இந்துக்களிடையே இந்தக் காலத்தில் நிலவி வரும் பிராமணர் - பிராமணர் அல்லாதார் என்ற பாகுபாடு அந்தக் காலத்துச் சாதி அமைப்பையே கெடுத்துவிட்டது என்னலாம். பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்கள் அவரவர்கள் சாதித் தொழிலைச் செய்யாமல் பலதிறப்பட்ட தொழில்களையும் செய்து வாழ்கின்றனராகையால் இந்தக் காலத்தில் சாதி அமைப்பு வீட்டளவில், சடங்களவில் நின்றுவிட்டது என்றே சொல்லலாம். திருமணக் கொடுக்கல் வாங்கலில் குலம் கோத்திரம் எல்லாம் பார்க்கப் படாமல் இல்லை. சமுதாய மாற்ற (*social change*)த்தை இனம் (*race*), வகுப்பு (*class*), சாதி (*caste*), பகுப்பு (*division*) என்ற மாற்றத்தில் காணலாம். முதலில் மக்கள் ஓர் இனத்தைச் சேர்ந்தவர்களாயிருந்து, பின்னர் அவர்கள் வகுப்புக்களை உண்டாக்கி, அவ்வகுப்புக்கள் சாதிகளாகமாறி, அச்சாதிகள்கூட இன்று பல பிரிவுகளாக மாறி வருவது நோக்கத் தக்கது.

சாதி அமைப்பு சமூகத்துக்குப் பெருங்கேடு விளைத்து விட்டதாகச் சிலர் கருதுகின்றனர். சாதிப் பிரிவு மக்களிடையே

பிளவை உண்டுபண்ணி, ஒன்றி வாழும் தன்மை கெடச் செய்து விட்டது என்றும் கருதுகின்றனர். இத்துணைக் கேட்டுக்கும் காரணம் மக்கள் எதையும் கண்மூடிக் கடைப்பிடிக்கும் போக்கினராக இருப்பதே என்று சொன்னால் தவறாகாது. எதையும் தேவைக்குத் தகுந்தபடி அமைத்துக்கொண்டு, சமூகம் என்பதும் வளர்ச்சிக்கு உரிய ஓர் அமைப்பே என்பதை மறவாமல், சமூக வளர்ச்சிக்கு ஏற்ப வாழ்க்கையைத் திருத்தி அமைத்துக்கொள்ள முடிந்த மனவளர்ச்சி யுடையவர்களாகி, 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற திருமூலர் வாக்குப்படி ஒழுகினால் நலம். சாதி அமைப்பு, ஒருவர் எத்துணை ஆற்றலற்றிருந்த (*disability*) போதிலும், எத்துணைக் குறைபாடுடையவராயினும் சாதிக்கட்டுப் பாட்டுக்கு உட்பட்டவராக இருக்கும்வரை அவரை எப்படியும் காக்கவே செய்கிறது. அவர்களுக்குத் தொழில் (*employment*), புகலிடம் (*shelter*), காப்பு (*protection*), திருமணம் (*marriage*) எதுவும் மறுக்கப்படுவதில்லை. தகுதிக்குத்தகுந்த இடம் அளிக்கும் அமைப்பாக அமையாததே இவ்வமைப்பின் பெருங்குறை. எனவேதான் கல்வி பெருகி, நாகரிகம் வளர்ந்து, உரிமை ஓங்கி வரும் குடியரசில் இவ்வமைப்புக்குத் தீவிர எதிர்ப்பு இருக்கிறது என்பது தெரிந்ததே. ஆயினும், சாதி அமைப்பு, சமூக, தொழில், இன, மத வேறுபாடுடைய தொகுப்புக்கள் வளரவோ, அல்லது ஒன்றியிருந்து செயல் புரியவோ துணைபுரிகின்றது. என்றாலும் இவ்வமைப்புப்பலசாதிகள் பிறந்தும், பிரிந்தும் இருக்க உதவிபுரிகின்றது. எனவேதான் இவ்வமைப்புக்கு மக்கள் எதிர்ப்பு இருக்கிறது. அகமணம் (*endogamy*) ஒரு நல்ல ஏற்பாடாகவே இருக்கிறது. மேலும் பழவினைக் கோட்பாட்டால் (*doctrine of karma*) இப்பிறவியில் படும் துன்பங்களுக்கெல்லாம் ஒரு மன அமைதி ஏற்படுகிறது. எனவே ஹட்டன் போன்றவர்கள் சாதி அமைப்பைப் போற்றவே செய்கின்றனர். இவ்வமைப்பின்படி பிறவியில் உயர்வு தாழ்வு காணல் எவராலும் வெறுக்கப்படும் ஒன்று. மற்றும் உயர்சாதியினன் ஒருவன் தன் சாதியை விடாமல், பிறசாதிப் பெண்ணை மணப்பது அனுமதிக்கப்பட்டது என்றாலும், அவர்களுக்குப் பிறக்கும் குழந்தை தகப்பனின் சாதியைவிடத் தாழ்ந்ததாகவும், தாயின் சாதியைவிட உயர்ந்த தாகவும் கருதப்பட்டது. இதை ஒரு தனிச் சாதியாகக்

கொள்வது தேவைக்குமேற்பட்ட சாதிகளை அடுக்கிக்கொண்டே போய்ச் சமூகத்தில் பிளவு ஏற்படச் செய்வதாகும்.

அத்துடன், ஒரு பெண் தன் சாதியினும் தாழ்ந்த சாதியான் ஒருவனை (*pratiloma*) மணக்க அனுமதி தரப்படவில்லை. எனவே ஒரு குலத்துக்கு ஒரு நீதி வேண்டாவென்று சிலர் எதிர்க்கின்றனர். சாதி எவ்வளவு நலம் பயந்ததாக இருந்திருப்பினும், இன்றைய சமூகத்துக்குத் தேவைப்படாதது என்றும், மக்களிடையே பிளவை உண்டுபண்ணும் இந்த அமைப்பு ஒழிந்து, எல்லாரும் ஒன்றுகூடி வாழும் ஒரு சமூகம் அமையவேண்டும் என்றும் நேரு போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர். சாதி ஒழிப்புக்கு அடிப்படையானது மக்கள் மனமாற்றமேயாம். இதைக் கல்வியின் மூலமும், சட்டங்களின் மூலமும் அரசியலார் செய்தே வருகின்றனர். புகட்டும் கல்வியை, உண்டாக்கும் சட்டத்தைச் சற்றுப் புரிந்துகொண்டு நடந்தால் மக்கள் நலம் பெறலாம். இல்லையெனின் இதைவிட வெறுக்கக்கூடிய அமைப்பே உருவாகும் என்றே துணியலாம். மக்கள் அனைவரும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளாக வாழ விரும்பினால் உரிமைகளை மட்டும் வலியுறுத்திப் பயனில்லை. வேறுபாடில்லா மக்கள் இல்லை. எனவே வேறுபாடுணர்ந்து, ஆனால் வேறுபடுத்தும் உணர்ச்சி இல்லாமல் நெருங்கும் முறை தெரிந்து ஒன்றுபடுவதே நலம் பயக்கும்.

# 2. இனமும் பண்பாடும்

*(Race and Culture)*

மனித இனம் (*mankind*) பல வேறுபாடுகள் உள்ள மக்களைக் கொண்டது. இந்த வேறுபாடுகள் உடல் அமைப்பையோ (*morphological feature*), அல்லது உடல் அளவையோ (*metrical feature*) அடிப்படையாகக் கொண்டிருக்கலாம். இவை இணக்கத்துக்கு உட்படாதவை (*non-adaptive*) களாகவும், ஒரு பொதுக்கால் வழி (*common descent*) யில் வந்தவைகளாகவும் இருக்கும். இப்படிப்பட்ட பிரிவுகளையே (*divisions*) இனம் என்கிறோம். எனவே இனம் எனப்படுவது மக்கள் இனத்தில் பெரும் பிரிவு; அப்பிரிவின் உறுப்பினர்களாகிய மக்கள் அனைவருக்கும் ஒரு பொதுத் தோற்ற (*common appearance*) மும், ஒரு பொதுக் கால்வழி (*common descent*) யும் அமைவது இயல்பு. ஹூடன் (*Hooton*) என்பவர் இனத்தை முதல் இனம் (*primary race*) என்றும், முதலடுத்த இனம் (*secondary race*) என்றும் தோற்ற இயல்பைக்கொண்டு (*by the nature of formation*) இரண்டாகக் கூறுகிறார். வெகு காலத்துக்குமுன் இடத்தாலும், உயிர்ப்பு முறை (*geographical and genetic*) யாலும் தனிப் படுத்தப்பட்டதாலோ, சில நுண்ணுயிர்கள் (*gene*) கெட்டு, வேறு வந்து சேரலாலோ, சில நுண்ணுயிர்களின் மாற்றத்தாலோ (*mutation*) உட்சேர்க்கையாலோ (*inbreeding*), தெரிந்தெடுத் தலாலோ (*selection*) முதல் இனம் தோன்றுகிறது என்றும், இரண்டு அல்லது மூன்று முதல் இனங்கள் பிணைந்து நிலைப்பதால் முதலடுத்த இனம் உண்டாகிறது என்றும் கூறுகிறார். மிகுந்த

கலப்பும், எளிதில் பகுக்க முடியாததுமான ஒரு நிலையும் இந்தியாவில் காணக்கூடியவை என்கிறார் எஸ். எல். வாஷ்பர்ன்.

பண்பாடு (*culture*) என்பது சமூகத்தால் மனிதன் பெறும் பண்பு. இது சமூகப் பழக்க வழக்கங்கள், சட்டங்கள், நீதிகள், கலைகள் இன்னும் இவை போல்வனவற்றை அடிப்படையாகக் கொண்டது என்றும், மனிதனுக்குச் சமூகம் தரும் ஒரு பரிசு என்றும் கருதப்படுகிறது. மாலினோவ்ஸ்கி போன்ற அறிஞர்கள் இதை வாழ்க்கை முறைகளின் ஒரு திரள் என்று சொல்கின்றனர். சம்ஸ்கிருதத்தில் பண்பாடு என்ற சொல்லுக்கு நேராக உள்ள சொல் சம்ஸ்கிருதி என்பது.. ஸம்ஸ்கார் (*sanskar*) என்றால் சடங்கு (*rite*) செய்தல் என்பதாகும். அன்று முதல் இந்து ஒருவன் செய்துவரும் சடங்குகளால் அவன் பல காரியங்கள் செய்ய அனுமதிக்கப்படுகிறான். பல ஸம்ஸ்காரங்களுக்குப் பிறகு ஒருவன் பெறும் நிலையே சம்ஸ்கிருதி எனப்படுவது. சமூகத்தில் ஒருவனை நல்வழிப்படுத்தும் முறை அது. பண்பாடு என்பது கொடுத்துப் பெறக்கூடிய (*communicable*) அறிவு என்கிறார் மாரட் (*Marett*). ரெட்பீல்டு (*Redfield*) இதையே சிறிது விரித்துப் பண்பாடு என்பது கைத்தொழில் களிலும் சமூக அமைப்பிலும் குறியீடுகளிலும் பொதிந்த மரபுப் பொருள்களின் திரள் (*The sum total of conventional meanings, embodied in artifacts, social structure and symbols*) என்கிறார். இதிலிருந்து குறியீடுகள் எவ்வாறு நாம் அறிவைப் பெறவும், அறிந்ததைப் பிறருக்குத் தெரியப் படுத்தவும் உதவுகின்றன என்பது பெறப்படுகிறது.

மக்கள் வாழ்க்கை முறை வேறு; அம்முறையை நாம் அறிந்து எழுதுவது வேறு. முதலதைப் பண்பாடு (*culture*) எனின், அடுத்ததைப் பண்பாட்டு—ஆக்கம் (*culture-construction*) என்னலாம். முதலது உண்மை நிலை; அடுத்தது அவ்வுண்மை நிலையைப் பலவாறாக விளக்கும் நிலை.

இனம் என்ற சொல்லும் பல பொருள்களில் பயன்படுத்தப் படுகிறது. ஆங்கிலோ-ஸாக்ஸன் இனம், ஜெர்மன் இனம், இஸ்லாமிய இனம் என்றெல்லாம் வழக்கில் இல்லையா? என்றாலும்

மானிடவியலார் இனம் என்ற சொல்லின் அடியில் தோற்ற வேறுபாட்டையே முதலில் காண்கின்றனர். இவ்வேறுபாடு கண்ட பின்னரே, இவ்வேறுபாட்டைப் பொதுவில் கொண்டுள்ள பலர் சேர்ந்த ஒரு பிரிவினரின் பண்பாடு ஆயப்படுகிறது. இனமும் பண்பாடும் ஒன்றை ஒன்று ஒட்டிச்செல்லும் இருவேறு சொற்கள். ஓர் இனத்தாரிடம் ஒரு பண்பாடு காண்கின்றோம். இன்னொரு இனத்தாரின் பண்பாடு வேறுபடவே செய்கிறது. எனவே இனமும் பண்பாடும் சமூக அமைப்பில் ஒன்றுடன் மற்றொன்று இணைந்தே செல்லுகின்றன. லினியசும் (*Linnaeus*), குவியரும் (*Cuvier*) மக்கள் தொகுப்பை இரண்டு இனங்களாகப் பிரித்தனர். அதனை ஹேக்கல் (*Haeckel*) 1873ல் பன்னிரண்டாகவும், பிறகு 1878ல் அப்பன்னிரண்டை முப்பத்து நாலாகவும் மாற்றினர். டெனிகர் (*Denniker*) என்பவர் பதின்மூன்று இனங்களும் (*races*), 30 கீழ் இனங்களுமாகப் (*subraces*) பிரித்தார். ஸர் ஆர்தர் கைட் (*Sir Arthur Keith*) தோலின் நிறத்தைக் கொண்டு வெள்ளை, மஞ்சள், பழுப்பு, கறுப்பு என்று மக்கள் இனத்தை நான்கு இனங்களாகப் பகுத்தார். இந்நிற வேறுபாட்டுக்குச் சுரப்பிகள் (*glands*) காரணம் எனக் கருதினர். டக்வர்த் என்பவர் தலையளவு அட்டவணை (*cephalic index*), முன் நீட்டிய தாள்வாய்கள் (*prognathism*), தலைக்கொள்ளளவு (*cranial capacity*) இவற்றைக்கொண்டு மக்களினத்தை ஆஸ்திரேலியர் (*Australians*), ஆப்ரிக நீக்ரோ (*African Negro*), அந்தமானியர் (*Andamanese*), யூரேசியர் (*Eurasiatic*), பாலினீஸியர் (*Polynesian*), கிரீன்லாந்தியர் (*Greenlandish*), தென் ஆப்ரிகர் என ஏழு இனங்களாகப் பிரித்தார். ஜி. எலியட் ஸ்மித் (*G. Elliot Smith*) என்பவர் ஆஸ்திரேலியர் (*Australian*), நீக்ரோ (*Negro*), மங்கோலியர் (*Mongol*), நார்தியர் (*Nordic*), ஆல்பைனியர் (*Alpine*), மத்தியத்தரையினர் (*Mediterranean*) என்று ஆறாகப் பகுத்தார். இப்படிப் பலவாகப் பிரித்தும்கூட மக்கள் அனைவருக்கும் பொதுவாகச் சில கூறுகளும் (*features*), சில போக்குகளும் (*ways*) இருக்கவே செய்கின்றன.

இனத் தோற்றத்தைக் குறிக்கும்பொழுது ஒருவர்கூட இந்தியாவில் ஓர் இனம் தோன்றி வளர்ந்ததாகக் கூறாமை குறிப்பிடக்கூடிய ஒன்று. வேதித்துகளி (*Veddids*) லிருந்து திராவிட இனம்

வந்ததாகக் கைட் (*Keith*) கருதுகிருர். குன்றுகளில் வாழ்கின்ற பலர் நாள் செல்லச் செல்ல நிலப் பரப்புக்குக் குடியேறினும், குன்றுவாசிகளான வேதித்துகள் எங்ஙனம் மாறினர் என்பது கூர்மையாக நோக்கப்படவில்லை. முண்டாரி பேசும் (*Mundas*) மக்களுக்கும், திராவிடம் (*Dravidian*) பேசும் மக்களுக்கும் இன வேற்றுமை (*ethnic difference*) இல்லை என்று மெய்ப்பிக்கப் படாத கருத்தால், முண்டாரி பேசும் மக்களின் இடப் பெயர்ச்சி (*migration*) குறைவாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது (*Under-estimated*). சான்ருகப் பீஹாரில் உள்ள ஸன்தால் பர்கான (*Santhal Pargana*) மாவட்டம் நோக்கத்தக்கது. இம்மாவட்டம் காட்டுப் பழங் குடிகளுக்கும் (*jungle tribes*) புகலிடமாக அமைந்திருப்பதாகப் பக்ஸ்டன் (*Buxton*) குறிப்பிடுவது சரியே. இவ்விடத்தில் திராவிடம் பேசும் மாலெக்கள் (*Male*)[1] தம் தொன்மையான (*Primitive*) அரை வேளாண் நிலை (*semiagricultural state*) யில் ராஜ்மஹால் குன்றுகளின் சரிவில் (*slopes of Rajmahal hills*) இருந்து வருவதையும், முண்டாரி பேசும் சந்தாலர் (*Santhals*) வளர்ச்சியுற்ற நீர்ப்பாசனத்துடனும் பயிர்த்தொழிலுடனும் குன்றுகளுக்கிடையேயுள்ள பள்ளத்தாக்கு களில் (*valleys*) வசித்து வருவதையும் பார்க்கலாம். உடற்கூறு, மொழி, பண்பாடுகளில் இவர்களிடையே உள்ள வேறுபாடுகளை மேல்நோக்காகப் பார்த்தாலும் அறியக்கூடும். மாலெக்கள் தென் பகுதியில் உள்ள வேதித்துகள் பகுதிக்குப் பரவியிருப் பதையும், சந்தாலர் நிலையாகக் குடிபெயர்ந்து (*Inveterate migrants*) இருப்பதையும் தெரிவிப்பவர்களாக இருக்கின்றனர். ஒவ்வொரு ஊருக்கும் போதிய மக்கள் உண்டு. ஓர் ஊர் நிரம்பப்பெற்ருல், ஒரு கூட்டம் முன்னர் வெளிச்சென்று (*pioneering*) இன்னொரு ஊரை உண்டாக்க முனைகிறது. சந்தாலரின் தொகை பெருகிக்கொண்டே வருகிறது. இதனு லேயே அவர்கள் பரவி வாழவேண்டி இருக்கிறது.

முண்டர்களும் இவர்களைப் போலவே என்னலாம். அவர்கள் இந்தியாவுக்குக்கிழக்கே உள்ள கடற்கரைப்பகுதி (*coastland*) யில் மட்டுமே எப்பொழுதும் வசித்து வருகின்றனர். இந்த நாட்டில் உள்ள எந்த முது பழங்குடி (*aboriginal tribe*) யிடமும் காணப்

1. S. S. Sarkar, The Maler of the Rajmahal Hills (Calcutta, 1938)

படாத புதுமையான இனக் கலப்புக்கள் (*peculiar hybrid combinations*) இவர்களிடம் தோன்றியிருக்கின்றன. கலப்புக்களின் பெயர்கள் பின்வருமாறு :

1. காங்கர் முண்டா (*Khangar-Munda*)
2. கரியா முண்டா (*Kharia-Munda*)
3. கொங்பத் முண்டா (*Konkpat-Munda*)
4. கனங்கா முண்டா (*Kananga-Munda*)
5. மஹிலி முண்டா (*Mahili-Munda*)
6. நாக்பான்ஸி முண்டா (*Nagbansi-Munda*)
7. ஓரோன் முண்டா (*Oroan-Munda*)
8. ஸத் முண்டா (*Sad-Munda*)
9. ஸவர் முண்டா (*Savar-Munda*)
10. முண்டா-பூயா (*Munda-Bhuiya*)
11. முண்டா சாமர் (*Munda-Chamar*)

முண்டர்கள் மற்றப் பழங்குடிகளுடன் திருமண உறவு கொண்டதன் பயனாக இத்தனை பிரிவுகள் உண்டாயின என்று ரிஸ்லீ குறிப்பிடுகிறார்.[1]

இந்தியாவுக்குப் புறத்திலிருந்து இந்தியாவுக்குள் குடிபுகுந்த மக்களில் மிகப் பெருந்தொகையினர் ஆரியர்களே. இவர்களின் வருகை இந்தியாவில் இவர்களுக்கு முன் வாழ்ந்து வந்த மக்களின் இனத்தையும் பண்பாட்டையும் பெரும் அளவுக்கு மாற்றவே செய்திருக்கிறது. ஏறக்குறைய 1200ல் ஆரல்—காஸ்பியன் பள்ளத்தாக்கி (*Aral-Caspian basin*) லிருந்து மிகப் பெருந்தொகையினர் குடிபுகுந்தனர். *I*-ஆம், *II*-ஆம் காலங்களில் (*Periods I & II*) பாரசீகத்தில் தம்கானுக்கு (*Dhamghan*) அருகில் தேப் ஹிஸா (*Tape Hissar*)ரில் பழம் பொருள் அகழ்வுகளில் (*archaelogical excavations*) கண்ட கல், செம்புக் கால மண்டையோடுகளால் (*eneolithic skulls*) இவர்களைப் பற்றி அறிகிறோம். *III*-ஆம் காலத்தில் (*Period III*) நீண்ட தலையர்களான ஆரியர் (*Dolicocephalic Aryans*) களுடன் நடுத்தரத் தலையினர்களான (*mesocephalic*)

1. People of India (Calcutta, 1915), p. 81.

மற்றொரு தொகுப்பினரைக் காண்கிறோம். மேற்கில், அனதோலியாவில் உள்ள அலிஷ (*Alishar in Anatolia*) ரில், போகாஸ் - கீயி ஹித்தித் (*Hittite period of Boghaz-keui*) காலமான *IV*-ஆம் காலத்தில் இதே போன்ற நீண்டதலைக் குரிய மண்டையோடுகள் கண்டெடுக்கப்பட்டன. இன்று தென் இந்துகுஷ் (*Southern Hindukush*) பகுதியில் உள்ள பால் டிஸ் (*Baltis*) களே இந்த இனத்தின் சிறிதும் கலப்பற்ற வகை யினர் (*Purest representatives*) ஆவர். இந்த இனத்தைச்சேர்ந்த மக்கள் சிந்து நதிக்கரையில் பரவியதன் பயனாக, இன்று பஞ்சாப், ராஜஸ்தான், காஷ்மீர் மக்களிடையேயும் காணப்படுகின்றனர். இவர்கள் திபேத்தின் பக்கம் உள்ள இடங்களிலும் புகுந்தனர் என்பது லதக்கியர் (*Ladhakis*)களின் உடல் கூறுகளைப்பார்த்தால் தெரியவரும்; இவர்கள் கங்கை நதியின் ஓரமாகக் கிழக்கிந்தியா விலும் பரவினர்; தென்னிந்தியாவுக்குள்ளும் புகுந்தனர். நீலகிரி யில் உள்ள தோடர் (*Todas of Nilgiris*) களின் இன அமைப்பில் இவ்வினத்தின் ஒரு கிளை பொருந்தியுள்ளது. வட இந்தியாவி லிருந்து கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் நம்பூதிரிப் பிராமணர்கள் இடம் பெயர்ந்தனர்.

வெளியிலிருந்து இந்தியாவுக்குள் புகுந்தவர்களுள் மேலே கூறப்பட்ட நடுத்தரத் தலையினரும் (*mesocephalic people*) ஒருவர். இவர்கள் இரானியப் பீடபூமி (*Iranian plateau*) யிலிருந்து இந்தியாவுக்குள் புகுந்தனர். இவர்கள் ஸ்கைதியர்கள் (*Scythians*) எனப்படுகின்றனர். இந்தியாவிலோ, வேறு இடத்திலோ இவர்கள் ஆரியர்களைப் பின்பற்றியவர்களாகக் கருதப்படுகின்றனர். இரா னில் இன்று பெரும்பாலும் நடுத்தரத் தலையுள்ளவர்களே இருப்பதாலும், இரானியர்களுக்கும் ஸ்கைதியர்களுக்கும் நெருக் கம்(*affinity*)இருப்பதாலும், இவர்களை இரானிய—ஸ்கைதியர்கள் (*Irano-scythians*) என்றே கூறலாம். நீண்ட தலையர்களைவிட நடுத்தரத் தலையர்களே மிகை. இந்தியாவிலும் சில மக்கள்பால் இதைக் காணலாம்.

இந்தியாவில் வடமேற்கு எல்லையில் நீண்ட தலையர்களும் (*dolicocephals*), நடுத்தரத் தலையர்களுமே (*mesocephals*) வசித்து வருவதால், அகன்ற தலையுடைமை (*brachycephalic*) இவர்களிடம் புகமுடியவில்லை. முதல் தரமான அகன்ற தலை

யுடைமையை இன்று இந்தியாவின் வடமேற்கு ஓரங்களில் காண லாம். பாமிர் (*Pamir*) பகுதியில் இவ்விதத் தலை மிகுதியாக அமைந்துள்ளதே இதற்குச் சான்ருகும். இவர்கள் டர்க்கோ - ஆல்டேன் (*Turko-Altain*) இருப்பைச் (*Stock*) சேர்ந்தவர்கள்; பேசுவது துருக்கி மொழிகள்; சாப்ளிகாவின்படி (*Czaplicka*) இவர்கள் அசல் மங்கோலியர்கள் (*Typical Mongolian*) அல்லர். இந்தியாவில் காணப்படும் அகன்ற தலையுடைமை நடுத்தரத் தலையுடைமையின் உச்ச வகை (*exterme type of mesocephaly*) என்னலாம்.

மக்கள் நெருக்கமே இடப் பெயர்ச்சிக்கு முதல் காரணமாகச் சொல்லலாம். ஹடனுடைய 'துரத்தப்படுவதும், ஈர்க்கப் படுவதும்' (*expulsion and attraction*) என்ற கோட்பாட்டுக்கு இணங்க, கொஞ்ச காலத்துக்கு முன் மலேரியாவின் தீவிரத்தால் காபி பயிரிடுபவர்கள் விட்டு அகன்ற வைநாட் பீடபூமிக்குள் (*Wynad plateau*) திருவிதாங்கூர்க் கிறித்தவர்கள் குடியேறியதே இதற்கு எடுத்துக்காட்டாக உள்ளது.

மேற்சொன்னவற்றிலிருந்து இனத்தின் இயல்பு ஒருவாறு விளங்குகிறது அல்லவா? இவ்வியல்புடன் தொடர்புள்ள பண் பாட்டைப் (*culture*) பார்ப்போம். பண்பாடு என்பது மனித இனத்துக்கே உரியது மட்டும் அன்று; மனிதனுடனே தோன் றியது என்றே சொல்லலாம். மனிதன் இன்ன உறுப்பியல்பு உடையவனுக இருக்கிருன் என்பதை விளக்குவது இனம் என்ருல், அவன் இன்ன பண்பு உடையவனுக உலவுகிருன், வாழ் கிருன் என்பதை அறிவிப்பது பண்பாடு. இனம் எப்படி ஒன்றுடன் மற்ருென்று கலப்புறுகிறதோ அப்படிப் பண்பாடும் கலப்புறுகிறது. இருவேறு பண்பாடுகள் சேர்ந்து தனித்த ஒரு பண்பாட்டிற்கு இடம் கொடுக்கிறது. இப்படி ஒரு சமூகம் பல இனங்களை மட்டும் அல்லாமல் பல பண்பாடுகளையும் பெறு கிறது. இப்படிப் பெறுவதால் சமூகச் சிக்கல்கள் பல உண்டா கின்றன. பல சிக்கல்களைத் தீர்த்துவைக்க ஒரு வழி உண்டு என்ருல் அது மனிதனுக்கு மனிதன் உள்ள இன, பண்பாட்டு வேறுபாடுகளைத் தெரிந்துகொள்வதாகும். 'யூதன் (*Jew*) ஒரு மனிதன்; ஆனுல் எப்படிப்பட்ட மனிதன்? ஈயும் ஒரு மிருகமே' என்ருர் கோயெபெல் (*Goebels*). இதிலிருந்து என்ன பெறப்

படுகிறது? மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர்களானாலும் சிலர், பல காரணங்களால் மற்றவர்களிலிருந்து மாறுபடுகின்றனர். அப்படி மாறுபடுவதற்குக் காரணங்கள் என்னவாயினும் அம்மாறு பாட்டால் சமூகம் வளரவும் செய்கிறது; அவ்வளர்ச்சியில் சிக்கல்களையும் காண்கிறது. எனவே பண்பாட்டுக்கும் இனத்துக்கும் உள்ள தொடர்பைச் சிறிது ஊன்றிப் பார்ப்போம்:

இனத்துக்குப் பிறப்பிடம் நன்கு புலனாகும் வழிவழிவரும் மாற்றம் (*Mutation*). மாற்றம் உறும் முறை இயற்கைத் தேர்வு (*Selection*). இவ்வியற்கைத் தேர்வினால் பெற்ற பண்புகள், பெற்றோரிடமிருந்து வழித்தோன்றல்களால் இன உயிர்த் திரட்கூழ் (*Germ-plasm*) மூலம் வழி வழியாகப் பெறப்படுகின்றன. இவ்வழி வழி இயக்கம் (*mechanism of heredity*) பண்பணுக்க (*chromosomes*) ளின் மூலம் அமைகிறது. இதன் பயனாக உண்டாகும் ஓர் உயிர் அமைவு (*biological organism*) ஒன்று படுத்தப்பட்ட தத்தம் தொழில்களைச் செய்யும் பல அமைப்புக் களைச் சேர்ந்தது.

பண்பாட்டுக்குப் பிறப்பிடம் மனிதன் புதியது காணலும், (*discovery*), புதியது புனைதலும் (*invention*) ஆகும்; அதுவளர்ச்சி பெறும்வகை, கூட்டிப்பெருகுவது (*accumulation*). அது இயங்கும் விதம், ஒன்றைப்பார்த்து அதுபோல் நடப்பது (*Imitation*). அதன் உள்ளடங்கிய பொருள் (*content*), பல்வகை நடத்தைகள் (*patterns of behaviour*) ஆகும்; கடைசியாக அதன் பயன், பல திறப்பட்ட தோற்றங்களும் (*personality*), ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்ட நம்பிக்கையும் செயல்முறையும் (*belief and practice*) ஆகும்.

மனிதன் ஓர் உயிர்அலகு (*unit*); அவனுடைய இயல்பு உயிர்ப்பொருளின் வழிவழி வரும் முறைகளால் (*Organic hereditary process*) உறுதிப்படுத்தப்படுகிறது. ஆனால் அவன் ஒரு சமூகச் சூழ்நிலையில் பிறக்கிறான்; கூடி வாழும் வாழ்க்கை வாழ்கிறான்; ஒரு தோற்றத்தை (*personality*) யும், வழிமுறையை (*heritage*) யும் மற்றவர்களுடன் சேர்ந்து பழகும் காரணத்தால் பெறுகிறான். மற்றும் அவன் பெறும் வளர்ச்சிக்கு அவன் எந்தப் பண்பாட்டில் பிறக்கிறானோ, அந்தப் பண்பாடும் வாழ்க்

கையில் பெறும் சேர்க்கையுமே காரணமாகின்றன. திருமண வழக்கங்கள் நேராகவும், கண்கூடாகவும் இன விளைவுகளுக்குக் காரணமாகின்றன. கீழான மனநிலை (*mentality*) ஒருவரின் பிறப்பில் பெறப்படுகிறது. இனம் உயிரியலைப்பற்றியது என்றால், பண்பாடு சமூகவியலைப் பற்றியது என்னலாம். உண்மையில் இனமும் பண்பாடும் ஒன்றியே இருக்கின்றன; ஒன்று மற்றொன்றை மாற்றவோ கெடுக்கவோ செய்கிறது.

பண்பாடு இனத்துடன் பிணைந்தே வருவது, கி. மு. முதல் நூற்றாண்டில் ஸிஸெரோ (*Cicero*), அடிகஸ்(*Atticus*)இடம்'பிரிட்டனிலிருக்கும் அடிமைகள் எவ்வளவு சொல்லிக் கொடுத்தாலும் தெரிந்துகொள்ளும் அறிவு வாய்க்கப் பெறாதவர்கள். எனவே அந்நாட்டிலிருந்து அடிமைகளை வாங்க வேண்டா' என்று சொன்னதாகத் தெரிகிறது. வெள்ளை இனத்தினரின் நார்டிக் கிளை (*Nordic branch of the white race*) யினர் அழகிலும், அறிவிலும், வன்மையிலும் சிறப்பு வாய்ந்தவர்கள். இவர்கள் கீழ் இனத்துடன் சேர்ந்து பழகியதால் வன்மையும் அழகின்மையுமாக வன்மையும் அறிவின்மையுமாக, அறிவும் அழகின்மையுமாகக் கலந்து பல பிரிவுகள் உண்டாயின.

இன நூல் வல்லுநர் (*Raciologists*) பண்பாட்டு வேறுபாடுகள், மாறுபட்ட இன வழியிலும் அமைப்பிலும் (*Differential racial heredity and equipment*) உருவாகின்றன என்று கூறுகிறார். உயர்ந்த இனங்கள் உயர்ந்த பண்பாடுகளை உண்டாக்க முடியும். வெள்ளை இனத்தின் ஒரு கிளையினரான ஆரியர்கள் உயர்ந்த விருப்பங்களைக் கொண்டவர்கள். எனவே நாகரிகத்தை உண்டாக்குகின்றனர். இனக் கலப்பு இன்று பல ஒன்றிய பகுப்புக்களையும் கூட்டுக்களையும் (*blends and combinations*) உண்டாக்க, அவ்வொன்றிய பகுப்புக்களும் கூட்டுக்களும் பலவகைக் கூட்டத்தைத் தோற்றுவித்துள்ளன. இவை தம் நிலையைப் போற்றாமையால் நாகரிகம் நசித்துப் போகும். நல்லினத் தோற்றியலின் (*Eugenics*) அடியாகப் பிறந்த இனத்தன்மை பல்வேறு நாட்டுத் தொகுப்பினர் படும் பாடுகளுக்கெல்லாம் ஒரு சிறந்த மருந்தாகக் கருதப்படுகிறது. பண்பாட்டியல் வல்லுநர் (*Culturologist*) இனங்களைத் துணை இனங்களாகத் துண்டித்திருக்கின்றனர். காகேஸிய

(*Caucasian*) இனம் குறைந்தது மூன்று வமிசங்களைக் (*Strains*) கொண்டதாகும். ஒரு பண்பாட்டு அமைப்புத் (*Culture pattern*) தோன்ற வெவ்வேறு இனங்களும் உதவியுள்ளன. இனக் கூறுகள் (*traits*) மாறவில்லையென்றாலும், பண்பாடு மட்டும் மாற்றத்துக்கு உட்பட்டதாகவே இருக்கிறது. பண்பாடு கூட்டிக் கூட்டிப் பெருகுகிறது (*grows by accumulations*) என்றும், சமூக வழித் தோன்றுவதே பண்பாடு என்றும் சொல்வது பொருந்துமானால், இப்பண்பாட்டின் முன்னேற்றத்தை இனத்தில் காணமுடியாது; ஆனால் சூழ்நிலையில் காணலாம். குந்தர் (*Gunther*) என்பவர் செய்ததைப்போல் பண்பாட்டுக்கும் நாட்டின் இயல்புகளுக்கும் (*National features*) முடிபோடுவது சரி அன்று. சர் ஆர்தர் கைட் (*Sir Arthur Keith*) இனமும் நாடும் ஒன்றே என்று சொல்கிறார். டாக்டர் எச். ஜி. வெல்ஸ் (*Dr. H. G. Wells*), டாக்டர் பிடிங்டன் (*Dr. Piddington*) போன்றோர் அவை இரண்டும் தனித்தனியானவை என்றே கருதுகின்றனர். நாடு என்பது வரம்புள்ள ஒரு நிலப்பகுதி. இப்பகுதியில் பல இனத்தினர் இருக்கலாம். ஓர் இனம் மட்டுமே ஒரு நாட்டுக்கு உரியது அன்று. மனிதனால் வரையறுக்கப்பட்ட நிலப்பகுதிக்கும் இயற்கையாகவே மனிதன் பெற்ற உடற்கூற்றுக்கும் வேறுபாடு உண்டு. இனத்துக்கு அடிப்படையாக அமைவது உடற்கூறுகள். எனவே உடற்கூறுகள் பொதுவாக அமையப்பெற்ற மக்கள் எந்த எந்த நாட்டில் இருந்தாலும், அவர்கள் அத்தனை பேரும் ஓர் இனத் தொகுப்புக்குள்ளாகின்றனர். மதம் காரணமாக ஓர் இனம் உண்டாவது இல்லை. ஆனால் பாகிஸ்தான் போன்று ஒரு நாடே மதத்தை அடிப்படையாகக் கொண்டு உருவாகிவிடுகிறது. ஒரு நாட்டினரிடையே நிலவும் பண்பாடுகளும் வேறுவேறாக இருக்கலாம். ஆனால் ஓர் இனத்தினரிடையே பல வழக்க ஒழுக்கங்கள் வேறுபடுவதில்லை. எனவே நாடு வேறு, இனம் வேறு என்றே கொள்ளலாம்.

பண்பாட்டை மட்டும் எடுத்துக்கொண்டோமானால் எப்படி ஒருவன் ஒரு சமூகத்தில் ஒன்றி வாழ்கிறான் என்பது நன்கு புலப்படும். இனத்தால் ஒன்றுபட்ட ஒருவன், தானும் வாழ்ந்து, அவ்வினத்தைச் சேர்ந்த பிறரையும் வாழவிடுகிறான் என்றால், அதற்குச் சில பொது வழக்க ஒழுக்கங்களை அவன் மதித்து நடக்க வேண்டியவனாகிறான். எனவே அவன் எந்தச் சமூகத்தைச்

சேர்ந்தவனாக இருக்கிறானோ அந்தச் சமூகத்து வழக்க ஒழுக்கங்களுக்குக் கட்டுப்பட்டவனாக நடக்கிறான். இனத்தால் சில பண்புகளையும், சமூகத்தால் சில கட்டுப்பாடுகளையும், சூழ்நிலையால் சில மாற்றங்களையும் அவன் அடைந்தே தீருகிறான் என்றாலும், நாட்டுணர்ச்சியால் (*nationalism*) அவன் பலவேறு மக்கள் பிரிவினருடன் ஒற்றுமை காட்டியே வாழ்கிறான். அப்படி வாழ்ந்து வருவதால், நாள் செல்லச் செல்லப் பல பழக்கங்கள் ஒன்று கலக்கின்றன. அப்படிக் கலந்தபின் பெயரளவில் ஒரு தொகுப்பு நின்றுவிடுகிறது; செயலளவில் வேறுபாடு காண்பதில்லை. ஆனால் அடிப்படையில் அமைந்த இன வேறுபாடுகள் மட்டும் மாறிவிடுவதில்லை. திருமணத்தின் மூலம் ஓர் இனத்தினர் இன்னொரு இனத்தினருடன் உறவுகொள்ள, அந்த உறவால் குடிவழி (*geneology*) மாறி, பிறிதொரு பிரிவு உண்டாகி, அடிப்படையில் மாற்றம் ஏற்படுகிறது. எனவே இனமும் பண்பாடும் மாற்றத்துக்கு உட்பட்டனவே என்னலாம். ஆனால் இந்த மாற்றம் அவ்வளவு சீக்கிரத்தில் ஏற்படுவதில்லை.

பண்பாடற்ற ஒரு மனிதன் இல்லை என்றே சொல்லலாம், பண்பாடு ஒருவனை ஒரு சமூகத்தில் வாழ வைக்கிறது. அவனுக்குப் பெரிய விடுதலை தரக்கூடிய ஒன்றாக அமைந்ததே அது. கண்டபடி நடக்கவிடாமல் ஒரு கட்டுப்பாட்டுக்குள் அடங்கச் செய்தாலன்றி எவரும் நன்முறையில் வாழ்தல் அரிது. எனவே ஒரு விதத்தில் விடுதலை தரக்கூடியதாகவும், இன்னொரு விதத்தில் அடக்கி ஆள்வதாகவும் இப்பண்பாடு இருக்கிறது. அரும் பெரும் மக்களை ஆக்கும் சக்தி வாய்ந்தது பண்பாடு. காந்தி, பாரதி போன்றவர்கள் இதற்கு எடுத்துக்காட்டுக்களாக உள்ளனர். ஒரு சமூகம் வளர்ச்சியற்று நசித்துப் போகாமல் இருக்க இவர்களைப் போன்ற பெருமக்கள் தேவைப்படுகின்றனர். இவர்கள் சமூகப் பண்பாட்டைப் புரிந்துகொண்டு, சமூகம் வளரத் தடையாக இருப்பனவற்றைக் களைய முன்வந்தவர்கள். அப்படி அவற்றைக் களையும் வழிகளும் ஒரு பண்பாட்டில் இருக்கவே செய்கின்றன.

மனிதன் காட்டுமிராண்டியாக இருந்து, நாட்டுவாசியாகி, அரிய பல செயல்கள் புரியக்கூடியவனாக இன்று இருப்பது மனிதனின் பண்பாட்டு மாற்றத்தையே குறிக்கிறது. இன்றுள்ள மனிதனை நாகரிகம் அடைந்தவனாகக் குறிக்கிறோம். நாகரிகம்

என்றால் என்ன? ஒரு பண்பாடு நகர்ந்து இன்னொரு உயர்ந்த பண்பாட்டை உண்டு பண்ணுகிறது. இப்படி உயர்ந்து தோன்றும் ஒரு பண்பாடு நாகரிகம் (*civilization*) எனப்படுகிறது. இது எதனால் அறியப்படுகிறது எனின், மனிதன் வாழ்கிற முறையால் மட்டுமன்றி, அவன் உண்டாக்கியுள்ள சுற்றுப்புற வாழ்க்கையிலிருந்தும்கூட என்னலாம். இம்மாற்றத்துக்குக் காரணம் சிந்தனை. எனவே உயர்ந்த சிந்தனையுடைய ஒருவன் உயர்ந்த நாகரிகத்தை உண்டாக்குகிறான். எனவே நாகரிகம் சிந்தனையைப் பற்றியதாகவும், பண்பாடு சமூகத்தைப் பற்றியதாகவும் கொள்ளலாம். நாகரிகம் பண்பாட்டுக்குப் புறம்பானது. மனித சமூகத்துள் காணப்படுவது பண்பாடு எனின், அச்சமூகத்தில் நாம் காணும் பல பொருள்களின் ஆக்கத்துக்குக் காரணமானது நாகரிகம். எனவே நாகரிகம் பண்பாட்டுக்குப் பிற்பட்டதே. பண்பாடுடைய வாழ்க்கைக்குத் துணைக் கருவிகளாக அமைந்த சில பொருள்களின் கூட்டமைப்பே நாகரிகம். இத்தகைய நாகரிகம் அமைந்தவனாக மனிதன் இன்று காணப்படுகிறான். ஓர் இனத்தினன், ஒரு பண்பாட்டினன், ஒரு நாகரிகத்தினன் என்று ஒருவனைக் குறிப்பிட உடற்கூறுகள், பழக்க வழக்கங்கள், சிந்தனைப் பொருள்கள் இத்தனையும் ஒருவனிடம் எப்படி எல்லாம் அமைந்து இருக்கின்றன என்பது தெரிய வேண்டும். ஆனால் மனித இனத்துக்கே அடிப்படையில் ஒரு சில ஒற்றுமைகள் இருக்கவே செய்கின்றன. இவ்வொற்றுமை தற்செயலானது அன்று; இயற்கையாகத் தோன்றுவதே. உளவியலின் (*Psychology*) படி, உலகத்து ஒரு மூலையில் உள்ள மனிதன் ஒருவனின் சிந்தனை இயல்பும், உடல் அமைப்பும் பொதுவாகவே அமைகின்றன. இப்பொதுமை (*generality*) யைத் தெரிந்துகொள்ள மனிதனின் பலதரப்பட்ட வாழக்கையே போதும். பலவித வாழ்க்கை முறைகளைக் கையாண்டாலும் அம்முறைகளிலேயே ஒன்றைப்போன்ற மற்றொன்றைக் காணலாம்.

பண்பாடு என்பதை வாழ்முறை (*way of life*) யாகக் கொண்டால், இம்முறைக்குள் தெய்வ வணக்கம், மதச் சடங்குகள் முதலியவை அடங்கிவிடுகின்றன. இவை அத்தனையும் ஒரு பண்பாட்டின் உறுப்புக்களே. இப்படிப் பல பாண்பாட்டுறுப்

புக்கள் (*culture elements*), ஒழுங்கும் (*order*), பொருளும் (*meaning*) கொண்டனவாக ஒன்று சேரின், அச்சேர்க்கை, பண்பாட்டியைபு (*culture complex*) எனப்படுகிறது. பண்பாட்டியைபு ஒரு நிலைத்த ஏற்பாடு (*institution*) அன்று. பல நிலைத்த ஏற்பாடுகள் ஒன்றுடன் மற்றொன்று கலந்துற்றதன் பயனே அது. பண்பாட்டுறுப்புக்கள் (*culture traits*) ஒன்றுக்கொன்று கொண்ட உள்ளுறவின் (*institution*) வகையே பண்பாட்டியைபு என்றும் சொல்லப்படுகிறது.

இவற்றுடன், பண்பாடு தோன்றிய விதத்தையும் சற்றுப் பார்ப்போம்: உயிர்ப் பொருள்கள் அத்தனையும் பிறந்து, வளர்ந்து, இறக்கும் தன்மையுடையன என்றாலும், வளர்ச்சியின் பொழுது அவை எப்படி எப்படியோ மாற்றமுறுகின்றன. இம் மாற்றம் நாள் செல்லச் செல்ல வளர்ந்து, ஒரு பொருள் கொண்டிருந்த தோற்றத்தையே மாற்றி அமைத்துவிடுகிறது. இதை உயிர்ப்பொருள் உருமாற்றம் (*evolution*) என்பர். உயிர்ப் பொருள் இப்படிப் பெரிய மாற்றத்தை அடையக் கூடியது என்று டார்வின் (*Darwin*) உறுதிப்படுத்தினார். இக்கோட்பாடு (*theory*) மனித இனத்துக்கே மட்டுமன்றி, அவனுடன் வளர்ந்து வரும் பண்பாட்டுக்கும் உரியதே. பண்பாடு என்பதும் ஒரு சமூகத்தில் ஒரு காலத்தில் அக்கால மக்களுடன் ஒரு விதம் தோன்றிப் பிற்காலத்தில் அக்கால மக்களின் சமூக அமைப்புக்கும் வளர்ச்சிக்கும் ஏற்ப மாற்றம் அடைந்தே வருகிறது. எனவே பண்பாண்டுக்கும் மனித இனத்துக்கும் பொதுவாக அமைந்ததே இக்கோட்பாடு என்னலாம். ஒரு சமூகம் எப்படி உருவாகிறது என்பதை நன்கு தெரிந்துகொண்டோமானால் அச் சமூகத்து மக்களின் பண்பாடு எப்படி உருவாகிறது என்பது தெளிவாகும். மனிதனின் சிந்திக்கும் தன்மை என்னவோ உலகத்து எந்த மூலையில் உள்ளவனுக்கும் உரிய ஒரு பொதுத் தன்மையாகவே இருக்கிறது. அவனவன் வாழ்கிற நிலப்பகுதி காரணமாகவோ, தட்பவெப்பம் காரணமாகவோ, வழக்க ஒழுக்கங்கள் காரணமாகவோ, சூழ்நிலை காரணமாகவோ அவனவன் பண்பாடு மாறுகிறது. இப்படிப் பண்பாடு பல மாற்றங்களுக்குள்ளாகிப் பல பண்பாடுகள் சேர்ந்து ஒரு பெரும் அமைப்பின் கிளைகளாகத் தோன்றுகிறது. ஒரு பண்பாடு இன்னொரு பண்

பாட்டை ஒத்திருப்பது, ஒரு மனிதனின் சிந்திக்கும் தன்மைக்கும் இன்னொரு மனிதனின் சிந்திக்கும் தன்மைக்கும் அடிப்படையில் ஒரு வேறுபாடும் இல்லாது இருப்பது போல என்னலாம். ஒவ்வொரு நிலைபெற்ற அமைப் (*institution*) பும் தனித்தனி உருமாறுகிறது. இம்மாற்றம் சுற்றுப்புற (*surrounding*) அல்லது உள்ளூர்ப் (*local*) பண்பாட்டின்படியே உண்டாகிறது என்னலாம். இரண்டு பண்பாடுகள் ஒன்றே போன்ற இயல்பு (*traits*) களையோ, நிலைபெற்ற அமைப்புக் (*institution*) களையோ உடையனவாயிருப்பின் அவை குவிந்த உருமாற்றம் (*Convergent evolution*) எனப்படும். பயிர்த் தொழில் தென்கிழக்கு, தென்மேற்கு ஆசியாவிலும் புது உலகத்திலும் தனித்தே உருவாக்கப்பட்டது. பூச்சியம் (*Zero*) என்பது இந்துக்கள் (*Hindus*), பாபிலோனியர்கள் (*Babylonians*), மாயாக்கள் (*Mayas*) இவர்களால் தனித்தனியாகத் தோற்றுவிக்கப்பட்ட ஒன்று. கூடை முடைதலும் அப்படியே. மைசீனியர்கள் (*Myceneans*), மாயாக்கள், எஸ்கிமோக்கள் ஆகியவர்களால் தனித்து உருவாக்கப்பட்டதே. காகிதம் செய்தல், அச்சிடுதல் கூடக் கிழக்கிலும், மேற்கிலும் தனித்தே உண்டானவை.

இப்படிப் பல எடுத்துக்காட்டுக்களை மார்கன் (*Morgan*), டைலர் (*Tylar*), ஹாடன் (*Haddon*) லெவி—ப்ரூல் (*Levy-Bruhl*) போன்ற உயிர்ப் பொருள் உருமாற்றக் கோட்பாட்டு அறிஞர் (*Evolutionists*) களிடமிருந்து பெறலாம். கீழ்ப்படி (*lower type*) யிலிருந்து மேல் படிக்குச் சமூகம் மாற்றமுற்றதாகக் கொண்டு, மார்கன் என்பவர் மூன்று காலப் படிகளை (*stages*) வரைந்தார். முதலாவதாகப் பழங்காலம் - அதாவது, மனிதன் காட்டுமிராண்டியாக வாழ்ந்த காலம். இரண்டாவதாக இடைக்காலம், அதாவது, மீன் பிடித்தல், தணலுண்டாக்குதல் போன்ற முன்னேற்றமடைந்த காலம். மூன்றாவதாகப் பிற்காலம், அதாவது, வில்லும் அம்பும் உண்டான காலம். மண்பாண்டம் செய்யப்பட்ட காலத்தை அநாகரிகத்தின் (*barbarism*) முதல் எனவும், மிருகத்தை உடன் வளர்த்தலும் (*domestication of animals*), நீர்ப்பாய்ச்சிப் பயிர் செய்தலும் உண்டான காலத்தை அநாகரிகத்தின் இடை எனவும், இரும்பை உருக்கி ஆயுதம் செய்த காலத்தை அநாகரிகத்தின்

கடை எனவும் கொண்டார். இதற்குப் பின்னரே நாகரிகம் (*civilization*) உண்டாயிற்று என்றும், எழுத்தும் (*alphabet*), எழுதுமுறையும் (*writing*) இக்காலத்தில் பிறந்தனவே என்றும் கொள்கிறார்; மேற்கு ஐரோப்பியச் சமூகத்திலும் இதே காலத்தில் நாகரிகம் எழுந்ததாகவும் கருதுகிறார். பண்பாட்டின் உட்பொருளைப் பற்றி (*content of culture*) ஆயும் பொழுது, சட்டப்படி புகுத்தப்பட்ட ஒருதார மணமே (*monogamy*) திருமணத்தின் மிக உயர்ந்தபடி என்று கொண்டு, திருமணமுறை வளர்ச்சியில் முறை ஒன்றும் இல்லாதிருந்து, பிறகு தொகுப்புத் திருமணம் (*group marriage*), பல கணவ மணம் (*polyandry*), தாமே விழைந்து ஏற்ற ஒருதார மணம், பலதார மணம், என்று படிப்படியாகத் திருமணமுறை ஆயிற்று என்கிறார். இத்திருமண முறையின் இயல்பினால் பலவித குடும்பங்கள் தாய் வழியும் (*matrilineal*) தந்தை வழியும் (*patri lineal*) ஏற்படலாயின என்கிறார்.

மனிதன் காட்டுமிராண்டியாக இருந்து நாகரிகம் வளரப் பெறாத நிலை மாறியபின் நாகரிகம் வளரப்பெற்றவனாகவும், மணமுறை ஒன்றும் இல்லாதிருந்து தொகுப்பாக மணக்கும் முறையைக் கொண்டு, பின் ஒருதார மணத்தை ஏற்றவனாகவும், வேட்டையாடிப் பிழைத்ததில் இருந்து பயிர் வளர்த்து, வேளாண்மை செய்து, கைத்தொழில் பெருக்கிப் பின் பெருந் தொழில் உண்டாக்கியவனாகவும், சமூகத்தின் மாற்றத்தால் வளர்ச்சியடைந்து, முன்னேறிய வகையைக் கூர்ந்து நோக்கின், ஒரு மனிதனோ அல்லது அவனைக் கொண்ட ஒரு சமூகமோ அல்லது அவனுடன் வளர்ந்த பண்பாடோ எப்படி எல்லாம் மாற்றம் உறுகிறது என்பது தெற்றென விளங்கும். இனங்கள் பல்வேறு வழக்க ஒழுக்கங்களையும் மரபுகளையும் கொண்டிருந்தன என்றும், இவை நாளடைவில் கலந்து, பல பண்பாடுகளையே உண்டாக்கிவிட்டன என்றும் சொன்னோம் அல்லவா? எப்படிக் கலந்தன எனின், அதற்கு இடப் பெயர்ச்சியும் (*migration*), தொடர்புகொள் வழியும் (*Communication*) இரு முக்கிய காரணங்களாகின்றன. ஒரு தொகுப்பினர் அல்லது ஓர் இனத்தினர் தம் இடம் பெயர்ந்து இன்னோர் இடத்துக்குக் குடியேறும் பொழுது, இவர்களுடைய வழக்க ஒழுக்கங்களில் புதிய இடத்தில் கடைப்பிடிக்க முடியாத சிலவற்றை விட்டு, பிறவற்

றைக் குடியேறிய இடத்தில் வாழ்ந்து வரும் தொகுப்பினர் அல்லது இனத்தினரின் எளிதாக எடுத்தாளக் கூடிய வழக்க ஒழுக்கங்களுடன் சேர்த்து வாழ்ந்தனர். இரு வேறு வர்க்கத்தினர் இரு வேறு வாழ்க்கை உடையவர்களாக இருப்பினும் அவர்கள் ஓரிடத்தில் பக்கத்துக்குப் பக்கம் இருந்துவரின் பல தொடர்புகள் ஏற்படவே செய்கின்றன. சொற்கள், வழக்க ஒழுக்கங்கள், திருமண உறவு, பொருள் (*goods*), பணி (*service*), கருத்து (*belief*) இப்படிப் பலவும் கலப்பெய்துவது இயல்பே. கூப்பிடும் தொலைவில் இருந்து வாழும் இரு வேறு பண்பாட்டினரின் நடை உடை பாவனைகள் கலப்பெய்தவே செய்யும். ஒரு பண்பாட்டை வளரச் செய்வதும், ஒரு பண்பாட்டைப் போன்ற பல பண்பாடு களைத் தோற்றுவிப்பதும் இப்பண்பாட்டுப் பெயர்ச்சி (*traans-mission of culture*), சிதறல் (*diffusion*) என்று சொல்லப்படு கிறது. இதை வலியுறுத்துமாறு விஸ்லர் (*Wissler*) என்பவர் நீண்ட தொலைவு, மலை, கடல் பாலைவனம் இவை யாவும் ஒரு பண்பாடு இன்னொரு பண்பாட்டுடன் கலப்பெய்துவதைக் தடுக் கின்றன என்கிறார். ஆனால் நெருங்கிய தொடர்பு இல்லாமலே கூடச் சில பண்பாட்டு இயல்புகள் பரவ முடியும் என்றால் தவறு காது. இடப்பெயர்ச்சியோ அல்லது இரு இடங்களுக்கு இடையே ஏற்படும் மாற்றமோ இதற்குக் காரணங்களாகலாம்.

ஐரோப்பியர்களும் அமெரிக்கர்களும் சிதறலைப் (*diffusion*) பற்றிச் சொல்வதற்கு முன்னேயே டைலர் (*Tylor*) அதை ஒரு பண்பாட்டு வளர்ச்சி முறை (*process of culture growth*) என்று குறிப்பிட்டு இருக்கிறார். நாகரிகம் என்பது ஒரு செடி யைப் போன்று பரவி வளரும் தன்மையதே அன்றித் தனித்து வளரக்கூடியது அன்று என்கிறார். ஆனால் எலியட் ஸ்மித் (*Elliot Smith*) தும், பெர்ரி (*Perry*) யும் உலகெங்கும் பரவியுள்ள பல பண்பாடுகளுக்கும் பிறப்பிடம் எகிப்து என்றனர். மனிதன் கற்பனைத் (*imagination*) திறமும், புதுப் பொருள் புனை (*invention*) திறமும் அற்றவன்; மிகச் சிறந்த சூழ்நிலை ஒன்றே அவனுக்கு இத்திறமைகளைக் கொடுக்க வல்லது ; இச்சூழ்நிலை எகிப்து நாட்டில் மட்டுமே இருந்தது ; எனவே அந்நாட்டில்தான் முதலில் பண்பாடு தோன்றியது என்று சொல்லினர். இது பொருத்தமற்ற கருத்து என்பது சொல்லாமலே விளங்கும்.

வளர்ச்சியின் மூலம் ஒரு பண்பாடு இன்னொரு பண்பாடாக மாற்றம் உறுகிறதா (*evolution*) என்றோ, அல்லது சிதறலின் மூலம் ஒரு பண்பாடு வளர்கிறதா என்றோ கேட்பது சரி அன்று. ஏனெனில், இவ்விரண்டாலுமே பண்பாடுகள் வளர்கின்றன. எனவே ஒரு பண்பாடு எப்படி, எங்குப் பிறந்தது, எப்படியெல்லாம் மாறி எங்கெல்லாம் சிதறி எப்படி வளர்ந்திருக்கிறது என்பதை அவ்வப் பண்பாட்டின் கதையை அறிந்து தெரிந்து கொள்ள வேண்டுமே தவிர, ஒரு பண்பாடு இப்படித்தான் வளர்கிறது என்று ஒருவர் சொல்லிய கோட்பாட்டைக் கொண்டு தெரிந்துகொள்ள இயலாது.

மூலம் வேருக இருப்பினும் முடிவு ஒன்ருகவே இருக்கிறது என்று ஹட்டன் பெர்ரிக்கு எடுத்துக்காட்டும் பொழுது, நெருப்பு அசைகுழல் (*fire piston*) ஆசியாவிலும் பிரான்சிலும் தனித் தனிக் கண்டுபிடிக்கப்பட்டதாகவும், அட்ரினலின் (*adrenalin*) என்ற நச்சுப் பொருளை அம்பில் வைத்துச் சில அமேசான் இந்தியர்கள் எய்ததாகவும், கண்கட்டிலும் (*magic*) மருத்துவத்திலும் (*medicine*) எடுத்து மொழிதல் (*suggestion*) ஆகியவை பயன் படுத்தப்பட்டதாகவும் சொல்லுகிருர். ஆனல் பெர்ரி இவற்றை அவ்வளவாகச் செவி மடுக்கவில்லை. விஞ்ஞான ஆராய்ச்சிகளின் முடிவுப் பொருள்கள் ஓரிரண்டு இடங்களில் ஒன்ருக இருப்பினும் அதைக் கொண்டே சிதறல் மூலம் பண்பாடு வளர்வதில்லை என்று சொல்லிவிட முடியாது. ஏனெனின், பல ஆராய்ச்சிப் பொருள்களுக்கும் (*research objects*), பல முடிந்த பொருள்களுக்கும் (*finished products*) அடிப்படையில் இருப்பது மனிதனின் சிந்தனைத்திறம். இதுமனித இனத்துக்குப் பொதுவாக அமைந்த ஒன்று. உலகத்து எந்த மூலையில் எந்தவிதம் வாழ்ந்து வரும் ஒருவனுக இருப்பினும் அவனிடம் நினைவின் ஓட்டம் (*thought process*) என்னவோ ஏறத்தாழ ஒன்று போலவே (*similar*) அமைந்து இருக்கிறது. சூழ்நிலை காரணமாகவோ, சந்தர்ப்பம் காரணமாகவோ, தேவை காரணமாகவோ, அல்லது இன்னும் நம்மால் சரிவரப் புரிந்துகொள்ள முடியாத மனிதனின் சிந்தனைத் திறத்தாலோ இப்படி ஒரு நிலை உண்டாகிறது என்னலாம். எனவே மனிதன் வாழ அவனுக்குத் தேவைப்படும் பொருள்களை உண்டாக்குவதில் ஒருவனைப் போலவே மற்றொரு

வன் செயல் புரியவில்லை என்றாலும், தேவை எப்படிப் பொது வாக அமைந்ததோ, அப்படிப் பொருளும் அமைந்துவிடுகிறது. பல விதங்களில் சிதறல் ஏற்படவும் வழி உண்டு. எனவே அவ் வழிகளை ஆராய்ந்து பார்ப்பவர்க்குச் சிதறல் மூலம் பண்பாடு வளரக்கூடும் என்ற நிலைத்த உண்மை வெளிப்படும்.

சுருங்கச் சொன்னால், பண்பாடுகள் வளர்கின்றன ; ஒன்று போல் இன்னொன்றும் உண்டாகிறது. இப்படி உண்டாவதற்குக் காரணமாக இருப்பது சிதறல் அல்லது வளர்ச்சி மூலம் மாற்றம் உறல் (*diffusion or evolution*) ஆகும். ரிக் வேத அடி ஒன்று ஓர் உண்மையைத் தெரிவிக்கிறது : 'ஏகம் ஸத், விப்ரா பஹுதா வதந்தி '—உண்மை ஒன்றே ; அறிஞர்கள் அதைப் பலவாறு கூறுகின்றனர். எனவே இந்தியரின் பண்பாடு எப்படி வளர்ந்தது எனின், அதன் வளர்ச்சி ஒரு தனிப் பண்பாட்டின் வளர்ச்சி அன்று. ஆனால் பல்வேறு பண்பாடுகளின் கலவை என்று சொன்னால் மிகையாகாது.

ஜீயஸ் (*Zeus*) தலையிலிருந்து அதேனா (*Athena*) வந்ததைப் போல, எந்த நாட்டிலும் எந்தக் காலத்திலும் எந்த ஒரு பண்பாடும் முழுதும் வளர்ந்த நிலையில் வந்ததில்லை. இந்திய துணைக் கண்டம் இதற்கு விலக்கு அன்று. முதலில் குடியேறிய மக்கள் எவர் என்பதே கூடச் சரித்திரம் சரிவர நமக்குச் சொல்ல வில்லை. இங்கும் அங்குமாகக் கிடைத்துள்ள சில சான்றுகளை வைத்துக்கொண்டுதான் நாம் இன்ன தொகுப்பினர், இன்ன இனத்தினர் இந்தியாவுக்குள் குடிபுகுந்தனர் என்கிறோம். பிறர் குடியேறு முன்பு, இந்தியா ஒரு வெற்றிடமாக இருந்திருக்க முடியாது. எத்தொகுப்பினர் இந்திய மண்ணில் பிறந்து, தாமும் வளர்ந்து, தம் பண்பாடும் வளர்ந்து சிறந்திருந்தனர் என்பதும் திட்டமாகக் கூறமுடியாத ஒன்று. ஆனால் ஓர் உண்மை மட்டும் பல கால ஆராய்ச்சியின் பயனாகப் புலப்படுகிறது. அதுவே பல்வேறு பண்பாடுடையவர்கள் ஒரே காலத்தில் அன்றிப் பல காலங்களில் பலவாறாக வந்து சேர்ந்தனர் என்பதாகும். இப்படி வந்தவர்கள் உடற்கட்டு உடையவர்களாய், பிழைக்க வழிகள் பல தெரிந்தவர்களாய் இருந்திருக்கலாம். எனவே வந்தவர்கள் இருந்தவர்களை மாற்றம் உறச் செய்தும் இருக்கலாம். அல்லது

அவர்களே மாறியும் இருக்கலாம். ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு, இருவேறு அல்லது பல்வேறு தொகுப்பினர் ஒன்று சேர்ந்திருந்து, நாளடைவில் அவர்களின் வாழ்க்கை வளர்ச்சியின் போக்குப்படி பல பிரிவுகளாய்ப் பிரிந்து, பல கட்டுப்பாடுகளை உண்டாக்கி இருக்கலாம். இப்படியெல்லாம் இருந்திருக்கலாம் என்று சொல்வதே சரி.

நம் ஆராய்ச்சிக்கு உட்பட்ட சில உண்மைகளைப் பார்ப்போம்: பண்பாடு, நாகரிகம் இவற்றைப் பற்றி நாம் நன்கு அறியவேண்டுமானால் இவற்றுக்கு இருப்பிடமாக அமைந்த மனித இனங்களை நன்கு அறியவேண்டும். மனித இனங்களை இக்கால மானிடவியலார் உருவ அளவுகளாலும் (*metrical features*), உடல் வேறுபாடுகளாலும் (*physical differences*), வளர்ச்சிமூலம் உற்ற மாற்றங்களாலும் (*evolutionary changes*) ஒருவாறு வரையறுக்கின்றனர். ஓர் இனத்தின் வளர்ச்சியோ, அன்றி மாற்றமோகூடத் தேவை (*necessity*), சூழ்நிலை இடம், பொருள் இவற்றைப் பொருத்தவையே. எனவே அவற்றையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டியவர்களாகின்றோம். இப்படிப் பார்க்குங்கால் ஆப்ரிக்க இயோலிதிக் நீக்ராயிடுகள், ப்ரோடா-ஆஸ்ட்ரலாயிடுகள், மேற்கு ஆசியாவிலிருந்து வந்திருக்கலாம் என்று கருதப்படுகிற ஆஸ்ட்ரிக் மக்கள், தூரக்கிழக்கிலிருந்து பல்வேறு கிளைகளாக மங்கொலாயிடுகள், திராவிட மொழியினையும் பண்பாட்டையும் இந்தியாவுக்குள் கொண்டு வந்தவராய்க் கருதப்படும் ஆசிய மக்கள் தொகுதி, இனமொழி வேறுபாடுகள் உடைய இந்திய ஐரோப்பியர்கள், இந்திய ஆரியர்களாகவும், இரானியர்களாவும் இப்படி எண்ணற்ற இனங்களும், மக்களும், தொகுப்புக்களுமாகச் சரித்திர காலத்துக்கு முன்பு இருந்தே வந்தனரெனத் தெரிகிறது. இத்தனை பழம் இனங்களில் இந்திய மக்களுடன் ஒன்றிவிட்ட சிலவற்றுக்குக்கூடச் சான்று காட்ட வரலாற்று ஏடுகள் இல்லை. சரித்திர காலங்களில் மற்றவர்கள் வந்தமைக்குப் போதுமான பதிவுகள் (*records*) இருக்கின்றன. அசிரியோ-பாபிலோனியர்கள் (*Assyrio-Babilonians*), பழங்காலப் பாரசீகர்கள், கிரேக்கர்கள், ஸ்கைதியர்கள், பார்த்தியர்கள், மற்றும் வேறு இரானியர்கள், துருக்கியர்கள், முஸ்லிம் பாரசீகர்கள், அர்மீனி

யர்கள், தற்கால மேற்கு ஐரோப்பியர்கள் முதலியோர் வந்தது மட்டும் அல்லாமல் இந்திய வாழ்முறைக்கேற்ப மாறியதும் குறிப்பிடத்தகுந்தது. ஆயினும் அவர்கள் அவரவர் பண்பாட்டையும் காத்துக்கொண்டு வாழலாயினர். எனவே பல்வேறு இனத்தினர், பல்வேறு நாட்டினர், பல்வேறு பண்பாடுடையவர் வந்தாலும் அவர்களுக்கெல்லாம் இந்திய வாழ்முறை பொதுவாக அமைந்து, இந்தியராக ஒன்றுபடச் செய்யவும் உதவியாக இருந்ததைக் காண்க. இந்திய வாழ்முறை (*Indian way of life*) இந்திய நினைப்பு முறை (*Indian way of thinking*) ஆகியவற்றுக்கிடையே அவர்களும் வளர்ந்தனர்.

இந்தோ-ஆரியரின் பண்பாடு தொன்மை வாய்ந்தது. இந்திய மனிதன் வேதகாலக் கடைப் பகுதியாகிய கி.மு. 10-ஆம் நூற்றுண்டில் தோன்றியதாகக் கொள்ளலாம். வேத காலத் தொடக்கத்தைக் கி. மு. 14 அல்லது 15-ஆம் நூற்றுண்டாகக் கொள்ளலாம். இந்தியாவுக்குப் புறத்தே இரானிலும், வடமெசபடோமியாவிலும் வேத காலத்துக்கு முற்பட்ட ஆரியம் அல்லது இந்தோ-இரானியம் பேசப்பட்டதாகவும் கொள்ளலாம். கி. மு. 1500ல் வேதத்துக்கும் அவெஸ்தத்துக்கும் முற்பட்ட மொழி (*pre-vedic and pre-avesthan language*) பேசப்பட்டதாக மித்தானியப் (*Mitannian*) பதிவோலைகளும் (*documents*), வேறு சிலவும் காட்டுகின்றன.

நிசாதா (*Nisada*), கிராடா (*Kirata*), ஆரியர், திராவிடர் என்ற இந்நான்கு தொகுப்பினர் ஒன்று சேர்ந்து இந்திய வழக்க ஒழுக்கங்களை உருவாக்கினரெனக் கொள்ளலாம். ஒவ்வொரு தொகுப்பினரின் மனநிலை இப்படித்தான் இருந்திருக்க வேண்டும் என்று திட்டமாகச் சொல்ல முடியாது. எனினும் அவர்களுக்குள் சில கூறுகள் அல்லது இயல்புகள் மட்டும் வேறெங்கும் காணமுடியாதபடி அடிப்படையில் ஒன்றேபோல் காணப்படுகின்றன. இந்தியாவுக்குள் நுழைந்த மிகப் பழம் மக்கள் நெக்ராயிடுகள் (*Negroids*) என்னலாம். இவர்கள் பண்பாட்டின் மிகத் தாழ்ந்த படியில் இருந்தவர்கள். உணவு சேகரிப்பவர் (*foodgatherers*) களாக வாழ்ந்தார்களே அல்லாமல் உணவு பயிரிடுபவர் (*food growers*) களாக வாழவில்லை. அஜந்தாவிலுள்ள சிற்பங்

களில் நெக்ராயிடுகளின் இயல்புகள் (*Negroid features*) காணப்படுகின்றன. எனவே இவர்கள் இந்தியக் கலையில் 7 அல்லது 8-ஆம் நூற்றுண்டு வரை இடம் பெறுகின்றனர். ஆனுல் இப்பொழுது அஸ்ஸாமில் உள்ள மங்கொலாயிடு நாகர் களிடை மட்டுமே அவ்வியல்புகளுள் சில காணப்படுகின்றன. தென்னிந்தியக் காடுகளில் மிகச் சில நெக்ராயிடுகளைக் காணலாம். முதலில் தோன்றிய நெக்ராயிடுகளை - மாற்றம் அற்ற நெக்ராயிடுகளை (*full-blooded negroids*) - அந்தமான் தீவுகளில் மட்டுமே காணலாம்; இவர்களுடைய மனநிலை (*temperament*), இந்திய நினைப்பு முறை (*Indian way of thinking*) வளர்ச்சிக்கு எந்த அளவு உதவியுள்ளது என்பது சரியாகத் தெரியவில்லை. கோல் (*Kol*), அல்லது முண்டா (*Munda*) வாக உள்ள பாலினீசியா (*Polynesia*)வில் உள்ள ஆஸ்ட்ரிகர்கள் (*Austrics*) மனம் அல்லது தெய்வச் சத்து (*divine essence*) என்ற ஓர் எண்ணத்தைத் தோற்றுவித்தவர்கள் என்றும், இதை ஒட்டிப் பிற்காலத்து ஏற்பட்டதே பிரமம் எங்கும் நிறைந்த ஒரு பொருள் என்ற இந்து கோட்பாடு என்றும் கொள்ளலாம். இவர்களுக்குப் பிறகு மொழிப் பண்பாட்டுத் தொகுப்பின (*language culture group*) ராகத் திராவிடர்களையே கொள்ளவேண்டியிருக்கிறது. இவர்கள் மத்திய தரை மனிதரின் மூன்று வகைகளைத் தெரியப் படுத்தியவர்கள். இந்த மூன்று வகையினரும் பேசிய மொழியே தொல்திராவிடம் (*primitive Dravidian*) எனலாம். ஸம்ஸ் கிருதத்தில் த்ரவிட அல்லது த்ரமிட (*Dravida or Dramida*) என்று சொல்லப்பட்டிருக்கிற இம்மொழி[1], இம்மொழி பேசும் மக்களின் பெயரே. இதிலிருந்து வந்ததே இன்றைய தமிழ்

1. An important Mediterranean people of antiquity, the Cretans, called themselves Termilai (according to Herodotus, fifth century B.C.) and the Lykians of Lycia described themselves as Trmmli in their inscriptions, which belong to the same epoch The word 'Dramiza' became round about the time of Christ, 'Dramiza', and this was transformed by the Sinhalese into 'Damila' and by the Greeks into 'Damir' (as in Damirike, to mean the Tamil Country). By the middle of first millenium A.D., the Telugus described the Tamilians as Aravalu. which explained to mean 'the speechless people' (Sanskrit, a='not' and rava ='sound' or voice.); but it is more likely that it was just an old Dravidian tribal name; we find a people in South Sind named by the Greeks as Arabitai.

என்று கருதப்படுகிறது. திராவிடம் பேசிய மக்கள் இரானிலிருந்து இந்தியா வரைப் பரவியிருந்தனர். ஹாரப்பா, மோஹஞ்சோ தாரோவிலிருந்து அவர்கள் சீரிய எழுதும் முறையைத் தெரிந்திருந்தனர் என்று தெரிகிறது. ரிக் வேதத்தில் திராவிடர்களைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. நகர் என்ற சொல் திராவிடர்களால் கட்டப்பட்ட வீடுகள் அமைந்த இடத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டதாகவும் தெரிகிறது. வேதத்துக்கு முரண்பட்ட சிவன்—உமை, விஷ்ணு—திரு வழிபாடுகள் திராவிடர்களிடமிருந்து ஆரியர்கள் பெற்றவையாகவும் கருதப்படுகிறது. திராவிடம் பேசிய மக்கள் பெரும்பாலும் தாய்வழி (*matri archal*) உரிமை உள்ளவர் ; ஆரியர்களோ தந்தை வழி (*patriarchal*) உரிமை உள்ளவர்; இதில் மட்டும் ஆரியர்களே வென்றவர்களாகின்றனர். கேரளா போன்ற தனித்த இடத்தில் மட்டுமே தாய்வழி (*matriarchy*) உரிமை நிலவுகிறது. ஆரியர்களைவிடத் திராவிடர்களிடமே மத வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் கலை உணர்வு மிகுதியாகக் காணப்படுகிறது. உண்மையில் பிராமண வேத ஒழுக்கம் (*Brahminic discipline on its vedic side*) மிகக் குறைந்த அளவு கலை உணர்வு (*art*) பெற்றது என்றால் தவறாகாது.

கி. மு. 1500க்குப் பிறகு கிழக்கு ஆசியா மைனர், மெசெபொடாமியா, இரான் வழியாக இந்தியாவுக்கு வந்தவர்களே ஆரியர்கள் என்று சொல்லப்படுகிறது. ஆரியர்கள் ஒருதார மணத்தை ஏற்றவர்கள். துணைவி இன்றி எந்த ஒரு பெரும் சமூக, மத நிகழ்ச்சியிலும் அவர்கள் ஈடுபட முடியாது. பெண்களும் பூணூல் போட்டு வேதமும் கற்றனர். பிற்காலத்தில் ஆரியர் அல்லாத வேற்று இனத்திலிருந்து பெண்களை மனைவிகளாக ஏற்ற காரணத்தாலோ என்னவோ பெண்கள் உபநயனம் நின்றது; வேத பாராயணம் பண்ணுவதும் தவிர்க்கப்பட்டது. ஆரியர்கள் அறிவைப் (*intellect*) பெரிதாகவும், திராவிடர்கள் உணர்ச்சியைப் (*emotion*) பெரிதாகவும் கருதியவர்களெனச் சொல்லலாம். ‘ தியோ யோ நஹ் ப்ரஜோதயாத் ’ என்னும் காயத்ரி சுலோகத்தில் ஒரு வரி, கடவுளைப் பார்த்து, ‘அறிவு நல் வழிப்பட,’ வேண்டுவதாக உள்ளது நோக்கற்பாலது. ஞானமும் பத்தியும் அவற்றுடன் பற்றற்றுக் கடமை செய்யும் மனமும்

ஆரியர்களால் போற்றப்பட்டவை. இந்தியப் பண்பாட்டு வளர்ச்சி யின் ஒரு கூறாக, ஊறு செய்யாமை அல்லது அஹிம்சை எண்ணம் வளர்ந்தது. பௌத்தமும் சமணமும் இதை மிகவும் போற்றின. பிராமணத்துவமும் இதைக் கருத்தளவில் ஏற்கவே செய்தது. முற்கால ஆரியர்கள் மிருக பலி இட்டே சில சடங்கு களை நிகழ்த்தினர். எனவே அந்தக் காலத்தில் அவர்கள் ஊறு செய்யாமையை அவ்வளவாகக் கொண்டிலர் என்றால் பொருந்தும். ஆரியரின் பண்பாட்டைத்தெரிந்து கொள்ளும் பொழுது அவர்கள், ஒருவரின் வாழ்க்கையை நான்கு படிகளாக வகுத்தமை போற்றற்குரிய ஒன்று. ஒருவர் நூறாண்டுகள் உயிர் வாழ வேண்டும் என்று கொண்டு, அந்நூற்றாண்டின் முதல் காற்பகுதி யைப் படிப்பிலும் (பிரமசர்யம்), இரண்டாம் காற்பகுதியை வீட் டிலும் (கிருஹஸ்தம்), மூன்றாம் காற்பகுதியை ஓய்விலும் (வானப் பிரஸ்தம்), நான்காம் காற்பகுதியைத் துறவிலும் (சந்யாஸம்) செலவிடவேண்டும் என்று அவர்கள் பிரித்தனர். இவற்றை அறம், பொருள், இன்பம், வீடு என்னும் பகுப்புக்களுடன் ஒப்பிடுக.

இந்திய மனநிலையையும் பண்பாட்டையும் வளர்த்த மற்றொரு தொகுப்பினர் மாங்கொலாயிடுகள் (*mongaloids*) ஆவர். யசுர் வேதத்திலும் அதர்வ வேதத்திலும் இவர்களைப் பற்றி வருவதால், இவர்கள் கி. மு. 1000க்கு முன்பே கிழக்கு இந்தியா விலும் தென் இமயச் சரிவிலும் வாழ்ந்து வந்தனர் என்பது பெறப்படுகிறது. இவர்கள் இரண்டு அல்லது மூன்று இனப் பிரிவினர்களின் பிரதிநிதிகள் என்னலாம். ஆனால் பண்பாடு, மொழி மட்டும் ஒன்றே. தன்னம்பிக்கையும், அச்சமின்மையும் இவர்களிடம் தோன்றிய சிறப்பியல்புகள். சில நேரங்களில் மக்களிடமும் விலங்குகளிடமும் இவர்கள் பொல்லாதவர்களாக நடந்து கொள்ளக்கூடியவர்கள்.

இப்படிப் பல தொகுப்பினர், பல இனத்தினர், பல மொழி யினர், பல பண்பாட்டினர் ஒன்று சேர்ந்து இயன்ற ஒரு பண்பாடு உடையவளே இந்தியத் தாய் என்பது பொருத்தமாகும்.

# 3. இந்தியப் பண்பாடு

*(Indian Culture)*

தொன்மை வாய்ந்த (*primitive*) கைக்கோடரிப் பண்பாடு (*hand-axe culture*) தொல் பழங்கற்கால (*protolithic*) நாகரிகத்தைக் காட்டுகிறது. வடவார்க் காட்டிலும், சென்னைக் கடற்கரை ஓரத்திலும் 'மதருஸியன்' மாதிரிப் பொருள்கள் (*Madrasian samples*) கண்டெடுக்கப்பட்டன. இவை போன்ற பல ஆயுதங்கள் பல்வேறு ஆறுகளின் வண்டல் மண்ணிலும், கடற்கரை ஓரங்களிலும், பெரும்பாலும் தென் இந்தியாவில் கண்டெடுக்கப் பட்டிருப்பதாகப் பஞ்சன் மித்ரா (*Panchan Mitra*) கூறுகிருர்.

கைக்கோடரிப் பண்பாடு தொல்காலத்தில் தாய் வழிக்கு முதன்மை அளித்த, உணவுசேகரித்து வாழ்ந்த (*primitive matriarchal food collectors*) மக்களால் தோற்றுவிக்கப்பட்டும், வளர்க்கப்பட்டும் வந்ததாக இன்றும் கருதப்படுகிறது. இம் மக்கள் தொல்காலத்தில் தாய் வழிக்கு முதன்மை அளித்தமையின் முதற்படியைச் சேர்ந்தவர்கள். எனவே இவர்கள் ஏறத்தாழத் தொல் பண்பாட்டுடன் (*primitive culture*) தொடர்பு கொண்டவர்களாகின்றனர். சென்னைக்கு அருகே காணப்பட்ட 'மதருஸியன்' அதாவது கைக்கோடரிப் பண்பாடு, மிகமிகத் தொன்மை வாய்ந்த தொல் மாதிரிகளுள் (*primitive samples*) ஒன்றென மெங்கின் (*Menghin*) கருதுகிருர். இக்கருத்துச் சரியெனின், முதல் தாய்வழித் தலைமைப் பண்பாட்டு வட்டார (*first matriarchal culture-circle*) மும், அத்துடன் வேளாண் மைக்குக் காரணமாய் இருந்த முதல் முயற்சிகளும் தென்னிந்தியா வில் தோன்றின என்று கொண்டமை சரியே என்னலாம். இக்

கோட்பாடு எவ்வாறு இனவியல் தோற்றத்தால் (*ethnological configuration*) பெரிதும் போற்றப்படுகிறது என்பதைப் பின்னர்ப் பார்ப்போம். பிரான்ஸில் உள்ள அசூலிய வகைப் பழங்கற்கால (*Acheuleen type of protolithic*) கைக்கோடரிப் பண்பாட்டுக்கு ஒத்த (*similar*) ஒழுங்கு செய்யப்பட்ட (*refined*) கைக்கோடரிகள் பல, பிற்கால மதராஸியனில் துகள்களுடன் (ரேக்குகள்-*flakes*) தென்படுகின்றன. இது வெகு காலத்துக்கு முன்னேயே நிகழ்ந்த பண்பாட்டுக் கலவையினையோ அல்லது பழம் நாகரிகத்தின் ஒரு செம்மையினையும் சிறப்பினையுமோ தெரிவிக்கிறது. இந்தியாவில் இரண்டு வகைப் பழங்கற்காலக் கைக்கோடாரிகள் சிறப்பாக உள்ளன: அவை, சென்னையின் (அ) சுற்றுப்புறத்திலேயே மிகுதியாக இருக்கும் நீண்ட சதுரக் கைக் கோடரியும் (*rectangular hand-axe*), (ஆ) தலை நறுக்கி (*giullotine*) போன்ற வேண்டுமென்றே சமச் சீர்மையற்றதாகச் செய்யப்பட்டதான கைக்கோடரியுமே (*intentionally assymetric hand-axe*) ஆகும்.

'மதராஸியன்' வகையைச் சேர்ந்த எல்லாக் கருவிகளின் உருவ அமைப்பும் செய்முறையும் (*shape and technique*), ஆப்ரிக்க, மேற்கு ஐரோப்பிய அசூலியப் பழம் பரப்புகளைச் சேர்ந்த பலவிதக் கருவிகளை ஒத்திருத்தல் இந்தியப் பழங்கற்கால நாகரிகத்தினருடன் இந்நாட்டினர் பிறவிக் கலப்புக் கொண்டிருப்பரோ என்பதைத் தீவிரமாக ஆராயச் செய்கிறது. தென் அரேபியா, மத்திய ஆப்ரிக்கா ஆகியவற்றின் வழியாக மேற்கு ஐரோப்பாவுக்கு வெகு காலத்துக்கு முன்பே இந்தியாவில் தோன்றிய வேளாண்மையும், அத்துடன் தாய்வழித் தலைமை நாகரிகமும் சென்றிருக்கலாம். அரேபிய, வடஆப்ரிக்கப் பாலை வனப் பகுதிகள் அந்தக் காலத்தில் பயிர் வளர் பசும் நிலங்களாக இருந்தனவென்பதை நாம் எப்பொழுதும் நினைவிலிருத்திக் கொள்ளவேண்டும்.

கர்நூலில் உள்ள பில்லா சுர்கக் குகைகளில் (*Billa surgam caves*) காணப்படும் எலும்புகளால் செய்யப்பட்ட மிகத் தொன்மை வாய்ந்த கருவிகள் மற்றொரு வகைப் பழங்கற்கால நாகரிகத்தைக் காட்டுவனவாகக் கருதப்படுகிறது. பில்லா சுர்கக் குகைகளில் வைல்ட்கிர்ச்லி (ஸ்விட்ஸர்லாந்து)யில் உள்ளதுபோல

மிருகங்களின் மண்டையோடுகள் காணப்படாதது நோக்க வேண்டிய ஒன்று மட்டும் அன்று ; உண்மையான ‘எலும்புக் கருவி நாகரிக’த்தை (*bone tool civilization*) இது வலியுறுத்தவும் செய்கிறது. இருவிடங்களிலும் தாடை எலும்புகளும் (*jaw bones*) பற்களும் காணப்படுகின்றன. இதனால் இந்தக் காலத்திலும் சில சைபீரிய மக்கள் செய்துவருவதைப்போல அந்தக் காலத்தில் குகைகளுக்கு வெளியே மண்டையோடுகள் தெய்வங்களுக்குச் (*gods*) செலுத்தப்பட்டன என்பது பெறப்படுகிறது. எனவே குகைகளுக்குப் புறத்தே இருந்த மண்டையோடுகள் பாழாகியும், குகைகளுக்குள் இருந்த கருவிகளும் (*implements*) நினைவுச் சின்னங்களும் (*relics*) நன்னிலையில் இருப்பதும் இயற்கையே. பழம்பரப்பில் முன்னேறிய நியோலிதிக் நாகரிகத்தைப் பழம்பரப்பில் முன்னேறிய (*developed types*) கைக்கோடரி (*hand axe*) வகைகள் மிர்ஜபூரிலும், பன்தா (*Pantha*) விலும் காட்டுகின்றன. இதிலிருந்து தென்கிழக்கு ஆசியாவில் உள்ள பரந்த நியோலிதிக் கைக்கோடரிப் பண்பாடு இந்தியாவில் தோன்றியது என்பது பெறப்படுகிறது. எனவே வேளாண்மையும், அதன் மதராஸியப் பழங்கற்கால முன்னோடிகள் (*fore-runners*) போல, இந்தியாவில் தோன்றியிருக்க வேண்டும்.

ஆனால் மைக்ரோலிதிக் துகள் தொழில்கள் (*microlitic flake-industries*) முக்கியமாக மத்திய இந்தியப் பகுதியில் மிகை. இப்பகுதி இப்பொழுது சிறப்பாக டோடமி சாதிகளும் பழங்குடிகளும் (*totemistic castes and tribes*) இருந்து வரும் நிலப் பரப்பாக உள்ளது. துகள் தொழில்களும் (*flake industries*) டோடமி நாகரிகங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை என்று நாம் அறிகிறோம். இந்திய மைக்ரோலிதிக் துகள்கள் அளவில் சிறியவை (*microlithis*); இவை ஒரே தொல்பொருட்கலையியல் காலத்தில் (*archealogical epoch*) ஆப்ரிக்காவிலும் மத்திய ஆசியாவிலுமுள்ளவற்றுடன் தொடர்புள்ளனவாக இருக்கின்றன. மைக்ரோலிதிக் துகள்களை இந்தியாவில் மூன்றாக வகைப்படுத்தி உள்ளனர்.

அவையாவன : முதலாவதாகப் பந்தா (*banda*) விலும், காலிஞ்ச (*kalinjar*)ரிலும், தெற்கே கிருஷ்ண நதி வரையிலும்

காணப்பட்ட மத்திய இந்திய வகை. இது பின் சொல்லப் படுவதைவிட முரடானதும் பெரியதுமாகும்.

இரண்டாவதாகக் கிழக்கு விந்தியத் தொடர்களில் மட்டும் அல்லாமல் கன்னியாகுமரி வரை இந்தியா முழுதும் சிதறி உள்ள ஜபல்பூர் வகை. கரடுமுரடானதும், குட்டையாக-நீண்டு கூர்மையுடையதாகவும் உள்ள ஒரு வித மண்பாண்டம் இவ்வகையைச் சேர்ந்தது மத்திய ஆசியத் துகள் தொழில்கள் இவைகளை ஒத்தனவே. சிறப்பாக, ஷபரக்கு(*Shabarak*) என்னும் இடத்தில் உள்ளவை நோக்கத் தகுவன. இவ்வகை வட ஆப்ரிக்கக் காப்சியத் துகள்களுடன் தொடர்புள்ளதெனச் சொல்லப்படு கிறது. மெங்கின் (*Menghin*) மூன்றுவது மராஹ பஹார் என்ற ஒரு வகையையும் சொல்கிருர்.

மூன்ருவதாக, வெகு சிறிய கருவிகளாலும், சிவப்புக் குகைச் சித்திரங்களாலும் சிறப்பிக்கப்பட்டுக் குறிப்பாக மைக்ரோலிதிக்கின்பாற்பட்ட மராஹ பஹார், காப்சியன் வகையைச் சேர்ந்த வட ஆப்ரிக்க மைக்ரோலிதிக் துகள் தொழில் களின் பிற்கால நிலைகளை ஒத்திருப்பது வெளிப்படை. இந்த இரண்டு வகைக் கருவிகளைச் செய்த மக்களிடையே பிறவித் தொடர்பு (*genetic relationship*) இருந்தமையை மெய்ப்பிக்க மேற்கூறப்பட்ட ஒப்புமைகள் போதுமானவை எனின், இந்திய, வட ஆப்ரிக்க மக்களிடையே மட்டும் அல்லாமல், மைக்ரோலிதிக் காலத்திய, இந்திய, மேற்கு ஐரோப்பிய மக்களிடையே கூட நெருங்கிய பண்பாட்டுச் சேர்க்கை ஏற்பட்டிருந்திருக்க வேண்டும்; இனச் சேர்க்கை (*racial affinity*) யும் ஏற்பட்டிருந்திருக்கலாம். ஆங்கிலோ—இந்திய உறவுகூட, 'ஞாயிற்றின் கீழ் எதுவும் புதிதன்று' என்ற கிரேக்கப் பழமொழிக்கு இணங்க அமைந்ததே.

இந்தியாவின் புதுக் கற்கால நாகரிகம், விசித்திரமான மெருகும் உருவமும் தரப்பட்ட ஒருவகைப் பரந்த மைக்ரோலித் கைக் கோடரிகளின் சீரிய மாற்றமாகிய வளைந்த வடிவக் கோடரிகள் (*round axes*) மிகையாக இருப்பதைக் காட்டுகிறது. வளைந்த கோடரிப்பண்பாடு பெரும்பாலும் ஒரு புதுக் கற்காலக் கிராம நாகரிக (*neolithic village civilization*) மாகவே இருந்தது என்னலாம். இத்துடன் பன்றி வளர்த்தலும், வேளாண்மையின்

மேலான அமைப்பும், இன்னும் பிற இரண்டாம் நிலைத் தாய்வழித் தலைமைப் பண்பாட்டுக்கே உரிய பண்பாட்டுச் சிறப்புக்களும் சேர்ந்திருந்தன. இன்றும் முண்டா மொழிகள் பேசப்படும் மத்திய இந்தியப் பாகங்களில் சிறப்பாக இருக்கும் தோள்பட்டையுடன் செய்த பாறைக் கருவி பாரன்ஹைன் கெல்டர்ன் (*Baron Heine-Geldern*) படி, ஆஸ்ட்ரோநீசியர்கள் தென்கடலை (பசிபிக் மாகடல்) நோக்கித் தென்கிழக்கு ஆசியா மூலம் இடம் பெயர்ந்த பொழுது, விட்டுப்போன பழம்பொருட்கலைச் சுவடு (*archaelogical traces*) களுடன் பெரிதும் ஒத்திருக்கும். இது பிற்காலச் சீர் செய்யப்பட்ட ஒரு வகையைச் சேர்ந்தது.

தென்-மத்திய இந்தியாவெங்கும் சிதறிக்கிடக்கும் பல பெருங்கற்காலக் கல்லறைகளும், நினைவுச் சின்னங்களும்—இந்தியாவில் பெருங் கற்கால நினைவுச் சின்னங்களின் காலம் இன்னதென்று திட்டமாகத் தெரியவில்லை யெனினும்—இக்காலத்தவை என்றே சொல்லலாம். மேற்கு மலைத் தொடரில் (*Western ghats*) உள்ள குரும்பர்கள் தேசத்தில் மிகத் தொன்மைவாய்ந்த பெருங் கற்காலக் கல்லறைகளும் (*megalithic graves*), ஒருகற்சிற்பங்களும்(*monoliths*) காணப்படுகின்றன. இக்குரும்பர்கள்(*Kurumbas*) இன்றும் அவை போன்ற சின்னஞ் சிறு கட்டடங்களை அமைக்கின்றனர். பிற பெருங்கற்காலக் கல்லறைகள் இரும்புக் கருவிகளுடன் மிக நெருக்கம் கொண்டவைகளாக இருக்கின்றன. தோண்டி யெடுக்கப்பட்ட கருவிகள், முதல் கட்டடக்காரர்களால் கல்லறைகளுள் வைக்கப்பட்டன என்பது இதனுல் மெய்ப்பிக்கப் படவில்லை என்ருலும், சில பெருங் கற்காலக் கட்டடங்கள் இந்திய வரலாற்றில் பிற்கால முழுதும் கட்டப்பட்டன என்பது கொள்ளக் கூடியதே. இந்த நாள்வரைப் பெருங்கற்காலத் தன்மை (*megalithism*) ஓரளவு சிறந்திருந்ததாகக் கொள்ளலாம். இப்பொழுதும் இத்தன்மை மத்திய இந்தியாவில், ஆனுல் பெரும்பாலும் அஸ்ஸாமில், காசி (*khasi*), காரோ (*garo*) க்களிடமும், இவர்களைவிட நாகர்களிடமும் (*Naga tribes*) மிகுத்தும் காணப்படுகிறது.

இந்தியப் பழம்பொருட்கலையியல் காட்டும் செம்புக் கற்காலம் (*chalcolithic epoch*) புதுக்கற்கால நாகரிகத்தை விடச் சிறந்தது. மோஹஞ்சோ-தாரோ, ஹாரப்பாவில் பழங்கலையியலார் தோண்ட

லின் மூலம் இந்த உண்மையை அறிந்தனர். பழங்கால மெஸெபொடாமியாவில் இருந்தவற்றுக்கு நேரான முத்திரைகள் (*seals*) அங்கே காணப்பட்டன. லர்கானு (*Larkhana*) வுக்குத் தெற்கே ஏறத்தாழ 25 மைல்களுக்கு அப்பால் மொஹஞ்சோ தாரோவில் உள்ள பிற்காலப் புத்த ஸ்தூபியைப் பார்வையிட்டுக்கொண்டிருந்தபொழுது, 1922-ல் ரகல்தாஸ் பானர்ஜி வியக்கத்தக்க அளவுகளுடனும் உயர்ந்த நாகரிகத்துடனும் அமைந்த ஒரு பழம் நகரத்தைக் கண்டார். மோஹஞ்சோ-தாரோ, ஹாரப்பாவை அகழ்ந்த பிறகு பழைய வரலாறே இந்தியாவில் மட்டுமின்றி உண்மையில் உலகெங்கும் மாறிவிட்டது என்னலாம்.

வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட மோஹஞ்சோ தாரோவில் காணப்படும் கிழக்கும் மேற்குமாக, தெற்கும் வடக்குமாக நேருக்கு நேர் அமைந்த அகன்ற தெருக்களிலிருந்து 5 அல்லது 6 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட நகரத்தை உண்டாக்கியவர்களின் மனப்போக்கு இன்னதென்பது தெரிந்து கொள்ள முடிகிறது. நீண்ட சதுரத் தெருக்கள் ஒன்றுக்கொன்று சிறுவழிகள் மூலம் இணைந்தும், ஒவ்வொரு தெருவிலும் கால்வாய் அமைக்கப்பட்டும் காட்சி அளிக்கும் இந்நகர அமைப்பு, மத்திய கால (*mediaeval period*) நகர அமைப்பைக் காட்டிலும் மேலானதே. தற்காலத்தில் கூடப் பல நகரங்கள் இதற்கு ஈடானவைகளாக இல்லை. ஆனால் இப்பழம் நகரத்தின் பெரும்பாகம் இன்னும் காணப்படாமல் குன்றுகளின் அடியில் அகப்பட்டுக் கிடக்கின்றது. எல்லாவற்றையும்விட முதன்மை பெற்ற கட்டடங்களில் குளித்தற்கு என்று ஒரு பெரிய அறை இருப்பதும், பல்வேறு வீடுகளில் பல சிறு குளியலறைகள் இருப்பதும் தெற்றெனத் தெரிகிறது. மதத் துறவிகள் அவரவர் தகுதிக்கேற்பப் பல்வேறு சிறு அறைகளில் இருந்தனர். இச்சிந்துவெளி நாகரிகத்தின் பொது இயல்பைப் பார்த்தால், ஐயம் இன்றி அதன் தாய்வழித் தலைமை இயல்பும், அண்மைக் கிழக்கு (*near east*) நாகரிக முறைகளும், அருமையாகச் செதுக்கப்பட்ட அழகிய நாட்டியக்காரியின் உருவமும் தென்படும். மதத்தொடர்பு கொண்ட பெண்பாலரே செம்மையான குளியலறைகளை உண்டாக்கினர் என்னலாம். மண்பாண்டம் செய்தல், கட்டட அமைப்பு முறை, எருது பூட்டிய வண்டிகளின் அமைப்பு, அளவை

முறை, சிவசக்தி வழிபாடு, துறவி உருவங்கள் இவை யாவும் மோஹஞ்சோதாரோ, ஹாரப்பாவின் மதத்துறை, சமூக அமைப்பு இவற்றைத் தெரிவிக்கின்றன. இதனல் (அ) மிகப் பழங்கால நாகரிகம் பல நூற்றுண்டுகளின் மாற்றங்களேயும் மீறி இப்பொழுதும் இருந்து வருகிறது என்பதும், (ஆ) மோஹஞ்சோ தாரோ, ஹாரப்பாவின் சிந்துவெளி நாகரிகம் ஆரியர் காலத்துக்கு முற்பட்டும், சிறந்தும் இருந்தது என்பதும் பெறப்படுகின்றன.

இந்தியாவில் ஆரியர் காலத்துக்கு முற்பட்ட ஒரு நகர நாகரிகம் தாய்வழித் தலைமை இயல்புடன் இருந்தமை கண்டு-பிடிக்கப்பட்டதை நன்கு பாராட்ட வேண்டுமானல், மேற்சொன்ன இரண்டு அடிப்படை உண்மைகளை மக்கள் இனப்பிரிவு நூல் (*ethnology*) மாணவர் மனத்தில் கொள்ளவேண்டும்.

மார்ஷல் என்பவர் சிந்து வெளி நாகரிகத்தில் பதினெரு பண்பாட்டியல்பு குறியீடுகளைத் தருகிருர். இவற்றிலிருந்து தற்கால இந்திய நாகரிகம் முற்காலத்து மோஹஞ்சோ தாரோ வின் தாய்வழித் தலைமை நகர அரசுகளி (*matrilineal city states*) லிருந்தும், சிந்துவெளி நாகரிகம் வளர்ந்திருந்த பிற இடங்களிலிருந் தும் சில பண்பாட்டியல்புகளைப் பெற்றது என்பது பெறப்படு கிறது. இப்பொழுதும் இருந்து வருகிற நாயர் போன்ற தாய்வழித் தலைமைச் சாதியினருடன் இவற்றை ஒப்பு நோக்கின், இவ்வடிப் படை நுணுக்கங்கள், மற்ற இந்திய சாதிகளில் இருப்பதைவிடக் கலப்பின்றித் தெளிவாக இருந்து வருவதையும், படையெடுத்து வந்த ஆரியர்களுடனும், அவர்களின் ஆடு மேய்த்த நாடோடி வாழ்க்கையுடனும் ஒன்றியும் கலந்தும் உள்ளதையும் காணலாம். அம்மன் போன்ற பெண் தெய்வங்களை வணங்கிய தும், மரத்தை வணங்கியதும், லிங்கத்தை வணங்கி அதையே உயர்ந்த கலையாகக் கொண்டதும், பட உருவத்தில் விசித்திர விலங்குகளைக் காட்யதும், நீண்ட சதுரமாக அமைத் துச் சீரும் திறமையும் விளங்கக் கட்டடம் கட்டியதும், பாண்டங் களிலும் அணிகளிலும் பல விதங்களை அமைத்ததும், கோட்டை களோ, பெருங் கோவில்களோ, போர்க் கருவிகளோ, குதிரை களோ, இரும்பு ஆயுதங்களோ இல்லாததும் ஆகிய இவை எல்லாம்

சிந்துவெளி நாகரிக இயல்புகளைத் தெரிவிக்கின்றன. இவை இப்பொழுதுள்ள தாய்வழித் தலைமை இந்திய சாதியினரை அண்மைக் கிழக்கு நாட்டு மக்களுடனும் (*peoples of the Near East*), மத்தியதரைப் பள்ளத்தாக்கில் (*mediterranean basin*) உள்ள மக்களுடனும் ஒப்பு நோக்கச் செய்கின்றன. இங்குப் பண்பாட்டுச் சரித உறவு (*culture historic relationship*) காணப்பட்டிருக்கிறது.

கி. மு. 2500ல் சிந்துவெளி நாகரிகம் உச்ச நிலையை அடைந்திருக்கக்கூடும். இந்நிலை அமைதியுடன் கூடிய நீண்ட கால வளர்ச்சிக்கும், வளர்ச்சி மூலம் ஏற்படும் மாற்றத்துக்கும் பிறகே எய்தியிருக்க முடியும் என்பது எளிதில் விளங்கக் கூடியதே.

மெசொபொடாமியாவில் உள்ள பழைய பண்பாடு வளர்ந்த இடங்களுடன் இந்தியப்பண்பாடு தொடர்பு கொண்டிருந்ததில் ஐயம் இல்லை. ஆனால் மெசொபொடாமியாவின் பண்பாடு மேற்கிலிருந்து இந்தியாவுக்கு வந்ததா அல்லது இந்தியாவிலிருந்து அந்நாட்டுக்குப் போயிற்று என்பதைத் திட்டமாகச் சொல்ல முடியவில்லை. சில உண்மைகள் அப்படியும், வேறு சில இப்படியுமாக உள்ளன. அக்கால மெசொபொடாமிய நாகரிகமும் சிந்துவெளி நாகரிகமும் பண்பாடு என்ற ஒரு மரத்தின் இரு கிளைகளாக இருந்து, அம்மரத்தின் வேர்கள் இரு நாடுகளுக்கும் இடையே ஊன்றி இருந்திருக்கலாம்.

திராவிட மொழிகளுடனும், திராவிட மொழி பேசும் தென்னிந்திய மக்களின் பழம் நாகரிகத்துடனும் சிந்துவெளி நாகரிகம் தொடர்பு கொண்டு இருந்திருக்கலாம் என்பது பெரும்பாலும் சரியே. பலுசிஸ்தானில் உள்ள பிராஹி (*Brahui*) என்ற திராவிட மொழிகள் பேசப்படுகிற திட்டு ஒன்று சிந்துவெளிப் பள்ளத்தாக்கின் அருகே அழியாமல் இருந்ததென்பது, இக்கோட்பாட்டை வலியுறுத்தும் இன்னொரு எடுத்துக்காட்டாகும்.

ஏறத்தாழ கி. மு. 1000ல், ஆரியர்கள் இந்தியாவிற்குள் புகுந்த பொழுது, உயர்ந்த சிந்துவெளி நாகரிகம் ஏற்கெனவே மறைந்து விட்டது என்னலாம். இந்தியாவில் முதல் ஆரியர்

களின் நாகரிகமும் கட்டடக் கலையும் தாழ்நிலையிலிருந்தமையால் வேதகாலத்தின் முற்பகுதி, மிகச்சில பழம்பொருட்களைப் பொருள் களையே (*archaelogical objects*) விட்டுள்ளது. அவ்வாரியர் கள் கட்டிய களிமண் குடிசைகளும் அவர்களின் பெரும்பாலான கருவிகளும் மரம், களிமண், மூங்கில், தோல் போன்ற எளிதில் பாழ்படக்கூடிய பொருள்களால் ஆனவை.

2. மொழிமாற்றம் (*the linguistic configuration*): முதன்மையான இந்திய மொழித்தொகுப்புக்களை முறையுடன் சுருக்கமாகக் கூறுமுன் மொழி, மதம், அரசியல் நாட்டுரிமை, தொன்றுதொட்டு நிலவும் நாட்டுரிமை (*political and traditional nationality*), உடற்கூறுகளில் காணப்படும் இன நெருக்கம் (*physical racial affinity*) ஆகிய இவை எல்லாம் வேறு வேறு என்றும், ஒன்றுக்கு ஒன்றைத் தவருக எடுத்தாளக்கூடாது என்றும் அறிய வேண்டும்.

ஹிந்தி, மராத்தி, பெங்காலி, புஷ்து, பாரசீகம், அர்மீனியம் போன்ற ஆரிய மொழிகளைப் பேசும் ஆரிய மக்களை 'ஆரியர்கள்' என்கிருேம். ஆனல் 'ஆரியப் பண்பாடு' என்றும், 'ஆரிய மதம்' என்றும், 'ஆரிய இன வகை' என்றும் கூட அடிக்கடி சொல்கிருேம். இப்படிச் சொல்வது சிறிதும் சரியன்று. நாடோடி களாக ஆடுகளை மேய்த்துவந்த ஆரியர்களின் அக்காலப் பண் பாடு, இக்காலத்தில் எங்கும் இல்லை. அக்கால ஆரியப் பண்பாடு அதற்கு முற்பட்ட இந்திய நாகரிகங்களுடன் திருமணம் போன்ற பலவிதத் தொடர்புகளால் கலந்து விரிந்தும், வளர்ந்தும், மாறி யும் விட்டது. அவர்களுடைய சொந்த நாகரிகம் அவர்களுக்கே உரியதாக இல்லாமல், பெரிதும் ஐரோப்பிய மொழிகளைப் போலவும், ஊரல்—ஆல்டேக் மொழிகளைப் பேசுவோர் நாகரிகம் போலவும் மத்திய ஆசியா, ஐரோப்பா, அண்மைக் கிழக்கு நாடுகளில் பேசப்படும் மொழிகளைப் பேசுவோர் நாகரிகங் களைப்போலவும் உள்ளது. வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட காலத்தில் ஆரிய மொழிகள் பேசிய மக்களுடைய நாகரிகத்துக் கும் நாடோடிகளாக ஆடுகள் மேய்த்துத் திரிந்தவர்களுடைய நாகரிகத்துக்கும் உண்மையில் அமைந்த வேறுபாடு இன்ன தென்று நாம் தெளிவாகச் சொல்ல முடியாது.

ஆரிய மொழிகள் பேசும் மக்களுடைய மதம், பெரிதும் மாறி, வளர்ச்சி பெற்ற உருவத்தில் திராவிட மொழிகள் பேசும் பல கோடி இந்துக்களிடம் பரவலாயிற்று. ஆனால் "பில்" (*Bhil*) என்ற பிரிவினர் ஆரிய மொழி வகையாகிய பீலி (*Bhile*) மொழியைக் கையாண்டாலும் ஆரிய மதத்தைக் குறைந்த அளவாகவே தழுவினர். திராவிட மொழி பேசும் மதராஸ் அல்லது மலையாளப் பிராமணர்களைப் போல அவ்வளவாகத் தழுவவில்லை என்னலாம்.

இந்தியாவிற்குள் குடியேறிய ஆரியர்களின் உடலமைப்பை விட அவர்களுடைய பண்பாட்டையும் மதத்தையும் பற்றி நாம் அறிவதே மிகுதி. எனவே இன ஒருமைப்பாடு (*racial identity*) தெரிந்துகொள்ள முடியாததாகவே இருக்கிறது. இந்தியாவில் முதலில் இருந்த மக்களுடன் மொழியாலும் சமூக அறிவாலும் (*language and social conception*) கொண்ட ஒருமைப்பாட்டை விட, இனக் கலப்பால் கொண்ட ஒருமைப்பாடே மிகை என்னலாம். திராவிட மொழிகள் பேசும் கேரளத்தில் உள்ள நாயர்களும் (*Nayars*), நீல்கிரிக் குன்றுகளில் உள்ள தோடர்களும் (*Todas*), வட இந்தியாவில் (*upper India*) உள்ள ஆரிய மொழிகள் பேசும் முக்கிய இடங்களில் காணப்படும் இன வகைகளுக்கு உரியவர்களும், ஆரியமொழிகள் பேசும் பல வங்காளிகளும், மத்திய இந்தியர்களும், பஞ்சாபிகளும்; காஷ்மீரிகளும் கிழக்குத் திராவிடம் அல்லது மங்கொலாயிடு, திபெத்தோ—பர்மீஸ் பேசும் மக்களுக்கு உரிய இன இயல்புகளை உடையவர்களாக இருக்கின்றனர். செஞ்சு (*Chenchu*), ஏனதி (*Yanadi*), காடர் (*Kadar*), இருளர், ஆச்லர் (*Hasalar*), குரும்பர், சோலகர் (*shologa*) போன்ற பலவிதக் காட்டுப் பழங்குடி மக்களும், இப்பொழுது திராவிட மொழிகளுள் ஒன்றையே கொச்சையாக வேனும் பேசுகின்றனர்; அவர்களுடைய சொந்த மொழிகளை மறந்தனர்; ஆனால் ஏறத்தாழ அவர்களுடைய இன ஒருமைப்பாட்டைக் காத்து வந்தனர். ப்ராஹுிக்களோ திராவிடமொழியைக் காத்தனர். ஆயினும் அவர்கள் உடலமைப்பில் சிந்துவிலும் பலுசிஸ்தானிலும் உள்ள ஆரிய மொழி பேசுவோரிலிருந்து மிகுந்த வேறுபாடுடையவர்களாக இல்லை.

இவ்வ யாவும் பொதுவானவை என்றாலும், இந்தியாவின் பெரும்பகுதியில், ஒருவன் முன்னோர் பண்பாட்டைத் தாய் மொழியின் மூலமோ, மதத்தின் மூலமோ, இனப்பற்றின் மூலமோ தெரிந்துகொள்ள முடியாது என்று அறிகிறோம். பல்லாயிரக்கணக்கான இந்தியக் குடும்பங்கள் முஸ்லிம்களாக மாறி, அரேபிய, பாரசீக, மங்கோலிய, துருக்கிய இரத்தம் ஒரு துளியும் அவர்கள் உடலில் இன்றியே கலப்புமணம் செய்துகொண்டுள்ளனர். அரேபிய வியாபாரிகளின் அல்லது போர் வீரர்களின் வழிவந்தவர்களுள் பலர் அவர்களுடைய இந்து அல்லது புத்த மதத்தினர்களின் சாதி அல்லது குடும்பத் தொகுதியில் வளர்ந்தனர். இந்தியத் தாய்வழித் தலைமைச் சமூகங்களில் இப்படித் திகழ்வது புதிதன்று.

அறியாமையோடு கூட, அறிவியற்கல்வி இல்லாமையும் இவற்றுடன் வேண்டுமென்றே மதிப்பில் குறைக்கும் தன்மையும் சேர்ந்து குழப்புவதால் மேற்சொன்ன உண்மைகளை அழுத்தமாகச் சொல்ல இயலவில்லை. பண்புடைய முன்னோர்வழி வந்ததாகச் சொல்லிக்கொள்வது மனித இயற்கை. ஆளும் வகுப்பு அல்லது ஆளும் அரசியல் தொகுதி (*ruling political unit*) யினையே இந்தப் 'பண்பு' குறிக்கின்றது. எனவே எந்தக் காலத்திலும், எந்த இடத்திலும் 'இந்தியாவினுள் புகுந்த ஆரியரின் வழி வந்தவன்' என்று சொல்லிக்கொள்வதில் ஒரு பெருமை இருப்பின், ஒவ்வொருவனும் தன் முன்னோர் ஆரியர் என்று தான் சொல்வான். இன்னோரிடத்தில் ஒருவன் தன்னை மங்கோலிய வழி வந்தவன் என்று சொல்லிக்கொள்வதில் ஒரு பெருமை இருப்பின், அப்படியே சொல்லத் தயங்கான். இது எளிய மனிதனின் இயல்பான போக்கு. ஆனால் அறிவியல் அறிஞன் இப்போக்குக்கு உட்படக்கூடாது. பல்வகை மொழி, மத, சமூக, பொதுப், பண்பாட்டுப் பொருள்களைச் செவ்வனே தெரிந்துகொண்டு இவற்றுக்குச் சான்றுகள் கண்டு தெளிய முடிந்தவர்களே மேற்சொன்ன போக்குக்கு உட்படாதவர்கள்.

இந்திய மொழிகள் கீழ்க்கண்ட நான்கு பெரும் பிரிவுகளில் அல்லது மொழிக் குடும்பங்களில் அடங்கியவை என்னலாம்.

அவை,

(1) திராவிட மொழித் தொகுதி (*Dravidic*)
(2) இந்தோ-ஐரோப்பியன் (*Indo-European*)
(3) ஆஸ்ட்ரோ-ஆசியன் (*Austro-Asiatic*)
(4) திபேதோ-பர்மியன் (*Tibeto-Burmean*) என்பனவாம்.

பெரும்பாலும் திராவிட மொழிகளே இந்திய உள்நாட்டுப் பெரும் நகர—நாகரிகங்களை முதலில் கொண்டிருந்தவை. இவ்வுண்மை மோஹஞ்சோ தாரோ முதலிய இடங்களின் அகழ்ந் தெடுப்புக்களி (*excavations*) லிருந்து பெறப்படுகிறது. ஆனால் திராவிட மொழிகள் இந்திய உள்நாட்டுத் தொன்மை மக்களின் மொழியை அடிப்படையாகக் கொண்டவை அல்ல. பலுசிஸ்தானில் இருந்துவரும் பிராஹுி (*Brahui*) மொழி ஒன்றைத் தவிர, பெரும்பாலான திராவிடமொழிகள் தென்னிந்தியாவில் மட்டுமே காணப் படுகின்றன. இன்று திராவிட மொழிகள் பேசும் பல்வேறு மக்களிடையே பண்பாட்டிலோ, இனத்திலோ ஓர் ஒற்றுமையைக் காண முடியவில்லை. குட்டையான காட்டுப் பழங்குடி மக்கள் அவர்களுடைய தொன்மையான பண்பாட்டுடன் தென்பகுதியில் திராவிட மொழி பேசுகின்றனர். மிகவும் வேறுபட்ட ஆந்திர, சாளுக்கிய, பல்லவ நாகரிகத்தினரும் திராவிட மொழி பேசினர். தொல்காப்பியம் போன்ற பண்டை இலக்கணமும், குறள் போன்ற பண்டை இலக்கியமும் திராவிட மொழியில் (தமிழில்) எழுதப் பட்டன. மலையாளம் என்னும் இன்னொரு திராவிடமொழி இந்தியப் பண்பாட்டையும் நாகரிகத்தையும் இந்தோனேசியத் தீவுக்கூட்டத்துள் வேறு மொழி புகுமுன்னேயே புகுத்திவிட்டது.

கால்டுவெல் என்ற ஒப்பியல் இலக்கண நூலாசிரியர் திராவிட தொகுப்புக்கிடையே துரானிய உறவு இருக்கவேண்டும் என்று கருதுகிறார். துருக்கிய—சுமேரிய உறவு இருந்திருக்க வேண்டுமென்ற கருத்து நிலவுவதாலும், சிந்துவெளி நாகரிகத் துக்கும் பழைய ஆசியா மைனருக்கும் தொடர்பு இருந்திருக்க வேண்டும் என்ற கருத்து ஒருபுறமும், திராவிடத் தென்னிந்தியா மறுபுறமும் இருந்து வருவதாலும் திராவிடத் துரானிய உள்ளுறவு (*interrelation*) நாம் கவனிக்க வேண்டிய ஒன்றாகிறது.

இத்தொகுப்பின் முக்கிய மொழிகள்: தமிழ்—இது 'கல் தோன்றி மண்தோன்றாக் காலத்துக்கு முன்னிருந்தது' என்று புகழப்படும் மிகப் பழைய இலக்கியத் திராவிட மொழி. இதற்கு வடக்கே தெலுங்கும், மேற்கே மலையாளமும், கன்னடமும், துளுவும் ஆக நான்கு மொழிகள் வழங்கிவந்தன. எனவே இவ்வைந்து மொழிகளும் ஒரு திராவிடத் தொகுப்புக்குள் அடங்கியவை என்னலாம். ஜி. சிலேடர் (*G. Slater*) என்னும் அறிஞர் எப்படித் திராவிட மொழிகளின் ஒலிகள் ஆரிய மொழிகளின் ஒலிகளைப் பெரிதும் மாற்றின என்பதை அழுத்தமாகவே சொல்கிறார். ஹ என்ற ஒலி க், த், ப் போன்ற மெய்யெழுத்துக்களுடன் சேர்ந்த க்ஹ, த்ஹ, ப்ஹ (**ख, थ, फ**) என்னும் எழுத்துக்களை உண்டாக்கி, இவ்வெழுத்துக்களைக் கொண்ட சம்ஸ்கிருத மொழியினையும், அதன் பிள்ளை மொழிகளையும், பிற இந்தோ—ஐரோப்பிய மொழிகளிலிருந்து வேறுபடுத்தியிருப்பினும், இந்த 'ஹ' திராவிட மொழியைச் சேர்ந்ததே. இப்படிப் பலவற்றுள் இது ஓர் எடுத்துக்காட்டு.

இடம் பெயர்ந்து வந்தவர்களின் ஆதிக்கத்தால், அதாவது ஆரியர்களின் ஆதிக்கத்தால் திராவிட மொழிகளில் சமயத் தொடர்பான பல சொற்கள் புகுத்தப்பட்டன.

இந்தியாவில் இந்தோ—ஐரோப்பிய மொழித் தொகுதியைக் காட்ட முக்கியமாக சம்ஸ்கிருதமும், பிறகு அதன் பல்வேறு மாறுபாடுகளுமான இந்தி, இந்துஸ்தானி, ஒரியா, பெங்காலி, அஸ்ஸாமி, குஜராத்தி, மராத்தி, பீலி, பஞ்சாபி, பலுசி முதலியனவும் இருக்கின்றன. புரோஷஸ்கி (*Buroshaski*) என்ற மிகப் பழைய மொழி ஒன்று வடமேற்கு மலைகளில் வழங்கி வருகிறது. உருது மொழியும் சம்ஸ்கிருதத்தை அடிப்படையாகக் கொண்டதே. ஆனால் இம்மொழி இந்திய மொழியல்லாத சில மொழிகளின் தன்மைகளைக்கொண்டுள்ளது; அவற்றுள் அரேபிய மொழி ஒன்று என்னலாம். ஆரிய மொழிகளுக்குச் சொந்தமான பாரசீக மொழி, உருது மொழிக்கு மிக நெருங்கிய தொடர்புள்ளதா இருக்கிறது. இதில் மொகலாய, துருக்கியத் தன்மைகள் மிகக் குறைந்த அளவில் கலந்துள்ளன. பிற்காலத்தில் ஆங்கிலம், லதீன், கிரீக், பிரெஞ்சு மொழித் தன்மைகளும்

சேரலாயின. இந்திய் மொழி அல்லாத, ஆனல் இந்தோ-ஐரோப்பிய மொழியாகிய ஆங்கிலம், ஆங்கிலோ—இந்தியர்களால் பேசப்படுகிறது. மிகச் சில இந்தியக் குடும்பங்களிலே இம்மொழி தாய்மொழியாகப் பேசப்படுகிறது.

ஆஸ்ட்ரோ—ஆசியாடிக்(*Aostro-asiatic*) தொகுதியை ஆஸ்ட்ரிய துணைக்கிளை பெரும்பாலும் காட்டுகிறது. ஒரு சில ஆயிரம் ஆஸ்ட்ரோனீசிய மொழி பேசுகின்ற, இடம் பெயர்ந்த மக்களே (*immigrants*) மொழிக்குடும்பம் என்று கருதப்படுகிற இதன் இரண்டாம் கிளையைக் காட்டுகின்றனர். இதை டபிள்யூ. ஷ்மிட் என்பவர் ஆஸ்ட்ரோ-ஆசியாடிக் என்று குறிப்பிட்டுள்ளார். ஜி. ஆவஸி (*Havessy*) போன்றவர்கள் இப்படி ஒன்று இல்லை என்றே ஐயுறுகின்றனர். முண்டா மொழிகள் உக்கிரிய (*Ugrian*) மொழியுடனும், மவோரி (*Maori*) மொழியுடனும் தொடர்புள்ளவை என்று இவ்வறிஞர் கருதுகிறார். இந்தியாவில் இரண்டு மொழித் தீவுகள் (*linguistic islands*) ஆஸ்ட்ரிய மொழிகளைக் காட்டுகின்றன. அவை முதலாவதாக அஸ்ஸாமில் உள்ள காசிக்குன்றுகள் உள்ள சிறிய தொகுதியும், இரண்டாவதாக மத்திய இந்தியாவில் உள்ள சோடாநாபுரிப் பீடபூமியில் உள்ள முண்டா மொழிபேசும் மக்கள் தொகுதியும் ஆகும். ஐந்து மிலியன் மக்களுக்கு அதிகமாக இன்று முண்டா மொழிகளைப் பேசுகின்றனர். அவர்கள் பூமீஜ் (*Bhumij*), பிரோர் (*Birhor*), ஹோஸ் (*Hos*), ஸன்தால் (*Santhal*), முண்டா (*Munda*) முதலிய பல தொடர்புள்ள பழங்குடிள் ஆவர். இந்தியாவில் உள்ள டோடமிச மக்களில் பெரும்பாலோரும், பீல் (*Bhils*) களும் முன்னர் முண்டா மொழிகளே பேசியிருந்திருக்கவேண்டும்.

இந்தியாவில் திபேதோ—பர்மீஸ் தொகுப்பு, அதன் இரு துணைத் தொகுதிகளால் காட்டப்படுகிறது. வட எல்லையை நோக்கிச் சற்று சென்றோமானல் திபேத்தியக் கொச்சை மொழிகள் (*dialects*) முன்னதையும், அஸ்ஸாமில் உள்ள காரோ மொழித் தீவு பின்னதையும் காட்டுகின்றன. இத்தீவு தாய்வழித்தலைமையையும் டோடமிஸ பெருங்கற்காலப் பழங்குடிகளையும் உடையது. இம்மக்கள் தம் பக்கத்து இருக்கும் காசி (*Khasi*) மக்களைப் போன்ற பண்பாட்டினர். இக்காசி மக்களிடமிருந்தே இவர்கள் நாகரிகத்தையும் பெற்றிருக்கலாம். அஸ்ஸாமிய, பர்மிய எல்லைப்

புறப் பகுதியில் உள்ள நாகர்பழங்குடி மக்கள்கூட இம்மொழித் தொகுப்பைச் சேர்ந்தவர்களே.

இந்தியப் பண்பாட்டு வரலாற்றுத் தோற்றம் (*The culture historic configuration of India*) : உலகில் உள்ள நாடுகள் பல வற்றுள்ளும் இந்தியாவில் மக்கள் இனப் பிரிவு (*ethnology*) ஒரு தனித் தன்மை பெற்றது என்னலாம். நான்கு பெரும் பண் பாட்டு வட்டங் (*culture circles*) களான தொல் நாகரிகம் (*primeval civilization*), தாய்வழித் தலைமை நாகரிகம் (*matri-lineal civilization*), டோடமிச நாகரிகம் (*totemistic civilization*), நாடோடி மந்தையர் நாகரிகம் (*nomadic herdsmen civilization*) என்பன தெளிவாகக் காணப்படுகின்றன. இவை இந்தியாவில் கண்கூடாக இருந்து வருவன. என்றாலும் இந்து மதக் கோட்பாடு (*Hinduism*) இந்தியாவில் எங்கும் பரவியுள்ள ஒன்றாக, இந்தியப் பண்பாட்டுக்கு ஒரு பண்பெனத் திகழ்கிறது. கிரிஸ்தியன் ஏரன்பெல்ஸ் என்பவர் இதைக் 'கெஸ்டால்ட் பண்பு' (*gestalt qualitat*) என்கிறார்.

இதனால் எல்லா இந்தியர்களும் இந்துக்கள் அல்லர் என்பதை நினைவில் இருத்திக் கொள்க. ஆனால் பல்வேறு இந்தியப் பண் பாட்டின் பொருள்களிடமும் (*ethnological entities*) இந்து மதக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்ட மூலப்பொருள்கள் (*elements*) காணப்படுகின்றன. இவை ஆரியர் வருகைக்கு முன்னும், ஆரியர் வருகைக்குப் பின்னும் உண்டான தெய்வங் களின் பெயர்களாலும் அவற்றை ஒட்டிய கருத்துக்களாலும் பெறப்படுகின்றன.

மேலும் தெற்றென விளங்கிய ஆரியத் தந்தை வழித்தலைமை மந்தையர் பண்பாடும் (*patrilineal herdsmen culture*), இந்தி யாவில் முன்னமே இருந்துவந்த சிந்து வெளி நாகரிகத்துத் தாய் வழித் தலைமை நகரப்—பண்பாடும் கலந்து எண்ணற்ற பண் பாட்டு அமைப்புக்களையும் இயல்புகளையும் தோற்றுவித்தன. இவை இந்தியாவுக்கே உரியனவாகவும் இந்திய மக்களின் பல்வேறு தொகுதிகளுள்ளும் வகுப்புக்களுள்ளும் புகுத்தப் பட்டும் வளர்ந்தன. இப்படி இருவேறு பண்பாடுகள் கலந்த

விதத்தை மோதல் என்றே குறிப்பிடலாம். பெரும்பாலான இந்தியப் பண்பாட்டு, இயல்புகளைக் கூர்ந்து பார்த்தால், தந்தை வழித் தலைமை—மந்தையர் பண்பாடு, எப்படிப் பண்பாட்டிலும், பொருளாதாரத்திலும், அறிவியலிலும், மதத்திலும் சிறந்து விளங்கிய தாய்வழித் தலைமைப் பண்பாடுடைய நகரங்கள் கொண்ட நாடுகளுடன் (*matrilineal city states*) மோதலுற்றது என்பது பெறப்படும். மிகைமணம் (*hypergamy*), குழந்தைத் திருமணம் (*child marriage*), விதவா கண்டனம் (*contempt of the widow*) ஆகியவை இந்தியப் பெண்ணின் தன்னுரிமையினையும் (*independence*), தற்காப்பினையும் (*resistence*), தன் மதிப்பினையும் (*self respect*) குறைக்க ஏற்பட்டவை என்னலாம். பிற்காலத்து இந்து மதச் சாதி அமைப்பு, பிராமணர்களின் உயர்வு, உள்நாட்டுக் (*indigenous*) 'கீழ்'ச் சாதிகளிடம் வெறுப்பு, உள்நாட்டில் உள்ள மாமிசம் உண்பவரைத் தாழ்த்துவது போல்வன உயர்ந்து விளங்கிய எதையும் தாழ்த்திய மனப்போக்கைக் காட்டுகின்றன என்றும் சொல்லலாம். ஆரியர் வருகைக்கு முன்—பிராமணர் தோன்றுவதற்குமுன்—இந்தியாவில் தாய் வழித்தலைமை ஓங்கி இருந்தது மட்டும் அல்லாமல், பெண்களே ஆட்சி புரிந்தும் இருந்திருக்கின்றனர்.

எண்ணற்ற பெண் தெய்வங்களைத் (*mother goddesses*) தொழுவதும், பசுவைத் தொழுவதும், லிங்கத்தைத் (*phalic symbol*) தொழுவதும், அதன் மூலம் மறைமுகமாகக் காக்கும் கடவுளாகிய சிவனையும், அவனுடைய சத்தியைத் (பகவதி, காளி, துர்கையை) தொழுவதும், சமய அல்லது சமூக விழாக்களில் சிவப்பு வண்ணத்தைப் பயன்படுத்துவதும், குளித்தல் கழுவுதல் என்பனவற்றை மதத் தொடர்புபடுத்துவதும், பூப்பு நீராட்டு விழா (*puberty rites*) கொண்டாடுவதும், சமூக வாழ்க்கையிலும் குடும்பத்தில் நிகழும் மத விழாக்களிலும் தாய்மாமனுக்கு முதலிடம் அளிப்பதும், வயதான தாய்க்குச் சிறப்பிடம் கொடுப்பதும் ஆகிய இத்தனை இயல்புகளும் இந்தியப் பழம் தாய்வழித் தலைமைப் பண்பாட்டினின்றும் கொள்ளப்பட்டு, காக்கப்பட்டு இன்றளவில் இருந்து வருகின்றன. நடைமுறை மட்டும் சிறிது மாறியிருக்கிறதே தவிர, மற்றவையெல்லாம் அப்படியே காணப்படுகின்றன.

பொதுவாக இந்தியப் பண்பாட்டுவரலாற்றின் ஒரு தோற்றத்தைப் பார்ப்பதற்கு முன், (அ) இந்தியா தன்னகத்தே பெரும் பண்பாட்டுவட்டங்களைக் கொண்டுள்ளது என்பதையும், (ஆ) சாதி இந்து சமயக் கோட்பாடும் (*caste hinduism*) அதன்படித் தந்தை வழித் தலைமை, தாய் வழித் தலைமை சமூக அமைப்புடன் மோதியது என்பதையும் பார்க்கிறோம். இப்படிச் சொன்னால் இந்தியப் பண்பாடுகள் எல்லாம் இந்துக்களின் பண்பாடுகள் என்று ஆகா. இந்திய மக்கள் அத்தனை பேராலும் சாதி அமைப்பு ஒத்துக்கொள்ளப்பட்டது என்றும் பொருள்படாது. பழங்கால உள்நாட்டுத் தாய்வழித் தலைமை நகர—நாகரிகத்தையும், தன்னிச்சையாக உரிமையுடன் எதையும் செய்யும் அளவுக்கு வளர்ச்சி பெற்று உயர்ந்திருந்த பெண்ணினத்தையும் அடக்க வேண்டியே சாதி அமைப்பும் பிராமண அமைப்பும் சமூகத்தில் புகுந்தன. இந்த அமைப்பு இந்தியாவில் சமூக—சமய அமைப்புக்களுக்கு அடிப்படையில் பொதுவாக அமைந்துள்ளது.

இந்தியப் பண்பாட்டுப் படிவுகளும் அவற்றின் சரித வெளிவரைகளும் (*The cultural strata of India and the outlines of their history*): சாதி அமைப்பாலும், பிராமணர்களின் உயர்வாலும், பெண்களைப்பற்றி மக்கள் கொண்ட தாழ்ந்த எண்ணத்தாலும், உண்மையில் வேறு நாட்டின் அல்லது ஆரியர்களின் தெய்வப் பெயர்களாலும், ஓரளவாகிலும் இடர்ப்படா இந்தியர் இலர் என்றே சொல்லலாம். ஏதேனும் ஓர் அளவில் மாற்றம் இருக்கவே செய்கிறது. இப்படியெல்லாம் இருந்தும், பல காட்டுப் பழங்குடிகளிடம் (*jungle tribes*) இன்னும் உள்ள பல இயல்புகள் அவர்களுடைய பொருளாதார, சமய, சமூகக் கோள்களில் (*conceptions*) அவர்கள் தொல் பண்பாட்டு வட்டத்தைச் (*primeval culture circle*) சேர்ந்தவர்கள் என்பதைத் தெரிவிக்கின்றன. அதாவது, இந்தியர் இந்து மதத்துக்கு உட்படாத மிகப் பழம் காலந்தொட்டே இருந்து வந்தவர்கள் என்பது புலப்படுகிறது. குறிப்பாகத் தெற்கே, ஒரு சில இடங்களில் இந்து மதம் உண்டானதே ஏறத்தாழ ஐம்பது அல்லது நூறு ஆண்டுகளுக்கு முன்னரே என்னலாம். தென்னிந்தியாவின் வடமேற்கேவுள்ள செஞ்சுக்களும் (*the Chenchus*), ஏனாதிகளும் (இவ்விரு பிரிவினர்களும் பக்கத்து டோடமிஸ கோள்களை

ஏற்றவர்கள்) கேரளத்தில் உள்ள எரவாளர்களும் (*Eravalar*), தென் கன்னடத்திலும் மைசூரிலும் உள்ள ஹசாலர்களும் (*Hasalar*), மேற்குக் கரையில் உள்ள இருளர்களும் (*Irular*), முக்கியமாக ஆனைமலை, கோயமுத்தூர் குன்றுகளில் உள்ள காடர்களும் (*Kadar*) குரும்பர்களும் (*Kurumbas*), மால பண்டாரங்களும் (*Malapandaram*), மால புலயர்களும் (*Mala-pulayars*), மலாசார்களும் (*Malasar*), மலையாளிகளும் (*Malayali*), ஷோலாகர்களும் (*Sholagars*), பான்யர்களும் (*Panyer*), இவ்வகைச் சாதிக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாவர். மத்திய இந்தியாவிலும் இந்தியாவின் வட பகுதிகளிலும் உள்ள, ஏறத்தாழ டோடமிஸத்தாலும் இந்து மதத்தாலும் பாதிக்கப்பட்ட பழங்குடி மக்கள் கொஞ்ச காலத்துக்குமுன் தொல் பண்பாட்டினர்களாகவே இருந்தனர். [(கொஞ்ச காலத்துக்கு முன் என்றால் மனித இனப் பிரிவியலில் வரலாற்றுக் காலத்துக்குக் கொஞ்ச காலத்துக்கு முன் என்றும், ஒரு சில நூற்றாண்டுகள் என்றால் குறைந்தகாலம் என்றும் பொருள்படும்.) இக்காலத்தில் ஆரிய மொழி பேசியும், உழுது பயிரிட்டும் வாழ்ந்து வருகின்ற பீல்களும் (*Bhils*) கூட டோடமிஸத்தாலும் இந்து மதப் பண்பாட்டாலும் சிறு அளவு பாதிக்கப் பட்டவர்களாக இருப்பினும், குறைந்தது மத்திய காலம்வரை (*middle ages*) அவர்களுடைய தொல் பண்பாட்டைக் காத்தே வந்திருந்தனர் என்னலாம். இக்காலத்தில் வளர்ச்சி பெற்றுவரும் இந்து மதத்தால் அவர்களுடைய சமூக, பொருளாதார அமைப்பு முன்னிருந்ததைப் போலல்லாமல் மாறுபட்டும், அவர்களுடைய மதம் இந்து மதமாக மாறியும் இருக்கின்றன. ஆனால் நாடோடிப் பாடல் (*folklore*) களிலும், பழமொழிகளிலும் பல மரபு விழாக்களிலும் (*traditional festivals*) அவர்களுடைய, தொல்பண்பாடு இன்னும் காணப்படுகிறது.

மரியாக்களும் (*Marias*) முரியாக்களும் *Murias*) மற்ற நிலவாசிகளும் (*plain dewellirs*) இந்துக்களைப் பார்த்துத் தங்கள் உடல்களைத் துணிகளால் மறைத்து வாழ்வதால்தான் சொறி சிரங்கு படைகளால் அவதிப்படுகின்றனர்.

இவர்கள் வேறு துணிகளை மாற்றி அணிய பொருளற்றவர்களாகவும், ஒன்றையே அடிக்கடித் தோய்த்து அணியமுடியாதவர்

களாகவும் இருப்பதால் இந்நோய்வாய்ப்படுகின்றனர். கோண்டு கள் (*the Ghond*) இப்படிச் செய்யாமையால் இந்நோய்கள் இல்லாமல் வாழ்கின்றனர். இவர்கள் துணிகளை மிகக் குறைவாக அணிகின்றனர். மருத்துவ நிலையங்களில் எருமைக் கொம்பு மரியாக்களும் முரியாக்களும் (*bison-horn Marias and Murias*) மேற்சொன்ன தோல் நோய்களால் படும் தொல்லையால் சிகிச்சை பெற்றுக் கொண்டாலும் சீக்கிரத்தில் குணமடைவதில்லை. முக்கிய மாக இவர்கள் அழுக்குப்படிந்த ஆடைகளையும் நோய்ப் பூச்சிகள் நிரம்பிய ஆடைகளையும் விடாமல் அணிவதால் எப்படிப்பட்ட சிகிச்சையும் பயனற்றே போகிறது என்று டபிள்யு. வி. கிரிக்ஸன் கூறுகிறார். காட்டுப்பழங்குடி மக்களுக்கும் நகர வாசிகளுக்கும் இடையே ஒரு சிறு வாணிகம் (*petty trade*) பல நூற்றாண்டுகளாக நடந்து வந்தது என்னலாம். முற்காலத்தில், ஏழைகளான குன்றுவாசிகள் காட்டுப் பொருள்களுக்கும் மருந்துகளுக்கும் உணவுப் பொருள்களுக்கும் தங்கள் பொருள் களை மாற்றிக் கொண்டனர். இக்காலத்தில் அவர்கள் அவற்றைத் துணிகள் வாங்குவதில் செலவிடுகின்றனர். இந்தப் பொருளாதார நிலையில் இப்பொழுது காட்டுப் பழங்குடி மக்கள் இருந்து வருகின்றனர். ஒரு காட்டுப் பரப்பிலிருந்து இன்னொரு காட்டுப் பரப்புக்குக் குடியேறி வாழ்வது அவர்களுடைய அரை நாடோடி வாழ்க்கையைக் காட்டுகிறது என்னலாம். ஆனால் இவர்களுள் சிலர் இன்னும் தம்மிச்சையாகவே வாழ்ந்து வருகின்றனர். இப்படி இவர்கள் இன்னொரு பகுதிக்குச் செல்வதற்குப் பழங்களும், உணவுப் பொருள்களுமே காரணம்.

பழங்கால ஆஸ்திரேலியர்களும் (*aboriginal Australians*), மிலனேஸியர்களும் (*Melanasians*) அல்லாமல், அந்தமானியர் களும் (*Andamanese*), நிகோபார் வாசிகளும் (*Nicobarese*) பயன்படுத்திய கற்கருவிகள் இல்லாமையே இவ்விந்தியக் காட்டு மக்களின் பொருளாதாரத்தில் உள்ள நன்கு நோக்க வேண்டிய ஓர் இயல்பு. இந்துக்களுடன் இவர்கள் மிகக் குறைந்தே தொடர்பு கொண்டிருந்தனர். கற்கருவிகள் காணப்படாமைக்கு ஒருவேளை இது ஒரு காரணமாக இருக்கலாம் என்று நினைக்க வேண்டி இருக்கிறது. இந்தியத் தொல் பண்பாடு (*primeval culture*) தொல் பழங் கற்காலத்தின் நிலையை எட்டவில்லை. ஆனால்

கற்காலத்துக்கு முன் மூங்கில்—நாகரிகத்தில் (*bamboo-civilization*) நிலவி வந்தது; இந்நாகரிகத்தில் கற்கருவிகள் இல்லை. தென் கிழக்கு ஆசியாவிலும் மத்திய ஆப்ரிக்காவிலும் இன்றும் வாழ்ந்து வரும் பிக்மிக்களிடம் இதைப் பார்க்கலாம். இவ்விளக்கம் முன்னதைவிடப் பொருத்தமானதே என்னலாம்.

இவ்விளக்கம் சரியெனின், தொல் மதராஸிய கைக்கோடரி நாகரிகப் பண்பாடு இப்பொழுதுள்ள காட்டுப் பழங்குடி மக்களின் மூதாதையர்களைச் சேர்ந்ததன்று, பிற்காலத்துத் தென் இந்தியத் தாய்வழித் தலைமை வேளாண்மைப் பண் பாட்டுப் படிவைச் (*matrilineal agricultural stratum of culture in South India*) சேர்ந்தது என்று பெறப்படுகிறது. இப்பொழுதுள்ள பழங்குடி மக்கள் தென் இந்தியாவின் வட கிழக்குப் பகுதியின் டோடமிஸ இயல்புகளையோ அல்லது தென் மேற்குப் பகுதியின் தாய்வழித் தலைமையையோ காட்டுவதால், இச்சிக்கல் இன்னும் தீரவில்லை என்றே சொல்லலாம். ஆனால் இப்பண்பாட்டு மூலப்பொருள்கள் (*cultural elements*) சுற்றுப் புறத்து இரு பகுதிகளைச் சேர்ந்த கிராம, நகர மக்களின் நாகரிகங் களை முறையே ஒத்து இருப்பதால், பழங்குடி மக்கள் புறத்தே இருந்த (*foreign*) டோடமிஸ, தாய்வழித் தலைமைப் பண்பாட்டு மூலப்பொருள்களை (*totemistic and matrilineal cultre elements*) முறையே ஒன்று சேர்த்திருக்கலாம். இந்துக் கடவுளர்கள் (*gods*), தெய்வங் (*deities*) களின் ஆரியப் பெயர்கள், பல மரபு வழித் தோன்றிய இந்துமதக் கருத்துக்கள், நாட்டுக் கோள்கள் (*national conception*) ஏறத்தாழ எல்லோராலும் கடந்த சில நூற்றுண்டுகளாக எடுத்தாளப்பட்டு வருவன என்ன லாம். கொச்சியில் உள்ள நெல்லியம்பதி (*Nelliampathi*), காதசேரி (*Kadaseri*) மலைகளிலும், கோயமுத்தூர் மாவட்டத்தில் உள்ள ஆனைமலையிலும் வாழ்ந்து வருகிற ஏறத்தாழ 1300 மக்கள் கொண்ட காடர் (*Kadar*) பழங்குடி இந்திய காட்டுப் பழங்குடி மக்களின் மிகப் பொருத்தமான பிரதிநிதிகள் என்று பண்பாட்டுச் சரிதப்படி (இனப்பிரிவியலின்படி : *ethnolgically*) சொல்லலாம். அவர்களுடைய உடலமைப்பு என்னவோ வேதித் துக்களுக்குத் தாழ்ந்ததும் (*less weddid*), தென்கிழக்கு

ஆசியாவின் நெக்ரிடாயிட் (*negritoid*) வகையுடன் தொடர்பு தோன்றவும் அமைந்துள்ளது.

குள்ளமாக இருப்பதால் பிக்மிக்களையும், உடலெல்லாம் மயிர் உள்ளவர்களாக இருப்பதால் நெக்ரிடாயிட்டுகளையும் இவர்கள் ஒத்திருக்கின்றனர். ஆண்கள் 158 செ. மீ. உயரம் வளர்வது மிக அரிது. பெண்கள்சராசரி 150 செ.மீ. கூட வளர்வதில்லை. மண்டையோட்டின்நிலை அளவு (*skull index*) 72·9ம், மூக்கின் நிலை அளவு (*nasal index*) 98.ம் ஆகும்; மிகவும் கருமையான நிறம். காடர் (*Kadar*) இன்று பேசும் மொழி, சிறிது மலையாளம் கலந்த கொச்சைத் தமிழே. இதனால் இவர்கள் தம் மொழியினை இழந்திருக்கலாம்என்று பெறப்படுகிறது.

முதலில் சேகரிப்பு முறையாலேயே உணவு சேகரிக்கப்பட்டது; இவர்கள் 10 அல்லது 12 எளிமையான இலை—குடிசைகள் கொண்ட சிற்றூர்களை அடிக்கடித் தோற்றுவித்தும், உணவு சேகரிப்பாளர்களின் (*food collectors*) வழிகளில் அவற்றை விட்டு விலகியும் இருந்தனர். இவர்கள் தொல் பண்பாட்டு வட்டாரத்தின் பொருத்தமான பிரதிநிதிகள் (*typical representatives of primeval culture circle*)ஆவர். ஆனால் இக்குடிசைகளைத் தோற்றுவிப்பது காடர் பெண்களே என்பதும், பெண்கள் தம் தகுதி தெரிந்து பெருமிதம் கொண்டிருந்தனர் என்பதும் நோக்கற்பாலன. இது போன்றே, அடிக்கடி உண்டாக்காமல் நெருப்பை நீண்டகாலம் காத்து வந்தோரும் பெண்களே. இவ்வுண்மை மிகப் பழைய தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் உட்புகுதலை (*matrilineal culture infiltration*) குறிக்கிறது. இப்பண்பாடு முதற்படியினது (*belonginig to stage I*) ஆகும். காட்டுப் பழங்குடிப் பெண்கள் இப்படிப்பட்ட மூலப்பொருள்களை, சடங்குக் கடமைகளைக் கையாண்டிருக்க முடியாது. கேரளத்தில் உள்ள மிகவும் நாகரிகமான நிலச் சொந்தக்காரர்களிடமிருந்தும், மேல் வகுப்பு மக்களிடமிருந்தும் இப்பழங்குடி மக்கள் தாய் வழித் தலைமையைக் கொண்டார்கள் என்றும் கொள்ளமுடியாது. காடர் என்ற பழங்குடிகளின் பொருளாதாரச் செயலாக்கம் (*economic activity*) வேட்டையாடுவதும் காட்டுப் பொருள்களைச் சேகரிப்பதுமே ; இந்நாட்களில்கூட ஏலக்காய், சவ்வரிசி, மெழுகு இவற்

றுடன் தேன் சேகரிப்பது மிகவும் சிறப்பாகக் காடர் களால் கருதப்படுகிறது. தொல்பண்பாட்டினரான மற்ற எல்லா மக்களுடனும் இவற்றைக் காடர் பகிர்ந்து கொள்வர். காடர் களாலும், போர்னியோவிலுள்ள தாயக்கு (*Dayak*) களாலும் கையாளப்பட்ட தனிப்பட்ட மரம் ஏறு முறை தர்ஸ்டன் (*Thurston*), வாலஸ் (*Wallace*) இருவராலும் குறிக்கப்பட்டிருக் கிறது. இந்தோனேஸியா, மலாக்கா (*Malacca*)வின் தொல் பண் பாட்டுக்குரிய மக்களைப் போலக் காடர் என்ற பழங்குடி களுக்கு மூங்கிலால் செய்த பெட்டி ஒன்று தவிர, வேறெந்த வீட்டில்செய்யும்பொருள்களும் தெரிந்திருந்ததாகத்தெரியவில்லை. இப்பொழுது அவர்கள் பயன்படுத்தும் மண்பாண்டங்கள் வியாபாரிகளிடமிருந்து வாங்கியனவாக இருக்கலாம். தோண்டு தடி (*digging stick*)யும், மூங்கில் வில்லுமே காடர்கள் பயன் படுத்திய கருவிகள் ஆகும். காடர் என்ற பழங்குடிகள் அணிக்காகச் செய்யும் அழகிய மூங்கில் சீப்புகள் திருமணப் பரிசுகளாகப் பெண்களால் மிகவும் மதிக்கப்பட்டன. இச்சீப்புக் கள் சூனியம் (*black magic*) போன்றவைகளிலிருந்து இவர்களைக் காப்பதாக நம்பினர். இது மலாக்காவின் செமாங் (*Semang*), செனாய் (*Senai*)களிடமும், பிலிப்பைன்களில் உள்ள ஈடாக் (*Aeta*) களிடையிலும் நிலவி வருவதைப் போன்றது என்னலாம்.

ஓரிடத்துக்கும் மற்றோரிடத்துக்கும் தூரம் மிகுந்திருப்ப தும், இவ்விடங்களிலும் இச்சீப்புகள் ஒன்றையொன்று ஒத் திருப்பதும் நோக்கத்தக்கது. காது குத்துவதும், மூக்குக் குத்து வதும், பற்களை இழைப்பதும் (*filing of teeth*) அவர்களின் வழக்கம். காடர் மக்கள் குளிர்ந்த, தூய்மையான, உடல் நலத்துக்குரிய இலைகளையும் பூக்களையும் தவிர, உண்மை யில் வேறெந்த ஆடைகளையும் 19-ஆம் நூற்றாண்டு இறுதி வரை அணியவில்லை. இப்பொழுது இந்துக்களையும் ஐரோப்பி யர்களையும் பார்த்து இவர்கள் மேலாடை அணிகின்றனர். இதனால் தம் உடல் நலம் கெடுகிறது; நோய் வாய்ப்படாமல் தம்மைக் காக்கும் உடற்சத்தி கெடுகிறது; வெப்ப தட்பநிலையை எதிர்த்து நிற்கக்கூடிய நிலை கெடுகிறது; இவை மட்டும் அல்லா மல் நன்னடத்தையும் கெடுகிறது என்று கருதுகின்றனர்.

நாய் ஒன்றுமட்டுமே காடர்களுடன் அவர்கள் செல்லும் காட்டுத் தனி வழிகளில் உடன் செல்லும் பழகிய விலங்கு.

காடரின் சமூகவியல் ஒன்றுக்கொன்று முரண்பட்ட புறம்பான பழக்கங்களை (*foreign influences opposing each other*) காட்டுகிறது. பிள்ளைகளும் மைத்துனர்களும் வழியுரிமை உடையவர்கள். முன்னது தந்தைவழித் தலைமைப் பண்பாண்டியல்பையும், பின்னது தாய்வழித் தலைமைப் பண்பாட்டியல்பையும் கொண்ட இருவேறு அமைப்புக்கள் என்றாலும், நாகரிகம் மிகுந்த தாய்வழித் தலைமை கேரளர்கள் சேர்க்கையால் இவர்கள் தம்முள் புகுத்திக் கொண்டனர் என்னலாம். எனவே இவ்விருவேறு வழித்தலைமை அமைப்புக்களும் காடர்களின் தொல்பண்பாட்டைச் சேர்ந்தவை யல்ல என்பதும் இதனால் பெறப்படுகிறது. பெண்கள் வீட்டுவிலக்கின்பொழுதும், குழந்தைபெறும்பொழுதும் குடிசைகளில் ஒரு தனி இடத்தில் இருந்து வருவதையும்கூட மேற்சொன்னபடியே விளக்கலாம். தந்தை வழி வந்தவர்களை மணம் செய்து கொள்வதில்லை; தாய்மாமன் மகளை மணந்து கொள்ளலாம். விதவைத் திருமண விலக்கு, பிராமணர்களிடமிருந்து இவர்கள் நேராக மேற்கொண்ட ஒன்று.

காடர்களின் மதத்தில் பல முரண்பாடான இயல்புகளும் காணப்படுகின்றன. தெய்வத்தன்மையிலும் (*spirtuality*), தொல்பண்பாட்டு ஒருநிலைக் கடவுளை (*Monotheistic god of the primeval culture*) ஒத்த கண்ணுக்குத் தென்படாக் கடவுள்களுடன் இப்பொழுது கல் உருவங்களையும், துஷ்ட தேவதைகளையும் (*Cvil spirits*) வழிபடுகின்றனர். இவற்றுள் ஒன்று திருடனுக்கு வயிற்று வலியைத் தரவல்லதாகச் சொல்லப்படுகிறது. காட்டுமிராண்டிகளுக்குத் (*savage*) திருடுவதென்பது தெரியாத ஒன்று என்பது நாம் அறிந்ததே. எனவே இத்தேவதை பிற்காலச் சேர்க்கை என்பது தெள்ளிது. திங்கட் கிழமையை மதத்துடன் தொடர்புபடுத்தியும், காளியைத் தொழுதும், இப்படிப் பல வழக்க ஒழுக்கங்களை இந்துக்களிடமிருந்து இவர்கள் எடுத்தாளுகின்றனர் என்னலாம். ஆனல், காடர்கள் தாம் முதன்முதல் வழிப்பட்ட அம்மனைக் காளியின் உருவத்தில் (*mother goddess*) காத்து வைத்திருக்கின்றனர் என்றும் சொல்லலாம்.

இந்து அல்லாத காட்டுப் பழங்குடிகளிடம் இந்து மத வழக்க ஒழுக்கங்கள் புகும்பொழுது இந்து மதத்தின் அடிப்படை மத விஷயங்கள் முதலில் புகுவது இயற்கையே.

தென்னிந்திய மாலிட் (*Malid*) சாதிகளின் பண்பும் நாகரிகமும் காடர்களுடையவையே என்னலாம். இப்படித் தொல்பழங்குடி மக்கள் டோடமிஸம் நிலவும் இடங்களில் சிலரே இருக்கின்றனர். கேரளப் பழங்குடி மக்கள் எப்படி அவர்கள் அண்டையில் இருக்கும் உயர்ந்து முன்னேற்றமடைந்த தொகுப்புக்களிடமிருந்து தாய் வழித் தலைமைப் பண்பை எடுத்துக்கொண்டனரோ, அப்படியே இவர்களும் டோடமிஸப் பண்புகளில் சிலவற்றைக் கொண்டுள்ளனர். எல்லாவற்றுக்கும் மேலாகத் தாய்வழித் தலைமை பரவியுள்ள இடத்திலும், டோடமிஸம் பரவியுள்ள இடத்திலும் இந்து பிராமணச் செல்வாக்கு மிகுந்துள்ளது. காட்டுப் பழங்குடிகளிடம் எளிதில் இந்துக்களின் பயன்குறைந்த (*less advantageous*) வழக்க ஒழுக்கங்களே படிந்துவிடுகின்றன. சீர்மிகுந்த இவ்விந்தியப் பெரும் பண்பாட்டின் கலையெழிலை இவர்கள் காண்பது இல்லை. எனவே இவர்கள் தம்முரிமை இழந்து தீண்டப்படாதவர்கள் என்ற நிலையைப் பெற்றவர்களாகின்றனர்.

பறையன் என்ற பகுப்பைச் சேர்ந்தவர்களின் கதை இப்படிப்பட்டதே என்னலாம். தமிழில் பறையன் என்றும், தெலுங்கில் மாலவாடு என்றும், கன்னடத்தில் ஹோலெயா என்றும் அழைக்கப்படும் இத்தொகுப்பினர் தாழ்த்தப்பட்ட சாதியினருள் எங்கும் மிகுந்து பரவியுள்ளனர். இவர்கள் ஒரு சாதிஇந்துவிடம் பேசும்பொழுது வாயைக் கையால் பொத்திக்கொண்டு பேசவேண்டும் என்றும், ஒரு சாதிஇந்துவைத் தெருவில் பார்த்தால் அத்தெருவை விட்டே அப்பாற் செல்ல வேண்டும் என்றும், ஒரு பறையனின் வேலை தேவைப்பட்டால் அவன் நுழைய ஒரு தனிப் புகுமிடம் இருந்தது என்றும், அவன் தனிக் கிணற்றில் தான், அதாவது அவனுக்கு என்று அமைந்த கிணற்றில்தான், தண்ணீர் முகந்து எடுக்கவேண்டும் என்றும், 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் கட்டுப்பாடுகள் இருந்தனவாகச் சோனெரா (*Sonnerat*) அறிவிக்கிறார். இவற்றில் சிலவற்றை இந்நாளிலும்

காண்கிறோம். கிறித்தவர்களாக மாறியவர்களும் இப்படியே நடத்தப்பட்டனர். முஸ்லிம்களாக மாறியவர்கள் இவ்வளவு தாழ்த்தப்படவில்லை என்றே சொல்லலாம்.

பறையன் என்று ஓர் இனம் இல்லை. ஆனால் இத்தொகுப்பினன் பல்வேறுபட்ட இனக்கலப்புக்களுக்கு உரியவன் என்னலாம். தெற்கே பறைச் சாதியில் பெரும்பாலோர் இன்டிட் (*Indid*) டைச் சேர்ந்தவர்கள். கருநாடகத்தில் இவர்கள் தென் மலானிட் துணை இனங்களைச் (*south malanid sub-races*) சேர்ந்தவர்கள். பறையனுக்கு என்று ஒரு மொழி இல்லை; ஒரு நகரம் இல்லை. இவர்கள் பிறந்த இடத்தில் பேசும் மொழியினையே இவர்கள் பேசுகின்றனர்.

இவர்களின் முந்திய சமூக, அரசியல் நிலைமைகளே அல்லாமல், சமூக, மத அமைப்புக்களும் இவர்கள் தாய்வழித் தலைமைக் கிராம நாகரிகத்தினர் என்பதைக் காட்டுகிறது. ஒரு வேளை இவர்கள் பிற்காலத்தில் இது போன்ற கிராமப் பண்பாட்டுக்கும் உயர்ந்த படியில் இருந்திருக்கலாம். இப்பொழுது இவர்கள் புலையர் என்றும் பறையர் என்றும் பலவாக அழைக்கப்படுகின்றனர்.

கேரளப் பறையனின் வழியுரிமை (*inheritance*) பெண் வழியில் காணப்படுகிறது. தாய்வழித் தலைமை நாயர் அல்லது உயர்ந்த வகுப்பு மக்களின் செல்வாக்கால் இப்படிக் காணப்படுகிறது என்று கருதப்பட்டாலும், பறையனின் சமூகவியலில் பல பழம் தாய்வழித்தலைமைப் பண்பாட்டு இயல்புகள் கொஞ்ச காலத்துக்குமுன் எழுந்த தந்தைவழித் தலைமையால் கவரப்பட்டு இருப்பதைக் காணலாம். திருமணம் மாப்பிள்ளை வீட்டில் நடப்பினும், முதல் குழந்தையைப் பெற்றெடுக்க, அக்குழந்தையைப் பெறும் தாய், தன் தாய் வீட்டுக்குச் செல்வது ஓர் எடுத்துக்காட்டாகும். எனவே திருமணம் தந்தை வீட்டது (*patrilocal*); பிள்ளை பெறுவது தாய்வீட்டது (*matrilocal*) என்கின்றனர். மணப்பெண்ணுக்குத் தரும் விலைப் பணம் (*bride-price*), தாய் மாமனுக்குச் சில நன்னிகழ்ச்சிகளில் கொடுத்திருக்கும் முதலிடம், தாய்க்குத் தந்திருக்கும் இடம் இவற்றைப் பார்த்

தால் தென்னிந்தியப் பறையர் தொகுப்பைச் சேர்ந்தவர்கள் தாய்வழித்தலைமைக் கிராம நாகரிகத்தினராகப் பயிர்த்தொழில் செய்து வந்தவராக இருந்திருக்கவேண்டும் என்று தோன்று கிறது. தாய்வழித் தலைமையில் உயர்ந்து விளங்கிய நாயர் களின் வருகைக்கும், தந்தைவழித் தலைமை இந்து பிராம்மணர் களின் வருகைக்கும் முன்பே இவர்கள் இப்படி வாழ்ந்திருக்க வேண்டும் என்றும் சொல்லலாம். இரட்டைத் திருமணமும் பல கணவர் மணச் சட்டப்படி (*legitimate polyandry*), மாப்பிள்ளை யின் தோழன் மணப்பெண்ணிடம் கொண்ட உரிமையும் இப்படிக் கருத இடம் தருகின்றன. பெண்கள் பருவம் அடைந்த பொழுது நிகழ்த்தும் பூப்புச் சடங்குகள் தாய்வழித் தலைமை இயல்பைச் சிறப்பாகக் காட்டுகின்றன.

பறையனின் மதமும், அவன் தொகுப்பைச் சேர்ந்த மற்றச் சாதியினரின் மதங்களும் பொதுவாகத் தாய்வழித் தலைமைப் பண்பாட்டு வட்டத்திடம் உள்ள நெருக்கத்தையும், குறிப்பாக அதன் இரண்டாம் நிலையையும் தெரிவிக்கின்றன. திராவிட மொழிகள் பேசுபவர்களிடையே இந்நாளில் ஏற்பட்டுள்ள சமூகக்கீழ்ப்படி (*lower social stratum*) மக்களைப் போலவே பறையனும், தர்ஸ்டன் (*Thurston*) சொல்வதுபோல், ஞாயிற்றுக் கடவுளையும், ஆத்தாள் என்ற தலைமைப் பெண் தெய்வத்தையும் வழிபடுகிறான். ஆனால் நடைமுறை வாழ்க்கையில் மூவகைத் தெய்வ அன்னைகள் நிலவுகின்றனர். (1) அம்மா-ஒன்றாக அன்றி எழுவராக, ஏழு கற்களின் உருவத்தில்—பாதை வழியே வேப்ப மரத்தடியில் வைத்துத் தொழப்படும் தெய்வம். இது பெருங் கற்காலச் (*megalithic influence*) செல்வாக்கைப் பெரிதும் காட்டுகிறது. (2) கிராம தேவதைகள் - இந்துக்களின் கிராம தேவதைகளை ஒத்த தேவதைகள். ஒவ்வொரு தேவதையும் இன்னொரு தேவதையின் உடன்பிறந்த தேவதையாகக் கருதப் படுகிறது. (3) மாரியாத்தாளும் கங்கம்மாளும் - அம்மை, வாந்திபேதி நோய்களுக்கு உரியவர்கள். இது அஸ்ஸாம் தாய் வழித் தலைமைக் காசி (*the matrilineal Khasi of Assam*) களிடம் கொண்ட பண்பாட்டு உறவைப் பெரிதும் காட்டுகிறது. இவற் றுடன், துஷ்ட தேவதைகள், பூதங்கள், குட்டிச்சாத்தான்கள் போல்வனவும், பேய் பிசாசு போல்வனவும் எங்கும் நம்பப்

பட்டன. சூனியம் வைத்தல், மந்திரம் போடுதல் போன்ற தொல்சமூகத்தில் காண முடியாத சிலவும் நிலவின. மழை வருவிக்கும் மந்திரங்கள், மூதாதையர் வழிபாடு இவை இரண்டும் பறையனிடம் எங்கும் பரவி இருந்தன. இது தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் நடுநிலையைத் (*middle stage of matrilineal culture*) தெரிவிக்கிறது. இறந்தவரைத் தீயிடாமல் புதைத்தலும், மகனை விலக்கி மைத்துனனைத் துக்கத்துக்கும் தீட்டுக்கும் முதல்வனாகச் செய்தலும் போன்ற வழக்கங்கள் இதையே தெரிவிக்கின்றன.

பறையர்களிடையே டோடமிஸப் பண்பாடு காணப்பட வில்லை. இது இந்தியாவில் பல்வேறு தாய்வழித் தலைமைப் பண்பாடுகளின் காலத்தையும் டோடமிஸப் பண்பாட்டின் காலத்தையும் ஒப்பு நோக்கிக் காண உதவுகிறது. டோடமிஸம், சாதி அமைப்பில் கொண்டுள்ள பங்கு மிகவும் முக்கியமானது. எனவே இதன் கால நிர்ணயம் சரித்திரச் சிறப்பு மட்டும் அல்லாமல் உளவியல் சிறப்பும் கொண்டது என்றே சொல்லலாம்.

தொல்பண்பாட்டுடனும், தாய்வழித்தலைமைப் பண்பாட்டின் முதல் நிலையுடனும் சேர்ந்த அல்லது தொல் பண்பாட்டுக்கும் தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் முதல் நிலைக்கும் உரிய பழங்குடி மக்கள் இன்றுவரைக் காட்டுப் பழங்குடி மக்களின் மூலம் தம் பண்பாட்டின் அறிகுறியை (*identity*) இறுத்தி வந்தனர். ஆனால் இவர்களைவிட முன்னேறிய தாய்வழித் தலைமை இரண்டாம் நிலையினர் இந்துக்களின் சாதி அமைப்பின் தாழ்த்தும் செல்வாக்குக்கு இரையாயினர் என்று சொல்லலாம். இவர்கள் குடியானவர்களாகக் கீழ் நிலையை எய்தினர். இப்படி இவர்கள் மாறிய முறை முக்கியமானது. இதுவே இந்திய சமூகத்தின் அமைப்புக்கும் ஓர் அளவு பொருளாதார அமைப்புக்கும் காரணமாகிறது என்னலாம். பறையனும் அவனைச் சேர்ந்த சாதியினரும் இத் தாய்வழித்தலைமை இரண்டாம் நிலைக்கு உரியவர்கள்; இவர்களே முதன்முதல் கைதேர்ந்த பயிர்த் தொழிலாளர்களாக இருந்தனர் என்றும் சொல்லலாம். தாய்வழித் தலைமைப்படி அமைந்திருந்த நாயர்களும் அவர்களைச் சார்ந்த சாதியினர்களும் இவர்களிலிருந்து வேறுபடுத்தப்பட

வேண்டும். நாயர்களும் அவர்களைச் சேர்ந்த சாதியினர் களும் (*related castes*) தாய்வழித் தலைமை நகர நாகரி கத்தின் மூன்றும் நிலைக்கு உரியவர்கள். எனவே இவர்கள் நிலச் சொந்தக்காரர்களாகவும், வீரர்களாகவும் (*knights*) அறிஞர்களாகவும் (*intellectuals*) இருந்தனரே தவிர, நிலத்தை இவர்களே உழுது வாழவில்லை.

இன்னும் ஒரு முக்கியமான பண்பாட்டுத் தொகுப்பினர் இருக்கின்றனர். அவர்களே தக்காணத்திலும் மத்திய இந்தியா விலும் (*central parts*) உள்ள டோடமிஸப் பழங்குடி மக்களின் தொகுப்பினர். பறையர்கள் இந்துக்களாக மாறுவதற்கு முன் அவர்கள் பண்பாட்டுக்கு ஏதுவாக இருந்த நிலைமைகளை ஒப்பவே இவர்களுடைய நிலைமைகளும் இருந்திருக்க வேண்டும். எனவே அவர்களைப் போலவே இவர்களும் வாழ்ந்திருக்க வேண்டும் என்னலாம். தாய்வழித் தலைமைப் பண்பாட்டு இரண்டாம் நிலையைத் தெரிவித்து நிற்பவர்களுக்கு மாறாக டோடமிஸப் பழங்குடி மக்கள் தம் பண்பாட்டு அறிகுறியைப் பிராமணர்கள் வந்த பின்னர் பல நூற்றாண்டுகளாக இன்றுவரை காத்து வந்திருக்கின்றனர். டோடமிஸ மக்கள் முதலில் வேடுவர் களாக, பயிரிடுவதில் திறமை அற்றவர்களாக இருந்து, குன்றுகள் நிரம்பிய காட்டில் தங்கினர். இந்நிலப் பரப்புக்கு இந்துக்கள் சற்று மெல்லவே வந்தனர் என்னலாம். கங்கை நதிப் பள்ளத்தாக்கு அல்லது கேரள நிலப் பரப்புகள் போன்ற செழுமை வாய்ந்த இடங்களே இவர்களை முதலில் ஈர்த்தன.

பல டோடமிஸப் பழங்குடிகளிலும் சாதிகளிலும் கோண்டு (*Ghond*) என்ற பகுப்பினர் தம் சொந்தப் பண்பாட்டு இயல்பு களில் பலவற்றைக் காத்துவைத்தே இருக்கின்றனர் என்னலாம். ஒப்புநோக்கின் இவர்கள் வாழ்ந்த பகுதியை ஒரு பெரிய நாடு என்று சொல்லலாம். இந்நாடு குன்றுவாழ் மரியா கோண்டு (*Hill Maria-Ghond*), எருமைக் கொம்பு (*Bison-horn*), பஸ்தரில் உள்ள மரியா (*Maria in Bhastar*) என்று பல்வேறு துணைத் தொகுப்பினரின் இருப்பிடமாக உள்ளது. அவர்களுடைய உடல் நலம், அழகு, சுறுசுறுப்புத்தன்மை, மற்றவர்களைக் காட்டிலும் இவர்களுடைய மகளிரின் நன்னிலை, உரிமை நிலை

(*comparatively good and free position of their women*), தூய்மை, அவர்களுடைய வீடுகளின் அழகு இத்தனையும் ஒரு சார்பு அற்ற (*unprejudiced observers*) அத்தனைபேரும் சொல்லி உள்ளனர். அவர்களின் முதல் ஆடைகள் (*original dress*) எளியனவாகவும், உடல் நலம் காக்கக்கூடியனவாகவும் இருந்தன. ஆடவரும் மகளிரும் இடுப்புக்குமேல் மார்பை மூடாமல் விட்டனர். நல்ல நடனங்களின்பொழுது மகளிர் புது மலர்களால் தம் தலை மயிரை அழகு படுத்தினர். நடனங்களில் இவர்களே சிறந்து இருந்தனர்.

இந்த நாட்டினர் பல்வேறு புறக்குடி மணக் கால்வழிகளாக (*various exogamous clans*), டோடமிஸத்துக்கு ஏற்ப, விலங்குகளின் பெயர்கள் வைத்து; ஆண்கால்வழியைப் பற்றுகின்றனர். திருமணத்துக்கு உரிய ஒருவனையோ அல்லது ஒருத்தியையோ தன் தந்தை கூட்டத்து உடன்பிறந்தான் கூட்டம் என்று கருதப் படுகிற கூட்டம் அல்லாத ஒன்றிலிருந்தே தெரிந்தெடுக்க வேண்டும். பெண்கள் திருமணத்துக்குப் பிறகு தம் கணவர் வழிச் சேர்ந்தவர்களாகின்றனர். எனவே இவர்களிடையே டோடமிஸ மணக் கால்வழி (*dodemistic clan exogamy*) ஆண் வழியைப் பற்றுகிறது என்று அறிகிறோம்.

மெலனீசியா (*Melanesia*) விலும், ஆப்பிரிகாவின் ஒரு பகுதியிலும் சிறப்பாக இருந்து வரும் டோடமிஸ ஏற்பாட் (*totemistic institution*) டுக்கு உரிய மணமாகாதவர் கூடம் (*bachelor's hall*) கோண்டு (*Ghond*) களிடையே இருந்து வருவதைக் காணலாம். இவ்விடத்தில் பருவத்துக்கு ஏற்றவாறு ஆண்பாலரைப் பல்வேறு வகுப்புகளாகத் தொகுத்துக் கல்வி புகட்டுகின்றனர். திருமணம் ஆகாத ஆண்பாலர் அத்தனை பேரும் அவர்களுக்கு என்று உள்ள கூடத்தில் தூங்குவர். இவர்கள் நடன விழாக்களில் கலந்து கொள்ளவும், பாலுணர்ச்சியைத் தூண்டவும் (*to initiate into the mysteries of sex*), குடும்ப வாழ்க்கையைத் தொடங்கவும் அழைக்கப்படுகின்றனர். எதிர்காலத்தில் ஒன்றியிருந்து வாழக் கூடிய இருவரே இவ்விடத்தில் சந்திப்பது வழக்கம். இங்கே இவர்கள் ஒருவரையொருவர் தெரிந்துகொண்டு காதல் கொள்கின்றனர். ஆனால் இந்த நிலையில் இருவரும் திருமணம் செய்து

கொள்ளத்தான் வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. திருமணம் பலவாறு நிகழ்த்தப்படலாம். அவற்றில் ஒன்று கந்தருவ (*marriage by mutual agreement*) முறை. தாய் தந்தையரின் விருப்பம் இவ்வகைத் திருமணத்தில் இடம் பெறவில்லை. இவ்வகைத் திருமணங்கள் சட்டத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டவையே. பிள்ளை வீட்டார் பெண் பார்த்துச் செய்யும் திருமணங்கள் சிறப்பாக நடைபெறும். சில சமயங்களில் ஒரு பெண் அவள் விரும்பும் ஒருவன் வீட்டில் அவன் விரும்பவில்லை என்றாலும் தங்கி இருக்கலாம் என்று இருப்பதையும், பல சமயங்களில் அவன் தாய் தந்தையர் விருப்பம் இன்றியும் இருந்து வருவதையும் காணலாம். இளம் மணமகள் கடுமையான வாழ்க்கையினையே மேற்கொள்கிறாள். ஆனால் எல்லாத் துன்ப நிலைகளையும் அமைதியுடன் தாங்கிக் கொண்டால் அவளுக்கே வெற்றி; அவள் மதிக்கவும் படுகிறாள். இதுவும் மணமகளுக்குத் தரும் பணமும், பழம் தாய்வழித் தலைமை ஏற்பாடுகள், இன்றைய தந்தைவழித் தலைமை ஏற்பாடுகளாக மாறியமையைக் காட்டுகின்றது. இம்மாற்றம் ஆரிய மொழிகள் பேசும் மக்களின் வருகைக்கு முன்னேயே நிகழ்ந்திருப்பதாகத் தெரிகிறது. கோண்டுகளும் அவர்களைச் சார்ந்த சாதியினரும் கொண்டுள்ள தந்தைவழித் தலைமை முறை இந்தியாவின் மத்திய பாகங்களில் டோடமிஸப் பண்பாடு வருகையின் காலத்தது என்னலாம். இந்த டோடமிஸப் பழங்குடிகளுள் பல, பழையதும், டோடமிஸ காலத்துக்கு முன்னது என்று கருதக் கூடியதுமான தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் ஒன்றே போன்ற (*similar*) சின்னங்களைக் கொண்டுள்ளன. இச்சின்னங்கள் திருமணச் சடங்குகளைப் பற்றியவை அல்ல. தாய்மாமனுக்குக் கொடுக்கப்பட்ட இடம், சிறப்பாக டோடமிஸம் பரவியுள்ள இடத்துக்குக் கிழக்கே பெண்களின் பூப்பு விழா கொண்டாடுதல், தாய் இடமும் பல கணவர் மணம் எஞ்சி உள்ளமை காட்டும் சில சின்னங்கள், நில மடந்தையினையும் கிராம அன்னைகளையும் வணங்குதல் ஆகியவையே இச்சின்னங்கள். நிகழ்ச்சிகளில் சில மாற்றங்கள் இருப்பினும், இவற்றில் தாய்வழித் தலைமைப் பண்பாட்டு மூலக் கூறுகளைக் காணலாம். இத்துடன் கீழ்க்கண்ட பழங்குடிகளையும் சாதிகளையும் சிறப்பாகச் சொல்லலாம். பெரியா (*Beria*),

ஹால்பா (*Halba*), கோண்டு (*Gond*), கைகாரி (*Kaikari*), காவார் (*Kawar*), மாங்கு (*Mang*), மராதா (*Maratha*). ஆகிய இவர்கள் மனைவியை முதல் பிள்ளைப் பேற்றுக்குப்பிறந்த வீட்டுக்கு அனுப்பி விடுவது வழக்கம். இவ்வழக்கம் முன்னிருந்த தாய் இடத்துத் திருமணத்தை (*former matrilocal marriage*) நினைவூட்டுகிறது. ராஜாரும் (*Rajhar*), ஓராவோனும் (*Oraon*) சாந்தாலும் (*Santhal*), லோதியும் (*Lodhi*), பார்தியும் (*Pardhi*) இன்னும் சிலரும், டோடமிஸத் தந்தைவழித் தலைமைப்படி அமைந்த வேட்டுவப் பழங்குடிகள் வருவதற்கு முன்னேயே தாய்வழித் தலைமை கிராம நாகரிகம், இந்தியாவின் மத்திய பாகங்களில் நிலவியது என்பதைத் தெரியப்படுத்துகின்றனர். தென்னிந் தியாவில் தாய்வழித் தலைமைப் பழங்குடிகளும் டோடமிஸப் பழங்குடிகளும் கொண்டுள்ள நில அமைப்பு (*geographical position*) இதை வலியுறுத்துகிறது. இப்பழங்குடிகளுடன் இன்றைய 'தாழ்த்தப்பட்டவர்களையும்' சேர்த்துக்கொள்ள வேண்டி இருக்கிறது. ஏனெனில் இவர்கள் இரண்டாம் நிலைத் தாய்வழித் தலைமைப் பண்பாட்டுக்கு உரிய முன்னாள் கிராமப் பயிர்த் தொழிலாளர்களின் வழிவந்தவர்கள் எனக் கொள்ளலாம். இவர்களுடைய நடுவிடம் (*Centre*) மேற்கு மலைத் தொடருக்கு மேற்கேயுள்ள ஒரு பகுதி. ஆனால் இந்தியாவின் மத்திய பாகங்களில் டோடமிஸம் பரவியுள்ள இடமெங்கும் தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் மூலக் கூறுகளைக் காணலாம். இந்தியாவின் கிழக்கே அதாவது அஸ்ஸாமிலும் தாய்வழித் தலைமைப் பகுதியைத் தெளிவாகக் காணலாம். இப்பகுதி காசி (*Khasi*), காரோ (*Garo*)க்களுடையது. ஒரு காலத்தில் இந்தியா முழுவதும் தாய்வழித் தலைமைக் கிராம மக்கள் இருந்தனர் என்பதையும், டோடமிஸச் செல்வாக்கும் டோடமிஸப் பழங் குடிகளும் பிற்காலத்தில் வந்தன என்பதும் பெறப்படுகின்றன.

மேற்கு மலைத் தொடரைக் கடந்து டோடமிஸம் எந்த அளவிலும் செல்லவில்லை என்று, குறிப்பிடத் தகுந்த உண்மை டோடமிஸம் பிற்காலத்தில் வந்துற்றது என்பதையும், தாய் வழித் தலைமைப் பண்பாட்டின் இரண்டாம் நிலை இதற்கு முற்பட்டது என்பதையும் வலியுறுத்துகிறது.

இந்தியப் பண்பாட்டுச் சரிதத்தின் தோற்றத்தையும் பொருளேயும் இவ்வுண்மை நன்கு விளக்குவதாக இருப்பினும், உலகத்து மற்றப் பகுதிகளில் தாய்வழித் தலைமைப் பண்பாடு டோடமிஸத்துக்கும், டோடமிஸத் தந்தைவழிக் கூட்ட அமைப்புக்கும் (*totemistic patrilineal clan-system*) வேட்டுவ நாகரிகத்துக்கும் முற்பட்டதாகத்தான் இருக்கவேண்டும் என்று வலியுறுத்தவில்லை. இந்திய உள் நாட்டுச் சரிதத்தில் முதன் முதல் இருந்த மக்கள் தொல்பண்பு (*primeval character*) உடையவர்கள் என்றும், இப்பண்பு ஒரு வேளைத் தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் முதல் நிலையின் சாயல் கொண்டதாக இருக்கலாம் என்றும் கொள்ளலாம். பிற்காலத் தொடர்ச்சியில் இந்தியாவின் தெற்கு, கிழக்கு, மேல் (*upper*) பாகங்கள் முழுவதிலும் இரண்டாம் நிலைத் தாய்வழித் தலைமை நாகரிகக் கிராமக் குடியானவர்கள் இருந்தனரென்றும், இவர்களின் வழிவந்தவர்கள் சாதி அமைப்புக்கு அடிமைகளாகிப் பயிர்த் தொழில் வேலையாட்களாகவும் தாழ்த்தப்பட்டவர்களாகவும் இருந்து வருகின்றனர் என்றும் தோன்றுகிறது.

இப்படித் தாழ்த்தப்படுவதற்கு முன் டோடமிஸ வேடுவர்களும் எளிய பயிர்த் தொழிலாளர்களும் மத்திய இந்தியாவுக்கு ஏகித் தென்னிந்தியாவின் வடபாகத்திலும் மேற்கு மலைத் தொடர்வரை பரவி யிருக்கவேண்டும். இந்தியாவில் உலோக காலத்துக்கு முற்பட்ட கற்காலத்திய பண்பாட்டுப் பெயர்ச்சிகளை (*cultural migration*) இந்நிகழ்ச்சி முற்றுப்பெற வைத்தது என்னலாம். ஆனால் இந்நிகழ்ச்சிக்கும் மத்திய ஆசியாவின் ஆரிய மொழிகள் பேசும் நாடோடி இடையர்களின் வருகைக்கும் இடையே இன்னொரு பெரும் சத்தி வாய்ந்த பண்பாட்டு இயக்கம் இருந்திருக்கிறது. இதன் செல்வாக்கு இந்தியப் பண்பாட்டு அமைப்பையே பற்றிக்கொண்டு இருக்க வேண்டும். இப்படி ஒன்று இருந்ததாகச் சிறிது காலத்துக்கு முன்னரே தெரிய வந்தது. அதுவே இந்தியாவில் ஆரியர்க்கு முன்னிருந்த தாய்வழித் தலைமை நகர நாகரிகம்.

ஆரிய நாகரிகத்துக்கு முற்பட்ட இப்பெரும் நாகரிகத்துடன் ஆளும் வகுப்பும், போர் மறவர் வகுப்பும் (*warrior class*)

தொடர்பு கொண்டிருந்தன. க்ஷத்திரிய சாதியினரும், அதைவிடக் கேரளத்தில் உள்ள நாயர்களும் பழம் இந்து மதத்துக்கு முற்பட்ட இந்திய நகர நாகரிகம் தந்த பண்பாட்டு வழியுரிமையாளர்கள் (*heirs*) என்பது பண்பாட்டுச் சரித ஒப்புமையால் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. இந்நாகரிகம் தாய்வழித் தலைமை மூன்றும் நிலைக்கு உரியது என்று கொள்ளலாம்.

இம் முடிவுக்கு வரும் முறை நேரானதாக இருக்க முடியாது. ஏனெனில் நேர் ஒப்புமையோ, சரித்திரப் பதிவுகளோ (*historic records*) சிந்துவெளி நாகரிகத்தின் சமூக நிலையைச் சரியாகத் தெரியப்படுத்தவில்லை. பண்பாட்டு ஒப்புமை முறையால் (*method of cultural comparison*) பல முக்கிய இந்து பண்பாட்டு இயல்புகள் ஆரிய நாகரிகத்துக்கு முற்பட்டவை என்பது பெறப்படுகிறது.

இவ்வியல்புகளும் பண்புப் பொருள்களும் (*characteristics*) சிறப்பாகக் கேரளத்தில் உள்ள நாயர்களிடமும், ஓரளவு இந்தியா முழுதும் உள்ள க்ஷத்திரியர்களிடமும் காணலாம். பௌத்தத்தின் சரிதமும், சமூகச் சிறப்பும் இக் கோட்பாட்டை வலியுறுத்தவே செய்கின்றன. பௌத்தத்தில் க்ஷத்திரியர்கள், பிராமணர்களின் ஆதிக்கத்திற்கு எதிரே தம் உயர்வைப் புதுப்பித்தனர். புத்தரே ஒரு க்ஷத்திரியர். ஆனால் பெண்கள் கொண்டிருந்த சமநிலை, சாதி அமைப்பின் தவிர்ப்பு (*exclusion*), பல்கலை நுட்பமும் கோட்பாடும் பொதிந்த பௌத்தத்தின் குறியீடுகள் (*symbols of Buddhism*) ஆகியவையும், ஆரிய நாகரிகத்துக்கு முற்பட்ட சிந்துவெளி நாகரிகத்துக்கும், பௌத்தத்துக்கும் உள்ள பண்பாட்டுச் சரித உறவை (*Culture historic relationships*) வலியுறுத்துகின்றன என்னலாம். இவ்வுண்மைகளை நோக்குங்கால் பௌத்தம் என்பது பழைய ஆரிய நாகரிகத்துக்கு, முற்பட்ட இந்தியப் பண்பாட்டின் புதுத் தோற்றம் (*renaissance*) என்பதும், அதே நேரத்தில் ஆரிய மொழிகள் பேசும் தந்தை வழித்தலைமை மந்தையர் நாகரிகத்தினர் வருகையின் எதிர்ப்பும் பெறப்படுகின்றன. க்ஷத்திரியர்கள் தம் பழம் பண்பாட்டு முறையைக் காத்து வந்திருக்கின்றனர் என்னலாம். இவர்களின் மரபு (*tradition*), நாடோடிக் கதை (*folklore*), உள்ளூர் வழக்

கங்கள் எல்லாம் இதை நிரூபிக்கின்றன. எப்படியும் நாயர்களிடையே பழம் மோஹஞ்சோ-தாரோ நகர நாகரிகம் இன்னும் இருந்து வருகின்றது என்னலாம்.

இந்நாயர்களின் பண்பாடு தாய்வழித் தலைமையது. இது தாய்வழித் தலைமை நாகரிகத்து இரண்டாம் நிலைக்கு உரியது. இவ்வுண்மை கடந்த இரண்டு அல்லது மூன்று ஆயிரம் ஆண்டுகளில் இந்தியச் சமூக, மத ஆக்கத்தின் சிறப்பியல்பை முடிவு செய்யக்கூடியதாக உள்ளது. பொதுவாகத் தாய்வழித் தலைமைப் பண்பாட்டு இயல்புகளையும் சிறப்பாகப் பெண்களின் தனியுரிமைகளையும் எதிர்த்தல், 'குழந்தை மணத்துக்கு ஏற்பட்ட சமூகச் சட்டங்கள், மிகை மணம் (*hypergamy*), விதவையிடம் வெறுப்பு இவை நேராக இதன்பாற்படுகின்றன என்று சொல்லலாம். பிராமணர்களின் ஆதிக்கமும், சாதி அமைப்பின் முதன்மையும், சிறப்பாக உள்நாட்டில் நிலவிய தாய்வழித் தலைமைச் சாதியினரையும் பழங்குடி மக்களையும் 'கீழ்ச் சாதியினர்' அல்லது 'தள்ளப்பட்டவர்' (*out castes*) என்று தாழ்த்தியதும் இதை விளக்குகின்றன என்னலாம். இத்தனை இயல்புகளும் இந்தியப் பண்பாட்டுக்குத்தான் உரியன என்றே சொல்லலாம். ஏனெனில், இவை வேறு எந்த நாட்டிலும் இந்த அளவு இல்லை. பண்பு மிகுந்த பெண்களைத் தம் தகுதியிலிருந்து குறைத்தும், தொன்றுதொட்டு நிலவிவரும் தம் உரிமை நிலையைப் போக்கியும் வந்திருப்பது எளிய செயல் அன்று. பழைய தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் எஞ்சிய சிற்சிலவற்றையும் போக்கச் செய்த முயற்சிகளுக்கு அவ்வப்பொழுது எதிர்ப்பு இருந்தே வந்திருக்கிறது. இதற்கு எடுத்துக்காட்டு பௌத்தம் ஒன்று மட்டும் அன்று. தென்னிந்தியாவில் உள்ள லிங்காயத்துகளின் தோற்றம், சீக்கியர்களின் தோற்றம், ஓரளவு இஸ்லாமியச் சமூகவியல் தோற்றம், கடைசியாகப் பிரம்ம சமாஜத் தோற்றம் இவை போன்ற மத இயக்கங்களின் தோற்றங்கள் எல்லாம் எடுத்துக்காட்டுகளே. இவை பலவும், இவை போன்ற சீர்திருத்த இயக்கங்களும் பெருத்த எதிர்ப்பைக் காணவே செய்தன.

இப்பொழுது நாயர்களின் பண்பாட்டைச் சற்றுப் பார்ப்போம். கேரளத்தில் இவர்கள் தாய்வழித் தலைமைப் போர் மறவர் சாதியைச் (*warrior caste*) சேர்ந்த செல்வமும் அறிவும் மிகுந்த நிலச் சொந்தக்காரர்களாவர். அவர்களுடைய வீடுகளும் சுற்றுப்புறங்களும் நீண்ட சதுர அமைப்பில் கட்டப்பட்டவை. இவை நான்கு திக்குக் காற்றுகளுக்கு ஏற்ப அமைக்கப்பட்டவை. தோட்டத்தின் தென்மேற்கு மூலை நாகக்கோட்டம் (*Snake's grove*) என்று பாம்புகளுக்கென ஒதுக்கப்பட்டிருந்தது. அவர்களுக்கென்று கோவில்கள் இருக்கவில்லை. ஆனால் முன்னோர் வழிபாட்டுக்கு என்று தனி அறைகள் இருந்தன. இவற்றில் சிறு உருவங்கள் வைக்கப்பட்டிருந்தன. இவை மோஹஞ்சோ-தாரோ விலிருந்து அகழ்ந்து எடுக்கப்பட்டவை போலவே உள்ளன. அவர்களுடைய மரபு அணிகளும் (*traditional ornaments*), பானை வகைகளும் மோஹஞ்சோ-தாரோ நாகரிகத்துடன் கொண்டிருந்த உறவையே தெரியப்படுத்துகின்றன. மாடுகள் ஏராளமாகப் பயன்படுத்தப்பட்டன. அவர்களுடைய மரபுப் போர்களில் (*traditional warfare*) யானைகள் முதலிடம் பெற்று இருந்தன. இன்றுங்கூட நாயர்கள் தூய்மை, குளித்தல், நீச்சற்குட்டைகள் (*swiming pools*) ஆகியவற்றுக்கு முக்கிய இடம் தந்திருக்கின்றனர். மோஹஞ்சோ-தாரோவின் பண்பாட்டுச் சரிதத்துடன் இவை ஒன்றியே உள்ளன என்னலாம். புகழ்பெற்ற மோஹஞ்சோ-தாரோவின் குளிக்கும் இடங்கள், மார்ஷல் என்பவர் கருத்தின்படி, இந்துக்கள் பெரிய ஆறுகளில் குளிக்கும் வழக்கத்துக்குப் பிறப்பிடம் ஆகின்றன.

ஐரோப்பியர், பிராமணர், வட இந்தியர், கேரளத்தைச் சேரா முஸ்லிம்கள் ஆகியோர் கேரளத்துள் புகுவதற்கு முன் நாயர்களின் சமூக அமைப்பு தாய்வழித் தலைமையதாகவே இருந்தது. பெண்களுள்மூத்தவளானஒருத்தியின்உடன்பிறந்தானே (*oldest woman's brother*) அடிக்கடி பெரும்பாலும் பொதுச் சொத்துக் காவலனாக இருந்தான். பெண்மக்கள், உடன்பிறந்த பெண் மகளிர் (*sisters*) இவர்களுடைய கணவன்மார்கள் இவர்களைப் பார்த்துவிட்டுப் போவரே தவிர, அவர்களுடன் அதே வீட்டில் இருந்து வாழ்ந்ததில்லை. இக்காலத்திலும் திபேத்துப் போன்ற பல தாய்வழித் தலைமைச் சமூகங்களில் இருந்துவருவதுபோன்று அக்காலத்தில்

ஒரு நாயர் பெண் சட்டப்படிப் பல கணவன்மார்களை ஏற்க முடிந்தது. அக்காலப் போர்ச்சுகீசிய ஐரோப்பியப் பயணிகள் (*travellers*) மனித பழக்கவழக்கங்களின், நம்பிக்கைகளின் பல வகைகளை அறியாமல், நெடுங்காலமாக இருந்துவந்த இப்பழக்கத்தைத் தவருகக்கொண்டு, இதை மதிப்பு வாய்ந்த சட்டம் ஒப்பிய தீயொழுக்கம் (*noble and legalised prostitution*) என்றனர். இப்படித் தவருகக் கொண்டாலும், மதிப்புக்குரிய நாயர் பெண்கள் இத்தகைய திருமணத்தால் மகிழ்ந்திருந்ததுமட்டுமல்லாமல், ஒருவருக்கொருவர் பிரியா வேட்கையினராக இருந்தனர் என்றும் குறிப்பிட்டனர். பூப்புச் சடங்கும் நாயர்களின் வழிப்படி செய்த இருவிதத் திருமணமும் பெண்கள் பூப்பெய்திய பிறகு அவர்களை மண வாழ்க்கைக்கு உட்படவைக்கும் மூன்ரும் படி (*third stage*) தாய்வழித் தலைமை (நகர) நாகரிகத்தின. இத்தனை வழக்கங்களும், நிலைகளும் (*institutions*) பெண்கள் தம் வீட்டிலேயே இருந்துவந்த தாயக (*matrilogal*) வாழ்வைக் குறிக்கிறது.

ஒப்புமைக்காக, ராஜபுதனத்தவர்களைப் (*Rajputs*) பார்ப்போம். அவர்களில் பன்வார் (*Panwar clan*) பிரிவில் நிலவி வருகிற வேடிக்கைப் பாடல் ஒன்றில் ஒரு தாய் தன் மகளிடம் அவள் கொள்ளும் கணவனைத் தன்னுல் ஆனமட்டும் தாயகத்து மணத்துக்கு (*matrilocal marriage*) ஒப்புகிறவனுக ஆக்கும்படி சொல்லுகிருள். முயற்சி பயனளிக்கவில்லை என்ருல், மருந்திட்டேனும் அப்படிச் செய்யத் தூண்டுகிருள். அவர்களுடைய மரபு ஊர்வலங்களில் (*traditional processions*) குதிரைகளுக்குப் பதிலாக எருதுகளே காணப்பட்டன.

ஆரியர் வருகைக்கு முன் இந்தியப் பண்பாடு அண்மைக் கிழக்கின் (*Near east*) பண்பாட்டுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததெனத் தெரிகிறது. இஸ்லாமும், இஸ்லாமியப் பண்பாடும் இதிலிருந்தே எழுந்தன என்னலாம். இப்படிப் பார்த்தால், இந்திய அண்மைக் கிழக்குப் பண்பாடுகள் ஒன்று சேர்ந்த பெரியதொரு அமைப்பாக இருந்ததெனக் கொள்ளலாம். இப்பெரிய அமைப்பின் கிளைகளே தொல் மெசொபடாமியா, பீனீஷியா, எகிப்து, மினேவன் கிரீஸ் (*Minoan Greece*), டாரஸ்

*(the Taurus)*, சிந்துவெளி நாகரிகம் என்பனவாம். இந்தச் சிந்து வெளி நாகரிகத்தின் தாய்வழித் தலைமைப் பண்பாடும், அரசியல் கருத்தும், மதக் கொள்கையும் பௌத்தம் போன்ற இயக்கங்களை ஏற்படுத்தின. இதனால் இஸ்லாத்துக்கும் இந்தியப் பண்பாட்டுக் கருத்துக்களுக்கும் பொதுவாகப் பல பண்பாட்டு மூலக் கூறுகள் அமைந்துள்ளன என்பது தெளி வாகிறது. இவ்விரண்டு, பிரிவுகளின் அடிப்படையை வெளிப் படையாக எவ்வொரு பக்கமும் சாராமல் நன்கு ஆராய்ந்தால் பல பண்பாட்டுக் கூறுகள் பொதுவாக இருப்பதைக் கொண்டே இவை ஒன்றுபடவோ அல்லது ஒன்றி இருந்து *(Co-exist)* வாழவோ செய்யலாம்.

மத்திய ஆசியாவிலிருந்து இந்தியாவுக்குள் ஆரியர் குடிபுகுந்த நாளிலிருந்து இன்றுவரை இந்துவாக மாறுவது நடந்தே வருகிறது. ஆரிய மொழிகளும், அவர்களுடைய தெய்வங்களின் பெயர்களும் இந்தியா முழுதும் பரவி உள்ளன. இவ்வாறே மதமும், சமூக அமைப்பும், அதாவது அவர்களின் தந்தைவழித் தலைமை முறையும் இந்தியாவெங்கும் பரவலாயின. ஆரியர் களுக்குமுன் இருந்த பழங்குடி மக்களில் சீரிய சாதியினர் க்ஷத்திரி யர்களாக ஏற்கப்பட்டனர். குழந்தைத் திருமணம், விதவைத் திருமண விலக்கு, புலாலுண்ணாமை, இன்னும் சில சமூக—மதப் பழக்க வழக்கங்களை ஏற்றுக்கொண்டவர்கள் பிராமண குலத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். சட்டப்படியும் சட்டத்திற்குப் புறம்பாகவும் கீழ்ச்சாதி அல்லது கீழ்க்குடிப் *(lower tribal unit)* பெண்களைச் சேர்ந்ததால் இனக் கலப்பு உண்டாயிற்று. இவ்வாறே இந்நாட்டில் இவர்கள் வருமுன் நிலவிய பல சமூக—மதக் கருத்துக்களையும் நடைமுறைகளையும் பிராமண இந்து சமூகம் ஏற்றுக் கொள்ளவே செய்தது.

பல்வேறு பண்பாட்டுத் தோற்றங்களைக் *(cultural creations)* கூர்ந்து பார்த்தால், எப்படி இந்துக்களும் உள்நாட்டு மக்களும் கலந்தனர் என்பது நன்கு விளங்கும். என்றாலும் உள்நாட்டு மக்களில் *(indegenous population)* எல்லாருமே அவ்வாறு கலப்பெய்திவிடவில்லை. எடுத்துக்காட்டாக, நீலகிரிக் குன்றுகளில் வசிக்கும் தோடர்கள் உடலமைப்பில் வட இந்தியத் துகளைச்

சேர்ந்தவர்கள்; இன்று ஆப்கனிஸ்தானத்திலும் வடமேற்கு இந்தியாவிலும் நாம் காணும் கிழக்கின வகையை (*orientalide type*) ஓரளவு சேர்ந்தவர்கள் என்னலாம். இவர்களுடைய பண்பாடு மெலனீசியன் உறவைக் காட்டும் மிகப் பழம் இயல்பு களையும், ஆரியர்க்கு முன்னிருந்த பெரும் பண்ணை வளர்த் தலையும், சிறப்பு மிகுந்த தாய்வழித் தலைமைப் பண்பாட்டையும் கொண்டது என்னலாம். மோஹஞ்சோ-தாரோவும், ஹாரப் பாவும் சிறப்புற்று ஓங்கி இருந்த காலத்தில், ஏறத்தாழ கி. மு. 2,500ல் சிந்துவெளியின் மேல் பகுதியில் வசித்து வந்தவர்களே தோடர்கள் என்றால் பொருந்தும். ஏறத்தாழ அந்தக் காலத்தில் நாயர்கள் அங்கிருந்து கேரளத்துக்கு எக்காரணத்தாலோ வந்தி ருக்கலாம். அவர்களுடன் தோடர்களையும், சுமை தூக்கி களாகவோ பணியாட்களாகவோ கொண்டு வந்திருக்கலாம். பிறகு இவர்கள் நீலகிரி மலைக்குச் சென்று அங்கே தம் பண்பாட்டு மரபையும் நாயர்களின் பண்பாட்டு மூலக் கூறு களையும் உடன் இருத்தி வாழத் தொடங்கி யிருக்கலாம்.

# 4. பழங்குடி மக்கள்

*(The Tribes)*

இந்தியாவில் பழங்குடி என்றும், சாதி என்றும், பகுப்பு (*sect*) என்றும், வகுப்பு என்றும் பல்வேறு சமூகப் பாகுபாடுகள் காணப்படுகின்றன. இவற்றைச் சமூகப் படிவுகள் (*social stratification*) என்றலே பொருந்தும். பல குடும்பங்கள் அல்லது குடும்பத் தொகுப்புகள் (*groups of families*) ஒரு பெயருடை யனவாய், அவற்றைச் சேர்ந்த மக்கள் ஒரே நிலப்பரப்பில் வாழ்கின்றவர்களாய், ஒரே மொழி பேசுகின்றவர்களாய், திருமணம், செய்தொழில் முதலியவற்றில் ஒரேவித விலக்கு (*taboos*) களுக்கு உட்பட்டவர்களாய், ஒருவருக்கொருவர் எவ் வகையிலும் உதவி செய்துகொள்ளக்கூடிய தன்மையுடையவர் களாய், பழங்காலத்திருந்து இக்காலம் வரை பல வழக்க ஒழுக்கங் களை மாற்றத்துக்கு உட்படாமல் காத்து வருகின்றவர்களாய் இருப்பின் அம் மக்களைப் பழங்குடி மக்கள் என்னலாம். இவர்கள் உள்மணத்தவர்களாக (*endogamaus unit*), அதாவது, தம் கூட்டத்துக்கு உள்ளேயே திருமண உறவு கொள்கின்றவர்களாக இருக்கின்றனர். பல கால்கள் (*clans*) சேர்ந்த ஒரு கூட்டமே, அதாவது டோடமிஸப் பிரிவினுலோ, வாழ்நில ஒருமைப்பாட் டாலோ (*territorial contiguity*) ஒரு காலைச் சேர்ந்தவர்கள் தம்முள் உறவு கொண்டாடுகின்ற ஒரு கூட்டமே பழங்குடி யாகிறது. இவர்களை ஓர் அரசியல் அமைப்புக்குட்பட்ட ஒரு கூட்டத்தினர் என்றும் கூறலாம். ஏனெனில் இவர்களில் பல பிரிவினர்களுக்கு ஒரு தலைவன் இருப்பதையும், ஒரு கால் பகுப்புத் தலைவனோ (*clan chief*) அல்லது வழிவழித் தோன்றும் அரசர் களோ இருப்பதையும் காணலாம். ஒரு பழங்குடியின் ஒவ்வொரு

பகுப்பிலும் பெரியோர் குழு (*Council of elders*) காணப்படு கிறது. இக்குழு வழிவழித் தோன்றும் பெருதனக்காரருக்கு (*headman*) இவர்களுடைய விஷயங்களில் உதவிப் பணி புரிவதற் கென்றே இருக்கிறது. இப்பழங்குடி மக்களிடையே தம் தலைவர் களின் சொல்லைப் பிறழாமல் பின்பற்றவோ அல்லது அவர் களின் கட்டளைக்குப் பணியவோ அல்லது அவர்களின் முடிவைப் பேச்சின்றிப் பாராட்டவோ கூடிய ஒற்றுமை நிலவி வந்திருப் பதைக் காணலாம்.

சாதி வேறு; பழங்குடி வேறு என்பதை நாம் திட்டமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். சாதிக்கும் ஒரு பொதுப் பெயர் உண்டு; பொதுச் செய்தொழில் உண்டு; பொது மொழி உண்டு; உள்மணத் திட்டம் உண்டு. ஆனால் இருவேறு இடங்களில் உள்ள, இருவேறு மொழி பேசுகின்ற இரு ஒரே சாதியினருக்குள் திருமணம் நிகழ்வதில்லை; அவர்களுக்கிடையே சமூக உறவே காண்பதரிது என்னலாம். சமூகப் பாகுபாடுகளுள் தொன்று தொட்டு நிலவி வருகிற ஒரு பாகுபாடே சாதி என்றால் பழங் குடியும் அப்படியே. ஆனால் பழங்குடியின் சிறப்பியல்பாக விளங்குவது உள்மணம் (*endogamy*). ஒரு பழங்குடி இன்னொரு பழங்குடியிடத்துத் திருமண உறவு கொள்ளுதலும் உண்டு. அப்படிக் கொள்வதால் பழங்குடியின் சிறப்பியல்பாகிய உள் மணம் சற்று இழிவுபடுகிறது. டாக்டர் ரிவர்ஸ் என்பவரின் வரைமொழிப் (*definition*) படி பழங்குடி எனின் ஒரு மொழி பேசுகின்ற, போர் முதலிய நேரங்களில் ஒன்றியிருக்கின்ற ஓர் எளிய சமூகத் தொகுப்பு (*a simple social group*) என்றாகிறது. நாடோடிப் பழக்கங்களுடைய இப்பழங்குடி மக்களுக்கு ஒரு நிலப் பரப்பு வாழ்க்கை என்பது முடியாத ஒன்றென்று கொண்டு இவர் இவர்களை ஒரு நிலப்பரப்பினர் என்று கூறாமல் விட்டார். இவர் களிடம் நாடோடிப் பழக்கங்கள் காணப்பட்டாலும் இவர்களுக் கென்று ஒரு நிலப்பரப்பு இருக்கவே செய்கிறது. பேராசிரியர் பிரௌன்ஸ் என்பவர் ஒரு பழங்குடிக்குள்ளேயே எப்படி ஒரு தொகுப்பு இன்னொரு தொகுப்பை எதிர்க்கிறது என்பதைக் காட்டி உள்ளார். பல பழங்குடிகளுக்குத் தலைவர்களோ, அரசவையோ இல்லை என்றே சொல்லலாம். எளிய அரசாங்க அமைப்பு ஒரு பழங்குடியின் சிறப்பியல்பாகவும் இல்லை. பல

தாழ்ந்த சாதி மக்கள் தம்மிடையே சாதிச் சபைகள் அல்லது சாதிக் காப்புச் சங்கங்களை உடையவர்களாய் இருக்கின்றனர். பழங்குடி மக்கள் பொருளாதாரத் தனித் தன்மை (*economic independence*) யுடையவர்களாய் இருக்கின்றனர். சாதி அமைப்பு மாற்றத்துக்கு உட்படாத ஒன்ருய் இருந்தாலும், பொருளாதார நிலை உயர்வின் காரணமாகச் சாதி நிலையும் உயர்கிறது. என்ருலும், பழங்குடிக்கும் சாதிக்கும் உள்ள வேறுபாட்டை எந்த அளவு அவற்றின் அரசியலிலும் பொருளாதாரத்திலும் காண லாம் என்பது சற்றுக் கூர்ந்து நோக்கவேண்டிய ஒன்றேயாகும். நாட்டின் பல பாகங்களிலும் பழங்குடி மக்கள் தாழ்ந்த சாதி மக்களைப்போலப் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டு இருக்கின் றனர். எனவே வேட்டையாடுவது, ஆடு மாடுகள் மேய்ப்பது, பயிர்த் தொழில் செய்வது முதலிய பல தொழில்களில் ஈடுபட்டுப் பழங்குடி மக்கள் வாழ்கின்றனர்.

வெகு காலத்துக்கு முன்னிருந்தே படிப்படியாகப் பழங்குடி, சாதியாக மாறி வருவதை எளிதில் காணலாம். எத்தனையோ விதங்களில் இம்மாற்றம் நிகழ்ந்து வந்துகொண்டிருக்கிறது. இன்றுள்ள பல தாழ்ந்த சாதிகள் பழங்குடிகளிலிருந்து இன்றைய நிலைக்கு மாறியவையே என்னலாம். இப்படி ஒரு பழங்குடி, சாதியாக நான்கு விதங்களில் மாறலாம் என்கிருர் ரிஸ்லீ. அவையாவன: (1) ஒரு பழங்குடியைச் சேர்ந்த நிலச் சொந்தக்காரர்களான முதன்மை பெற்ற சிலர், தம்மிலும் உயர்ந்த ஏதாவதொரு சாதியில் எப்படியோ சேர்ந்து, வாழ வழி செய்துகொள்ளுதல். (2) பல பழங்குடி மக்கள் இந்து மதக் கோட்பாடுகளில் சிலவற்றைப் பின்பற்றும் காரணத்தால் அவர் களுக்குரிய பெயரை இழந்துவிடுதல். (3) பெயரிலிருந்து நாம் கண்டு கொள்ளக்கூடும் என்ருலும், மிகப் பழமையில் தோன்றிய சில பழங்குடிகள், இந்துமதத் தகுதிக்கேற்ப எல்லாரும் அல்லது அவர்களுள் ஒரு சிலர் மட்டும் மாறுவது. (4) பழங்குடியாக இருந்தபொழுது மேற்கொண்டிருந்த தொழிலை விடாமல் இந்து வாகமாறுவது. இவற்றுக்கும் அப்பால், ஐந்தாவதாக ஒரு பழங்குடி மனிதன் ஒரு சாதியின் கோத்திரப் பெயரை வைத்துக் கொண்டு அச்சாதியில் மணமும் செய்துகொண்டு, தன் பழங் குடிக் கூட்டத்தையே விட்டு அச்சாதிக் கூட்டத்துள் நுழைதலும்

உண்டு. இவன் பெரும் பணக்காரனுக இருப்பின், இவன் புகும் சாதியின் ஏழ்மை, இவனைத் தடையின்றி ஏற்கவே செய்கிறது. இப்படித் தம் ஏழ்மை காரணமாகச் சில சாதிகள் செல்வம் உள்ள பழங்குடிகளை உயர்த்திவிடுகின்றன.

பண்பாட்டில் முன்னேற்றமடைந்த தொகுப்பினர், எங்கோ மலைகளிலும் குன்றுகளிலும் தனிமையில் வாழ்ந்து வந்த பல பழங்குடிகளையும் அவர்கள் தனிமை கெடச் செய்துவிட்டனர். இந்த இடத்துக்கு உரியவர்கள் என்று சொல்ல முடியாதபடி இப்பழங்குடிகள் சிதறியும் இருக்கின்றனர். சாதியில் எப்படி மக்கள் ஒருவரையொருவர் நெருங்காமல் இருக்க இன்னூர் இத்தனை அடி தொலைவில் நிற்கவேண்டும் என்று இருக்கிறதோ, அப்படியே பழங்குடியிலும் காணலாம். ஒரு பழங்குடி அல்லது பழங்குடிகள் இன்னொரு பழங்குடி அல்லது பழங்குடிகளிடமிருந்து இவ்வளவு தொலைவில் இருக்கவேண்டும் என்ற கட்டுப்பாடும் இருக்கிறது. ஒருவர் பார்வை இன்னொருவரைக் கெடுத்துவிடாமல் இருக்கவே இப்படி அமைக்கப்பட்டிருக்கிறது என்னலாம். ஒரு சாதியில் எப்படி ஒருவர் தம் கோத்திரத்தவனை மணக்கக் கூடாதோ, அப்படியே பழங்குடியிலும் ஒருவன் தன் பிரிவினைச் (*clan*) சேர்ந்தவளை மணக்கக்கூடாது என்று இருப்பதை நோக்குக. பழங்குடியின் ஒரு பிரிவை (*clan*) விலங்கின் பெயரை வைத்து அழைக்கின்றனர். கோத்திரத்தின் பெயர் முனிவர் ஒருவரின் பெயரால் அழைக்கப்படுகிறது. சாதி மக்கள் எப்படிப் பல தொழில்களிலும் இருக்கின்றனரோ, அப்படியே பழங்குடி மக்களும் பல தொழில்களில் இருந்து வருகின்றனர். ஒரு தொழிலையே வைத்துக்கொண்டு பிழைப்பது அரிது அல்லவா?

பழங்குடிக்கும் சாதிக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளையும் பழங்குடிகள் சாதிகளாக மாறிய வரலாறுகளையும் எந்த அளவு தெரிந்துகொண்டாலும், எந்த நேரத்தில் எப்படி ஒரு பழங்குடி ஒரு சாதியாக மாறுகிறது என்பதைத் திட்டமாகச் சொல்வதற்கில்லை. ஆனல் பில் (*Bhil*), கோல் (*Kol*), கோண்டு தொகுப்பினர் திறந்தவெளியில் வாழும்பொழுது சாதியாக மாற்றம் உறுவதைக் காணலாம்.

பழங்குடி மக்களின் பண்பாட்டைச் சரித்திர, சமூகக் கண்கொண்டு பார்ப்போமானால் பழங்குடியின் சிதைவுக்கு முக்கியக் காரணம் நாகரிகமும் அதன் வளர்ச்சியுமே என்னலாம். ஒரு காலத்தில் இந்தியாவில் இலைகளை அணிந்துகொண்டு, பழங்களைத் தின்றுகொண்டு, எங்கோ ஓரிடத்தில் தனிமையில் வாழ்ந்திருந்த, நாகரிகமே தெரியாத காட்டுமிராண்டி மக்களைப் பார்க்க முடிந்தது. இக்காலத்தில் ஏறத்தாழ எல்லாப் பழங்குடி மக்களும் ஓரளவு நாகரிகம் தெரிந்தவர்களாகவே இருக்கின்றனர். பல இடங்களில் அரசியல் அலுவலாளர்களும், கிறித்துவத் துறவிகளும் இவர்களுடைய வாழ்க்கையை மாற்றி உள்ளனர். பழங்குடி மக்கள் தம் தொகுதியை விட்டுச் சாதித் தொகுதிக்கு வந்து, அச் சாதியின் எண்ணிக்கையை அதாவது 'தாழ்த்தப்பட்டவர்களின்' எண்ணிக்கையை மிகுதியாக்கி உள்ளனர். கடத்திச் சென்று திருமணம் செய்து கொள்ளுதல் (*marriage by capture*) அவர்களின் திருமண வகைகளில் ஒன்று. என்றாலும், இவ்வகையை அரசியலார் இந்தியத் தண்டனை விதித் தொகுப்பு மூலம் (*Indian Penal Code*) தடுத்தனர். எனவே இப்பழக்கம் குறைந்துபோயிற்று. வாரத்துக்கு ஒருமுறை கூடும் சந்தைக் கடைகளாலும், வேடிக்கை நிகழ்ச்சிகளாலும் (*fairs*) பழங்குடிகளின் திருவிழாக்கள் குறைந்து, அவர்களுடைய பொருளாதாரமும் தாக்கப்பட்டது. பழங்குடி மக்கள் தம் பழங்குடித் தகுதி (*tribal status*) யிலிருந்து சாதித் தகுதிக்கு (*caste status*) மாறுவதுகூட, அவர்கள் இவ்விரு தகுதிகளையும் நன்கு புரிந்துகொண்டு, ஒன்று இன்னொன்றைவிடச் சிறப்பு வாய்ந்தது என்று தெரிந்து அல்ல. சில தேவைகளை முன்னிட்டே அவர்கள் அப்படி மாற்றம் உறுகின்றனர். எடுத்துக்காட்டாக, ஒரு ஜெர்மன் மிஷன் அறிக்கை (*Report of the German Mission in Chotanagpur*) யிலிருந்து ஒரு சிறு பகுதியைக் காண்க: "பூத வழிபாட்டை விட்டுத் தொலைப்போம்; கிறித்துவர்களாக மாறி, போதனைகளைக் கற்போம்; துறவிகளால் (*fathers*) நாம் இந்துக்களின் நியாயமற்ற செயல்களிலிருந்து விடுவிக்கப்படுவோம்; நாம் இழந்த நிலத்தைத் திரும்பப்

பெறுவோம்.[1] இப்படிச் சோட்டா நாகபுரியில் ஒரு பழங்குடி மகன் சொல்வதாகக் கூறப்பட்டுள்ளது. இப்பழங்குடி மகன் கிறித்துவத்தைத் தழுவக் காரணமாக இருந்தது, அவர்களின் உதவியற்ற நிலை என்பது இதிலிருந்து பெறப்படுகிறது. ஏழ்மை அவர்களைப் பெரும் குற்றவாளிகளாக்கவும் செய்கிறது. குஜராத்தில் ஏழ்மையின் காரணமாகப் பில் என்ற பழங்குடி கொள்ளையடிப்பதில் தேர்ச்சி பெற்றது என்னலாம். கொள்ளையடித்த பொருளைப் பகிர்ந்தால், ஒருவனுக்கு ஒருநாள் உணவுக்குத் தேவைப்படும் பொருள்கூடக் கிடைப்பதில்லை. என்ருலும் அவர்கள் வாழ வேறு வழி தெரியாதவர்களாய்க் கொள்ளை அடிப்பதை ஒரு தொழிலாகக் கொண்டு வாழ்கின்றனர்; வாழ வழி தெரியாதது மட்டும் அன்று; தெரிந்து கொள்ளவும் முனையாதவர்களாய் உள்ளனர். அப்படித் தெரிந்து கொள்ளாமல் இருப்பதற்குக் காரணம் மூட நம்பிக்கை (*belief in mythology*) யாகும். சாதி மக்கள் எப்படித் தம் துன்ப நிலைக்கும் இன்ப நிலைக்கும் முற்பிறவிப் பயனைக் காரணம் காட்டி மனநிறைவு கொள்கின்றனரோ, அப்படியே இப்பழங்குடி மக்களும் ஒரு புராணக் கதையைக் காட்டி (*mythical story*) மனநிறைவு கொள்கின்றனர். பில் என்ற பழங்குடியினர் பார்வதிக்கு உறவினரெனத் தம்மைக் கூறிக் கொள்வதுண்டு. பார்வதியை மணந்த மகாதேவனிடம் இவர்கள் வரதட்சிணை கேட்டனராம். அவரிடம் பொருள் ஒன்றும் இல்லை என்று தம்மிடம் இருந்த நந்தியைக் கொடுத்து அந்நந்தியின் முசுப்பு மிகுந்த செல்வத்தைக் கொண்டது என்று சொல்லி அனுப்பினாராம். ஆனால் இதைப் புரிந்துகொள்ள முடியாத இப்பில்கள் அதைக் கொன்று அதன் முசுப்பில் ஒன்றும் இல்லாததைக் கண்டனராம். இப்படி இவர்கள் செய்த தகாத செயலின் காரணமாகவே இவர்கள் இன்று இவ்வளவு ஏழ்மையில், ஏழ்மையைப் போக்கும் வழி தெரியாமல், அவதிப்படுவதாகச் சொல்லிக் கொள்கின்றனர். பழங்குடி மக்களின் அறிவு வளரப் பெருத நிலை இதிலிருந்து நன்கு தெரிகிறதல்லவா? வார்லிஸ் (*Warlis*) என்ற பழங்குடி

1. 'Let us give up demon worship; become Christians and be instructed, that assisted by the Padris we may be saved from the unjust operation of the Hindus and regain the land that we have been deprived of.'

மக்களின் நிலையைச் சீர்ப்படுத்த கே. ஜே. ஸேவ் (*K. J. Save*) என்கிறவர் சொன்னதாவது: தீவிர சீர்திருத்தக்காரர் சிறிதும் தயக்கம் இன்றி, எவ்வித முன்னேற்றதுக்கும் கல்வியே அடிப்படை என்றுதான் கூறுவர். இது மறுக்க முடியாத ஒன்று தான். ஆனல் வார்லிஸ் பழங்குடிகளைப் பொருத்தமட்டில் கல்விக்கு முன் உணவே கொடுக்கப்பட வேண்டியதாய் உள்ளது. இயற்கை உணர்ச்சியாகிய பசியை முதலில் தணிக்க வேண்டியிருக்கிறது. ஒரு நாளைக்கு இரு வேளைகூட உணவு கிடைக்கப் பெருத மக்களிடம் கல்வியைப் பற்றிப் பேசுவது வெற்றுப் பேச்சே. பசித்த மனிதன் உணவு ஒன்றைத் தவிர வேறு எதையும் செரிக்க மறுக்கிருன். ஏழ்மையே இவர்களின் வாழ்க்கை முறையாக உள்ளது என்று அடிக்கடி கூறியுள்ளேன். ஏனவே, அவர்களுக்கு உணவு கிடைக்கும்படி செய்வதே பெரிதும் தேவைப்படுவது.[1]

○

*1931*-ஆம் ஆண்டு மக்கள் எண்ணிக்கை அறிக்கைப்படி (*census report of 1931*) இந்தியாவில் தொல்காலப் பழங்குடிகள் *1921*-ல் *16* மிலியனும், *1931*-ல் *25* மிலியனும் இருந்தனர். பத்தாண்டுக் காலத்தில் *9* மிலியன் அதிகப்பட்டனர். சில பழங்குடி மக்கள் இந்து, கிறித்துவ, முஸ்லிம் மதங்களுக்கு மாறிய காரணத்தால் எண்ணிக்கையில் குறையவே செய்தனர். என்ருலும், பழங்குடிகள் என்ற பெயரில் அவர்கள் வலுவடைந்தனர் என்னலாம். எடுத்துக்காட்டாக முண்டர்கள் (*the Mundas*) *1891*-ல் *333, 446* ஆகவும் *1931*-ல் *658,450* ஆகவும் எண்ணிக்கையில் மிகுந்தனர். ஹோஸ் (*Hos*) களும், மற்றும் சோடா நாகபுரியில் உள்ள சான்தால்களும் இப்படியே எண்ணிக்கையில் மிகலாயினர். ஆனல் தோடர்கள் எண்ணிக்கை *1881*-ல் *2689*-லிருந்து *1891*-ல் *1,731*-க்கும், *1901*-ல் *807*-க்கும், *1911*-ல் *748*-க்கும்,

1. An ardent reformer will unhesitatingly say that all improvement must be educational and the primary education is the basis of everything. This indeed cannot be disputed. But in the case of the Warlis, prior to education, the problem of bread must be solved. The natural instinct of hunger must first be satisfied. In case of people who hardly get bread twice a day, literacy is a tall talk. A hungry man refuses to digest anything but food. Time and again it has been pointed out in these pages that poverty is the way of life of the people. To enable them to get their food is therefore the supreme need.

கடைசியாக 1931–ல் 640–ஆகக் குறையலாயிற்று. சென்னையில் கோடர்கள் (*Kotas*) எண்ணிக்கை 1921-ல் 1,204-லிருந்து 1931–ல் 1,121 ஆகக் குறைந்தது. திருவாங்கூரில் உள்ள இந்துக்களாக மாறிய மலாரியர்கள் (*Hinduised Malariyans*) எண்ணிக்கை 1891–ல் 4,809–லிருந்து 1901–ல் 2,807–க்குக் குறைந்தது; பழங்குடி மலாரியர்கள் இதைவிட அதிகமாகவே குறைந்தனர். 1921–ல் 2858–ஆக இருந்தவர்கள் 1931–ல் 128–ஆக ஆயினர். சென்னையில் உள்ள இன்னொரு பழங்குடி மக்களான மாவில்லர்கள் (*Mavillans*), இந்துக்களாக மாறியவர்களும் பழங்குடிகளாகவே இருப்பவர்களும் சேர, 1891–ல் 2590–லிருந்து 1931–ல் 1311–க்குக் குறைந்தனர். ஆந்திரத்திலும், கோர்வாக்கள் (*Korwas*: குறவர்கள்) 1921–ல் 1204 ஆக இருந்து 1931–ல் 1,121–க்குக் குறைந்தனர்.

பெரும் அளவு இப்படிக் குறைந்து வருவது ஒருவிதத்தில் பழங்குடிகளின் வாழ்க்கை உயர்வுக்கே நலம் பயப்பது என்னலாம், பழங்குடி மக்களின் தலைவர்களே கூட எளிதில் பொறுமை இழக்கக் கூடியவர்களாகவும், தாம் இழிந்த வாழ்க்கையினர் என்ற எண்ணம் கொண்டவர்களாகவும் இருக்கின்றனர். முன்னேற்றம் விரும்பி, முன்னேற்றமடையக் கூடியவர்களாக இல்லாமல், தாம் வாழும் இடத்துக்குப் பக்கமாக உள்ள தம்மிலும் சிறிது உயர்ந்த வாழ்க்கையை உடையவர்களின் போக்கைத் தேவை காரணமாகப் பின்பற்றுகின்றவர்களாக இருக்கின்றனர். இவர்களின் வாழ்க்கை வசதிகளை உயர்த்திப் பிறகு ஓரளவு கல்வியைப் புகட்டி, படிப்படியாக இவர்களின் பண்பாட்டையும் நாகரிகத்தையும் உயரச் செய்யும் முயற்சியே இவர்களுக்கும் இவர்களைச் சூழ்ந்திருக்கும் மக்களுக்கும் நலம் பயப்பது என்று சொல்லலாம். அரசியலார் தாழ்த்தப்பட்ட சாதிகளுக்கும் பழங்குடிகளுக்கும் கொடுத்துவரும் வாய்ப்புக்களும் உதவிகளும் போற்றற்கு உரியனவே.

இந்தியப் பேரரசை உண்டாக்க எண்ணிய பொழுதே ஆங்கிலேயர் பழங்குடிகளைப்பற்றிச் சிறிது சிந்திக்கலாயினர். இந்து சமீந்தார்களை எதிர்த்த பகாரியாப் பழங்குடிகளை (*Hill Paharia of the Rajmahal hills*) அந்தக் காலத்திலேயே அடக்க

வேண்டிய தேவையை அவர்கள் உணர்ந்தார்கள். முதலில் ஆயுதத்தால் அடக்கினுலும், பிறகு அவர்களைத் தட்டிக்கொடுத்தே அமைதிப்படுத்த வேண்டும் என்று முடிவுக்கு வந்தனர். பழங்குடிகளின் தலைவர்களுக்கு ஓய்வுப்பணம் தந்து அவர்களுடைய நல்ல எண்ணத்தை விலைக்கு வாங்கினர். ஓய்வுபெற்ற போர் மறவர்களைப் பழங்குடிகள் வாழும் இடத்தைச் சூழ்ந்திருந்து வாழும்படி செய்தனர்; சமீந்தார்களிடம் எந்தத் தொடர்பும் இல்லாமல் செய்தனர். இப்படிப் பலவாறு பழங்குடிகள் அமைதியாக வாழ வழி செய்தனர் என்றுலும் அவர்களுடைய வாழ்க்கை முன்னேற்றத்துக்கு அவர்கள் செய்த எவ்வழியும் பொருந்தவில்லை என்றே சொல்லலாம். அது மட்டும் அன்று, பல நிகழ்ச்சிகளில் பழங்குடி மக்கள் வேறுபடுத்தப்பட்டு, வேண்டாத அளவு தாழ்த்தவும் பட்டனர். 1855 வரை அதாவது சன்தாலர் கிளர்ச்சி (*Santhals' revolt*) வரை, பழங்குடி மக்கள் இப்படியே நடத்தப்பட்டனர். பிறகு பழங்குடி மக்கள் வாழ்ந்த பகுதிகள் அத்தனையும் ஒரு தனி ஆட்சி (*special administration*) க்கு உட்பட்டது. கவர்னர் ஜெனரலுக்குப் பிரிட்டிஷ் பாராளுமன்றம் இப்பழங்குடிகளுக்கு என்று சட்டம் செய்து, அதை நிறைவேற்றும் உரிமையைத் தந்தது. அடிப்படையில் 1919 வரை பழங்குடி மக்கள் ஆளப்பட்டனர். 1919–ல் இந்திய அரசியல் சட்டம் கொண்டு வரப்பட்டது. இதற்கு அப்புறப்பட்டும் (*excluded*) உட்பட்டும் (*included*) சில பகுதிகள் வரையறுக்கப்பட்டன. இப்படி ஆங்கில ஆட்சிக் காலத்தில் பழங்குடிகள் தொல்லை கொடுக்காதவாறு மட்டுமே பார்த்துக்கொள்ளப்பட்டனர். அது மட்டும் அன்று. அவர்களை முடிந்த அளவு பெரிதும் பயன்படுத்திக் கொண்டனர் என்றே சொல்லலாம். எனவே அவர்கள் வாழ்க்கையில் உயர முடியாமல், முரடர்களாகவும் மூடர்களாகவுமே இருந்து வந்தனர்.

1947ல் இந்தியா, ஆங்கில ஆட்சியிலிருந்து விடுதலைபெற்ற பிறகு இந்தியன் என்ற எவனும் உரிமையுடன் வாழ, முன்னுக்கு வர வாய்ப்பு அளிக்கும் அரசியல் அமைப்பை உண்டாக்கியது. இதன்படி எந்தப் பண்பாட்டைச் சேர்ந்தவரும், எந்த நாகரிகத்தைச் சேர்ந்தவரும், எந்தப் பகுதியைச் சேர்ந்தவரும் ஒரேவித வாய்ப்புதரப்பட்டவராய், வாழ்கின்றனர். குறிப்பாகப் பழங்குடி

களுக்கு என்று பல சலுகைகளும் தரப்பட்டன. இந்திய அரசியல் அமைப்பு மூன்ரும் பாகம் (*PartIII*) அடிப்படை உரிமைகளின் (*Fundamental Rights*) படி இந்தியக் குடிகளுள் எவரையும் மதத்தின் காரணமாகவோ, சாதியின் காரணமாகவோ அல்லது பிறப்பிடத்தின் காரணமாகவோ வேறுபடுத்தக்கூடாது (*Article, 15*) என்று விதி கொண்டுவரப்பட்டது. 16-வது விதிப்படி(*Article,16*) அரசாங்க வேலை எதிலும், எவர்க்கும் ஒரே சீரான வாய்ப்பு கொடுக்கப்பட்டது. 17-வது விதிப்படி தீண்டாமை ஒழிக்கப்பட்டது. 23-வது விதிப்படி மக்களைக் கடத்தி, கட்டாய உழைப்புக்கு உள்ளாக்குதல் தடுக்கப்பட்டது. பழங்குடிமக்கள் அல்லாதார் பழங்குடிகளைக் கீழாக நடத்துவது இதனல் ஓரளவு குறைக்கப்பட்டது. 12-ம் பாகம், விதி 275-யின் படி மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கங்களுக்கு வரையறுக்கப்பட்ட பழங்குடிகளின் நலத்துக்கென்றே பண உதவி கொடுத்து வருகிறது. மக்களவையிலும் (*Lok Sabha*), மாநிலச் சட்ட அவைகளிலும் வரையறுக்கப்பட்ட சாதிகளுக்கும் பழங்குடிகளுக்கும் 16-ம் பாகம், 330, 332-ம் விதிகளின்படி சில இடங்கள் ஒதுக்கப்பட்டன. இப்படி இவ்வரசியல் அமைப்பு (*constitution*) நடைமுறைக்கு வந்த நாளிலிருந்து 10 ஆண்டுகளுக்கே வைக்கப்படலாம் என்றிருந்தது. இவ்வாய்ப்பு இன்னும் 10 ஆண்டுகளுக்குக் கொடுக்கப்படலாம் என்று மத்திய அரசாங்கம் இவ்விதியின் காலத்தை நீடிக்கச் செய்திருக்கிறது. ஆருவது அட்டவணைப்படி (*according to the sixth schedule*) அஸ்ஸாம் பழங்குடி மக்கள் நிலப் பகுதிகளுக்கு ஓரளவு சமூக, பண்பாட்டு, அரசியல் செயலுரிமை அல்லது தன்னுட்சி (*autonomy*) கொடுக்கப்பட்டது. இது அரசியல் அமைப்பின் நடைமுறையைப் பொருத்திருப்பது வெளிப்படை. நாகர்கள் வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டு என்னலாம்.

பழங்குடி மக்களின் வாழ்க்கை உயர்வுக்கும் அவர்கள் இந்தியக் குடிமக்களாகத் தங்கள் உரிமையை உணர்ந்து தங்கள் கடமையைச் செய்யும்படி தூண்ட மேற்கூறிய அத்தனையும் உதவியாக இருக்க முடியுமே தவிர, அவர்களுடைய வாழ்க்கை இவற்ருலேயே வெகுவாகச் சீர்ப்பட்டுவிட முடியாது என்றே சொல்லலாம். ஏனெனில் இப்பழங்குடிகளின் முன்னேற்றத்துக்கு அடிப்படை இந்தியாவின் தொழில் முன்னேற்றம் என்ன

ளாம். பல தொழிற்சாலைகள் இந்தியாவில் பல இடங்களில் அமைக்கப்பெற்ருல், இப்பழங்குடிகள் ஓரிடத்திலேயே இருந்து ஒரே தொல்பழக்கத்துக்கு அடிமையாகாமல், நாட்டின் பல பாகங் களிலும் சிதறிப் பல பண்பாட்டினருடன் கலந்து முன்னேற முடியும். பழங்குடிகளின் பழம் வாழ்க்கை முறை அடிப்படை மாற்றத்தை அடையும். இதுவரை மானிடவியல் வல்லுனர் (*anthropologists*) பலர், பழங்குடி மக்களை நாகரிகம் வளர்ந்த சூழ்நிலைக்கு அவர்களை நாகரிகம் வளரப் பெற்றவர்களாக ஆக்கும் செயலுக்குத் தேவைப்படும் பொருள்களை இந்தியா பெறும்வரை உட்படுத்தக் கூடாது என்று கருதினர். இவர்கள் இப்படிக் கருதியதில் தவறில்லை என்றே கொள்ளலாம். இந்தியப் பொருளாதாரம் உயர்வடையத் தொழில்கள் பல சிறக்க வேண்டும். பின்னரே இந்தியாவின் ஏறத்தாழ 22 மில்லியன் பழங்குடிகளும் முன்னேற முடியும் என்று துணிந்தே கூறலாம்.

பழங்குடிகள் முன்னேறவேண்டும் என்ருல் அவர்களுடைய நல்ல வழக்க ஒழுக்கங்கள் கெட்டுப் போலி நாகரிகத்துக்கு இரையாக வேண்டும் என்பதன்று பொருள். இவர்களுடைய பண்பாட்டில் பழங்குடி அல்லாதார் (*non-tribes*) தெரிந்து பயனடையக் கூடிய பல சிறப்பியல்கள் உள்ளன. அவர்களுடைய கூடிவாழும் இயல்பு, குழந்தைகளிடம் அவர்கள் காட்டும் அன்பு, எளிய வாழ்க்கை இப்படிப் பல நற்பண்புகள் அவர்களிடம் காணலாம். இவை அத்தனையும் போற்றற்கு உரியனவே தவிரப் புறக்கணிக் கூடியவை அல்ல. இவர்களைத் தொழில்களில் ஈடுபடுத்தினுலும் கூட மலைச்சரிவுகளிலும் மலையடிகளிலும் ஊர்ப் புறங்களிலும் வாழ்ந்துவரும் இவர்களுடைய இருக்கைகளை (*places of living*) மாற்ருமல் இருப்பதே நலம். போக்குவரத்து வசதிகள், மலேரியா போன்ற நோய்களிலிருந்து நல்லுடல்பேணும் பழக்கத்துக்குரிய ஏற்பாடுகள் போல்வனவற்றில்தான் இவர்களுக்கு முதலில் உதவ வேண்டும். இந்திய நாட்டில் இவர்களுடைய நாகரிகமும் பண்பாடும் தனித்துச் சிறப்பெய்தும்படி செய்வதே அறிவுடைமை என்னலாம்.

மானிடவியலார், சன்தால் என்னும் பழங்குடிகளே மிகத் தொன்மை வாய்ந்தவர்கள் என்கின்றனர். அப்படி இருந்தும்

இவர்களுடைய வழக்க ஒழுக்கங்களும், நடத்தைகளும், நம்பிக்கை களும் எடுத்துச் சொல்லும் அளவு ஓரளவும் வரவில்லை என்றே சொல்லலாம், இவர்கள் பொதுவாக ஒழுங்கு கெடாதவர்களே என்றாலும் உணர்ச்சி வயப்படின் மிகப் பொல்லாதவர்கள்; தற் கால நாகரிகத்துக்கு இணங்காதவர்கள் என்னலாம். கீழ்க்கண்ட அறிக்கை இதை வலியுறுத்துவதைப் பார்க்கலாம். இது, சென்னை, ஜனவரி-1, 1959-ல் 'மெயில்' செய்தித்தாளில் கண்டது.

காட்டிலாக அமைச்சர் உயர்திரு. எம். பக்தவத்ஸலம் அவர்கள் நேற்று அண்ணுமலைக் குன்றுகளில் வாழும் அக்குன்று களின் ஆதிப் பழங்குடிகளாகிய மலை மலசார் (*Malai Malasar*) களுக்கு மற்றப் பகுதிகளில் வேலை தருவதாகவும், அவர்களுடைய வாழ்க்கை வசதிகளை மேம்படச் செய்வதாகவும் கூறினார். ஏறத் தாழ 150 குடும்பங்களால் ஆக்கப்பட்ட இந்த ஆதிப் பழங் குடிகள் மற்றப் பகுதிகளுக்குப் பெயர்வதை விட இப்படித் தொல்லைப்பட்டே வாழ்வோம் என்று சொல்லி, வெட்டென மறுத்தனர். நம் முதலமைச்சர் உயர்திரு. காமராஜ் அவர்களும் இவர்களுடைய பிள்ளைகளைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பு மாறு சொன்னபொழுது, "எங்கள் குழந்தைகள் ஆசிரியர்களைக் கண்டாலே பயப்படுகின்றனர். எவ்வளவு சொன்னாலும் வகுப் புக்களுக்குப் போக மறுக்கவே செய்கின்றனர்," என்று பழங் குடித் தலைவன் பதிலுரைத்தனன். எனவே பழங்குடிகள் தம் இருப்பிடத்தை விட்டு அகலவோ, கல்வி கற்கவோ மறுப்பது வெளிப்படை.

இவர்கள் நலத்துக்கு என்றே இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 48 கோடி ஒதுக்கப்பட்டது. இவர்களைத் திருத்துவது எளிய செயல் அன்று என்றாலும் இவர்கள் திருந்தி வாழ முடியாதவர்கள் அல்லர். எனவே இவர்களுடைய தேவை களைப் புரிந்துகொண்டு, இவர்களின் மனநிலையைப் புறக்கணிக் காமல் செயல் ஆற்றின் இவர்கள் எப்படியும் திருந்தவே செய்வர். ஒரு செயல் எவ்வளவு அறிவுக்குப் புறம்பானதாக இருந்தாலும் அச்செயலையே விரும்பி ஏற்கும் மனத்தைத் திருத்தவேண்டுமெனின், அப்படித் திருத்த முனையும் ஒருவருக்குப்

பொறுமை மிக மிகத் தேவை. பொறுமையுடன் செயல் திறமும் தேவை. பழங்குடி நலத்திட்டங்களை வகுக்கும்பொழுது,

1. முன்னேற்றத்துக்குரிய செயல்கள் தனியொரு பழங்குடியின் வாழ்க்கை முறைக்கு முரண்படாதவையாகவும்,

2. பழங்குடி மக்களின் தன்மானத்தை இழிவு படுத்தாதவையாகவும்,

3. பழங்குடியல்லாதாருடைய வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட பழங்குடிகளின் வாழ்க்கைக்கு ஒவ்வாதவையாக இல்லாமலும்,

4. பல்வேறு பழங்குடிகளின் பண்பாட்டையும் தோற்றத்தையும் ஒன்றெனக் கொள்ளாதவையாகவும்,

5. எத்திட்டத்துக்குரிய செயலும் துரிதப்படுத்தப்பட்டுத் திணிக்கப்படாததாகவும் இருக்குமாறு பார்த்துக் கொள்வது மிக முக்கியம்.

# 5. தென்னிந்தியப் பழங்குடிகள்

*The Tribes of South India*

## 1. தோடர்

நீலகிரியில் வாழ்கின்ற இவர்கள் எந்தக் காலத்தில் இவ்விடத்துக்கு வந்தார்கள் என்பது தெரியவில்லை. 1941-ம் ஆண்டு மக்கள் எண்ணிக்கைப்படி 630 தோடர்கள் (ஆண்கள் 342; பெண்கள் 288) இருந்தனரெனத் தெரிகிறது. இவர்கள் நடுத்தர உயரத்துக்கும் சிறிது மேலானவர்களாகவும், உறுப்புக்கள் ஒன்றுக்கொன்று அளவில் சீருடையனவாகவும், நல்ல உடற்கட்டும், நேர் மூக்கும், முத்துப் போன்ற பற்களும் உடையவர்களாகவும் உள்ளனர். இவர்கள் பஞ்சால் நெய்யப்பட்டுச் சிவப்பும் நீலமும் சேர்ந்த கரையுடையதாக உள்ள 'புத்குளி' (*putkali*) என்னும் ஆடை அணிகிறார்கள். 'கொடா' (*Koda*) என்னும் சொல்லின் திரிபே 'தோடா' (*Toda*) என்பர். கோடவர் எனின் மலைவாசிகள் என்பது பொருள். ஆனால் இப்பெயரை இவர்கள் விரும்புவதில்லை. மலைகளில் வாழ்ந்தாலும், இவர்கள் எருமை மேய்த்துப் பிழைப்பவர்கள். தூத மரம் (*Tud tree: Metisoma simplicifolia*) இவர்களுடைய புனித மரம். 'தூதா' என்றே இவர்கள் தம்மை அழைக்கின்றனர். தமிழர்களும் இவர்களைத் 'தூதவர்கள்' என்றே அழைக்கின்றனர். துணியால் போர்த்தப்பட்டு, ஆயுதமின்றி, மந்தை மேய்த்து எளிய வாழ்வு வாழ்கின்றனர். பண்ணையாளும், நீண்ட கொம்புடைய பெரும் எருமைகளுமே இவர்களுடைய புனிதமான பொருள்கள். காய்கறிகளையே இவர்கள் உண்கின்றனர். திருமணத்தின் பொழுதும் இறப்பின் பொழுதும் ஆயுதங்கள் வைக்கப்படுகின்றன. இவர்

களுடைய மொழி தமிழுடன் பெரிதும் இணைந்ததாக உள்ளது. இவர்களின் ஊருக்கு மந்து (*mand*) என்பது பெயர். தமிழ்ச் சொல்லாகிய மந்தையிலிருந்து இது வந்தது என்னலாம். 18' 9' 10' அளவுள்ள மூன்று குடிசைகளைக் கொண்டதே இவ்வூர். 32"×18" அளவுள்ளதே இக்குடிசைகளின் வாய்ப்புறம். இம் மூன்று குடிசைகளுடன் இவற்றைவிடச் சற்றுப் பெரிதாக, ஆனால் வாய்ப்புறம் இன்னும் சிறிதாக ஒரு குடிசை உள்ளது; அதைத் திரியேரி (*tirieri*) அல்லது பண்ணைக் கோவில் (*dairy temple*) என்கின்றனர். இவ்வூர்க்கு அருகே வட்ட வடிவமாகத் தளர்ந்த கற்சுவரால் ஆக்கப்பட்ட ஓர் இடம் உள்ளது. இவ்விடம் எருமைகள் இரவில் தங்குவதற்கு என்றே ஆக்கப்பட்டது. திரியேரியைப் பால்சி (*palchi*) என்றும் கூறுகின்றனர். இது பலால் (*palal*) என்பவர்களால் பார்த்துக் கொள்ளப்படுகிறது. தோடர் பஞ்சாயத்தின் அனுமதியின் மேல் தோடர்களுள் ஒருவர் பலாலாக நியமிக்கப்படுவார். இவர் திருமணம் ஆகாத வராக இருக்கவேண்டும். திருமணம் ஆனவராக இருப்பின் மனைவியை உடன் பிறந்தான் காப்பில் விட்டுவிட்டு இப்பதவியை ஏற்க வேண்டும். பலாலாக ஆகும்பொழுது நிகழும் சடங்கில் தூத மரத்தின் சாறு கொடுக்கப்படுகிறது. இவர் ஆடையின் நிறம் கருமை. 10 அல்லது 12 ஆண்டுகளே இப்பணியை இவர் மேற்கொள்ளலாம். 8-லிருந்து 10 வரை வயதுள்ள பையன்களே இவர்களுக்கு உதவியாட்கள். இவர்கள் 'கால்டமாக்' எனப்படு கின்றனர். (*Kaltamak Watchingson* காக்கும் மகன்.) திரியேரி யினுள்ளே அவரவர் அறையின் வெளியே ஆடையின்றி இருக்கவேண்டும். திரியேரியினுள் வேறு எவரும் புகக்கூடாது. மணிப்பசு (*bell-cow*) ஒன்று, இக்கூட்டத்தார் ஒரு புற்றரை (*pasture*) யிலிருந்து இன்னொரு புற்றரைக்கு இடம் பெயரும் (*migrate*) பொழுது, மணி ஒன்றைக் கட்டிச் செல்லும். இப்பணியை இவ்விலங்கு வழிவழிச் (*heriditary*) செய்துவரும். மொத்தத்தில் தோடர்களுக்குப் பசு மந்தை மிக மிகப் புனிதமான ஒன்று.' அதை அவர்கள் வாழ்க்கையின் சிறப்பு என்றே சொல்லலாம்.

திரியேரியைத் தவிர, காந்தால் (*kandal*), தார்நாத் (*tarnat*) மந்துகளில் இருவேறு பண்ணைத் தொழுவங்கள் (*dairy-temples*)

உள்ளன. காந்தாலில் குருபுலி (*kurupuli*) என்றும், ஓர்ழாளி (*orzhali*) என்றும் இரண்டு தொழுவங்களும், தார்நாத்தில் கோக்வேலி (*kokweli*), தார்வேலி, (*tarweli*), ஓர்ழாலி (*orzhali*) என்றுமூன்று தொழுவங்களும் உள்ளன. இவற்றின் பூசாரிக்குக் (*prists*) கார்ப்பாள் (*Karpal: guardian*)என்பதுபெயர். இது கா என்ற பகுதியினடியாகப் பிறந்த காப்பாள் என்ற தமிழ்ச் சொல், ரகாம் விரிந்து, கார்ப்பாள் என்ருயிற்று என்னலாம். இவர்களைக் குருபுலி கார்ப்பாள், தார்வேலிக்கார்ப்பாள் என்று அவரவர் தொழுவப் பெயரை முன்கூட்டி அழைக்கின்றனர். ஆனால் ஓர்ழாலிப்(*orzhalli*) பூசாரியை ஓர்ழாளி என்றே அழைக்கின்றனர்.

தோடர்கள் பிணங்களை எரிக்கின்றனர். ஆண் பிணத்துடன் வில், அம்பு, தடி, அரிசி, வெல்லம், தேன், தேங்காய், வாழைப் பழங்கள், புகையிலை, மூங்கில் கண்டி (*khandi*) ஒன்று, பணத் துக்குப் பதில் கௌரிக்கள் (*cowries*) இவை அத்தனையும் எரிக் கப்படுகின்றன. பெண் பிணமாக இருப்பின் சமையல் பாத்திரங்கள், நகைகள், சமைத்த உணவு, நூல் கௌரிக்கள் இவை அத்தனையும் உடன் எரிக்கப்படுகின்றன. எரிந்த பொன், வெள்ளியைப் பிறகு சாம்பலிலிருந்து எடுத்துக் கொள்கின்றனர்.

இவர்கள் தெய்வத்தைத் தமிழ்ச் சொல்லால் கடவுள் என்றே அழைக்கின்றனர். ஆம்நாட் (*Amnad*) என்பது இவர்கள் இறைவன் உலகுக்கு (*heaven*) இட்டிருக்கும் பெயர். தோடர் களில் முதலில் தோன்றியவனை 'என்' (*En*) என்று அழைத்தனர். இந்த 'என்' னுக்கு திர்கிஷ் (*Tirkish*) என்ற மகனும், பேதாகன் (*Betakan*) என்ற பேரனும் இருந்தனராம். இப்போதகனுக்குக் கோயில் கட்டி, வைநாட்டில் (*Wynaad*) உள்ள நம்பலகோட்டில் வணங்குகின்றனர். மேலூரில் ஹிரியாதேவா என்ற மணிப்பசுக் கடவுளுக்குக் கோயில் ஒன்று இருக்கிறது. நஞ்சன்கூடு, காரமடை என்ற இந்து ஸ்தலங்களுக்கு இவர்கள் திருப்பயணம் (*pilgrimage*) செய்கின்றனர். நான்கு அல்லது ஐந்து ஆண்டு களுக்கு ஒருமுறை அல்லது ஆண்டுக்கு ஒருமுறை கூட ஓர் எருமைக் கன்றைத் தூத மரத்தடியில் உயிர்ப்பலி (*sacrifice*) இடுகின்றனர். இதை ஓர்ஷால் அல்லது பாலிகார்ப் பான் (*Vorshal or Palikarpan*) என்பவர் செய்வர். இச்சடங்

கைக் கோன ஸாஸ்த்ரம் (*Kona sastra : Eastern sastra*) என்கின்றனர்.

தோடர்கள் கென்ன (*Kenna*), குத்தான் (*Kuttan*), பைகி (*Pieki*), பெக்கான் (*Pekkan*), தோடி என்று ஐந்து கால்களாகப் (*clans*) பிரிக்கப்பட்டுள்ளனர். இக்கால்களில் சில ஒன்றுடன் ஒன்று திருமணத் தொடர்பு வைத்துக் கொள்வதில்லை. பைகிகள் தேர்த்தாள், அதாவது தேர்ந்த ஆள் (*superior being*) என்றும், மற்றவர்கள் தார்த்தாள் (*Tartal*), அதாவது தாழ்ந்த ஆள் என்றும் அழைக்கப்படுவதிலிருந்து இவர்கள் தம்முள் பாராட்டும் வேறுபாட்டினை நன்கு தெரிந்துகொள்ளலாம்.

தோடர்களில் பெண்பாலார் குறைந்தே வருகின்றனர். ஒரு காலத்தில் இவர்கள் தம் பெண் குழந்தைகளைக் குழந்தைப் பருவத்திலேயே கொன்று வந்ததன் பயனே இன்று இக் குறைவுக்குக் காரணமாக இருக்கலாம். இக்குறைவை நிறைவு படுத்தவே போலும் இவர்களிடையே பல கணவ மணம் இருந்து வருகிறது. ஒருவன் ஒரு பெண்ணை மணக்கும் முதற் பொழுது மட்டுமே அதைக் கொண்டாடுகிறான். அப்படி மணந்த பிறகு மணந்தவனின் உடன்பிறந்தார்க்கு இப்பெண்ணினிடம் உரிமை உண்டாகிவிடுகிறது. சில நேரங்களில் மாற்றார் கூட விலைகொடுத்து உரிமை கொள்ளலாம். ஒரு பெண், பருவம் வந்த பிறகு இக்கூட்டத்தாரில் கட்டான உடலுடையவன் ஒருவன் இப்பெண் திருமணத்துக்கு உரிய தகுதி பெற்றிருக்கிறாளா என்று அவளை அணுகித் தேர்வால் முடிவுக்கு வரும் வழக்கம் இருந்து வருகிறது. இத்தேர்வை நிகழ்த்தியவன் அவளை மணக்காமலும் விடலாம். கூடி வாழும் இயல்பு இவர்களிடையே ஆண் பெண் உறவுகளில் கூட இருப்பதைக் காணலாம். இப்பழங்குடிகள் இப்பொழுது நீலகிரியில் மானிடவியலின் எடுத்துக்காட்டாக உள்ளனர் என்றே சொல்லலாம்.

## 2. இருளர்

நீலகிரியில் ஏறத்தாழ 2000 இருளர்கள் இருக்கின்றனர். (1941-ஆம் ஆண்டு மக்கள் எண்ணிக்கைப்படி, 1418 ஆண்களும் 398 பெண்களும் ஆக மொத்தம் 1816). கேரளத்தில் 2500

இருளர்கள் உள்ளனர் என்றும் இவ்வறிக்கைப்படி தெரிகிறது. இருளர்கள் கோயமுத்தூர் மாவட்டத்திலும் காணப்படுகின்றனர். கோய (*Koya*) என்ற இருளரால் இவ்வூர் கோயன்மூதூர் (*Koyan Mudur*) என வழங்கியது பின்னர் கோயமுத்தூர் ஆயிற்று என்பாரும் உளர். செஞ்சுக்களின் உறவாகக் கருதப்படும் ஏனாதி என்ற தெலுங்கத்துப் பழங்குடிக்கு நேரானவர்கள் என்று இவ் விருளர்கள் கருதப்படுகின்றனர். வடவார்க்காடு, தென்னார்க்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களில் இவர்கள் வில்லியர் என்று அழைக்கப்படுகின்றனர். கோபிசெட்டிப்பாளையத்துள் கல்லாம் பல்லா என்னும் இடத்தில் ஒரு சிவாலயத்துக்குப் பூசாரியாக ஓர் இருளர் இருப்பதிலிருந்து, இருளர் ஒரு காலத்தில் முக்கியமான ஒரு கூட்டத்தினராக இருந்திருக்கலாம் என்று நினைக்க இடம் உண்டு. இவர்களுக்குத் தம் ஊர்களுக்கு அருகேயே சில துண்டு நிலங்கள் இருக்கின்றன. இவற்றில் இவர்கள் கூல வகைகளைப் (*Cereals*) பயிரிடுகின்றனர். பெரும் நிலப் பகுதிகளிலிருந்து (*estates*) பெறும் ஊதியமே இவர்களுக்கு முக்கிய வரவு. இவர்களுள் சிலர் திறமை வாய்ந்த இடையர் களாக உள்ளனர். இவர்களைப் போலவே இவர்களுடைய பெண்பாலரும் நன்கு உழைப்பவர்கள். இவர்கள் மாட் டிறைச்சியைத் தின்பதில்லை. இவர்களில் ஆண் பெண் உறவுக்கு ஒரு கட்டுப்பாடு இல்லை. ஒரு பெண்ணின் இசைவு எப்படியோ அப்படியே இவ்வுறவும் உண்டாகிறது. இவர்கள் மூங்கில் விற்றும் பிழைக்கின்றனர்; கூடை முடைதல், பாய் பின்னுதல் முதலியவற்றைச் செய்தலும் உண்டு. ராகி, சாமை, பருத்தியே இவர்கள் பயிரிடுபவை. நல்ல புல் நிலம் பெற்றவரானாலும் இவர்கள் காக்கப்பட்ட காட்டு (*Reserved forests*) நிலப்பகுதியில் இருப்பதால் ஆடுமாடுகள் வைத்திருக்க முடியவில்லை. இவர்க ளுடைய நிலங்களின் நாசத்துக்கு யானைகளே காரணம் என்ன லாம். சோம்பலாலும், மலேரியாவாலும், உணவுக் குறைவாலும் இவர்கள் அவதிப்படுகின்றனர்.

## 3. குரும்பர்

இப்பழங்குடியைப் பற்றித் தெரிந்துகொள்ளும்பொழுது இவர்களின் மூன்று பெயர்களை முதலில் தெரிந்துகொள்ள

வேண்டும். அவை குருமன், குரும்பன், குருபன் என்பனவாம். பெரும்பாலும் கருநாடகப் பீடபூமியிலும், சிறிது தமிழ், தெலுங்கு மாவட்டங்களிலும் காணப்படும் ஆட்டிடையர்களே குருபர்கள். இவர்கள் கன்னடம் பேசுகின்றனர். இவர்கள் ஊரு குருபர் (*Village Kurubar*), காடு குருபர் (*Forest Kurubar*) என இருவகைப்படுவர். காடு குருபர், பெத்தா குருபர் (*Betta or Hill Kurubar*), ஜேனு அல்லது ஜேன் அல்லது தேன் குருபர் என இருவகைப்படுவர். பெத்தா குருபர் ஆனெ (*elephant*), பேவினு (*niontree*), கொள்ளி (*fire-brand*) என மூன்றுகப் பிரிகின்றனர். இவர்களுள் தேன் குருபர்கள் கருமை நிறத்தவர்; தாழ்ந்தவரும் கூட. இவர்கள் தேன் சேகரிக்கின்றனர். தேன் குருபர்களுக்கும் பெத்தா குருபர்களுக்கும் வைனுடு, நீலகிரி, அடுத்துள்ள மைசூர் குன்றுகள் இவையே இருப்பிடம் என்னலாம். பெத்தா குருபரை விட ஜேன் குருபர் கருமை நிறத்தவர்; கன்னடமும் தெலுங்கும் கலந்த ஏதோ ஒருவகைத் தமிழ் பேசுகின்றனர்; சிறு குடிசைகளில் வாழும் காட்டுவாசிகள். மணமாகாப் பெண்களுக்கும் ஆண்களுக்கும் தனிச் சாவடிகள் உள்ளன. இவர்களுடைய தலைவருக்கு முதலி என்பது பெயர். இவர்கள் மஸ்தி (*Masti*) யைத் தொழுகின்றனர். நீலகிரியில் குரும்பர்களுடைய குடிசைத் தொகுதிக்கு மொட்டம் (*Mottam*) என்பது பெயர்; சுரைக்குடுக்கைகளை (*gourds*) நீர் வைத்துக்கொள்ளவும், முட்டை வடிவமான கூடைகளைக் கூலங்கள் வைத்துக்கொள்ளவும் பயன்படுத்துகின்றனர், இவர்களுள் ஆண்கள் பம்பளி அல்லது முரட்டுத் துணியும், பெண்கள் முரட்டுத்துணிப் புடைவையும் அணிகின்றனர். ஜேன் குரும்பர்கள் தலையை மொட்டையடித்துக்கொண்டு, பின்னே குடுமி வைத்துக் கொள்கின்றனர். பெத்தா குரும்பர் கடும் உழைப்பாளிகள்; மர வேலையில் கைதேர்ந்தவர். இவர்கள் மொட்டையடித்துக் கொள்வதில்லை. ஆனால் தலைமயிரை உச்சியில் முடிகின்றனர். இவர்களுள் பெண்பாலர் கூர்கர்கள் முறையில் புடைவை அணிகின்றனர்; கன்னடமும் கொச்சைத் தமிழும் (*low Tamil*) சேர்த்துப் பேசுகின்றனர்; இறைச்சி தின்பர்; சாராயம் குடிப்பர்; தோலைத் தொடாதவர்; தோலால் செய்யப்பட்ட செருப்புக்கள் அணிய மறுக்கின்றனர்; உயர்ந்த சாதியினரிடமிருந்தே உணவு கொள்வர். இறந்த குழந்தைகளைப் புதைப்பதும், பெரியவர்களை

எரிப்பதும் இவர்கள் வழக்கம். பெத்தா, ஜேன் குரும்பர்கள் கலப்பதில்லை. பெண், பருவம் அடைவதற்குமுன், அவளுக்கு உரியவனாக நியமிக்கப்படும் மருமகன் தன் மாமனார் மாமியார்க்கு அவர்கள் வீட்டில் இருந்து பணி செய்வான். பெண், பருவம் அடைந்ததும் அவளுடன் வெளியேறிவிடுவான். திருமணச் சடங்கு ஒன்றும் இவர்களில் இல்லை. இவர்கள் சிவனை வழிபடுகின்றனர். குருபல்லராயா (*Kuruballaraya*) என்னும் தேவதையை வணங்குகின்றனர். இதற்கு 'ஆடுகளுக்கு அதிபதி' என்று பொருள் உரைக்கின்றனர்.

## 4. காடர்

ஆனைமலையில் உள்ள காடர்கள் குறுகிஅகன்ற மூக்கும், மிகத் தொல்கால உடற்கூறு (*priomitive features*) களும் அமையப் பெற்றவராகக் காணப்படுகின்றனர். இவர்கள் வேட்டையாடியும், காட்டில் கிடைக்கும் பொருள்களைச் சேகரித்தும் வாழ்க்கை நடத்துகின்றனர்; மரம் ஏறுவதில் கைதேர்ந்தவர்கள். சோற்று வேர் (*succulent root*), மூங்கில் விதை, ஆடு, மலைப் பாம்பு, முள்ளம் பன்றி, குரங்கு, மான் இவற்றை உண்கின்றனர்; அரிசியைச் சிறப்புணவாகச் (*luxury food*) சிற்சில சமயங்களில் உண்கின்றனர். பெண்கள் புகையிலை போட்டுக் கொள்வதும், ஆண்கள் சுருட்டுப் பிடிப்பதும் உண்டு. கஞ்சா என்னும் மயக்கப் பொருளை இவர்கள் நிரம்ப உண்கின்றனர்; ஒரு காலத்தில் குடிக்காதவர்களாக இருந்தனர் என்றாலும் இப்பொழுது கள், சாராயம் குடிக்கக் கற்றுக்கொண்டுள்ளனர்.

பருவம் வந்த பிறகே இருவருடையமன ஒப்பின்படி இவர்களிடையே திருமணம் நிகழ்கிறது. பெண் விலை இவர்களில் காணப்படவில்லை. ஆனால் இரு வீட்டினரும் பரிசுப் பரிமாற்றம் செய்துகொள்வது உண்டு. மணப்பெண்ணின் கழுத்தில் தாலி ஒன்று மாப்பிள்ளையின் அன்னையால் கட்டப்படுகிறது. பெண்ணின் தந்தை பிள்ளையின் தலையில் பாகை சூடுவது வழக்கம். மணப்பெண் மாப்பிள்ளை இவர்களின் வலச் சிறுவிரல்களை ஒன்றுடன் ஒன்று இணைத்துப் பந்தலைச் சுற்றிவந்து, பின் ஓரிடத்தில் அமர்ந்து, வெற்றிலை மாற்றிக்கொள்வர். ஆண்களும்

பெண்களும் திருமண விழாவின்பொழுது ஒன்று கலந்து நடனமாடும் வழக்கம் இவர்களிடம் காணப்படவில்லை. மணப்பெண் மாப்பிள்ளையுடன் சென்று, அவன் வீட்டில், நண்பர் உறவினர் சூழ இரண்டு நாட்கள் விருந்து உண்பதே இவர்களுடைய திருமண நிகழ்ச்சியின் சிறப்பு என்னலாம். வேறு சடங்குகளொன்றும் இவர்களிடம் காணப்படவில்லை. திருமண விலக்கு இவர்களிடம் இல்லை என்றாலும், மனைவி தவருக நடப்பின் ஊர்க்குழுவால் (*Village assembly*) விசாரித்து முடிவு செய்யப்பட்டுத் தண்டிக்கப்படுகிருள். மனைவியின் ஒத்துப்போக முடியாத குணக்கேட்டினலோ, அல்லது பணிவின்மையாலோ, அல்லது கெட்ட நடத்தையாலோ மட்டுமே, அவள் விலக்கப்படுகிருள். குன்றுகளில் வாழும் இவர்கள்,விலக்கப்பட்டவர்களைக்கீழுள்ளசமநிலங்களுக்கு அனுப்பி விடுகின்றனர்; அங்குள்ள கீழ்ச் சாதிக்காரர்களை நாடிப் பிழைக்க வேண்டி ஏற்பட்டுவிடுகிறது. இவர்களிடையே பலதார மணம் வழக்கில் உள்ளது. பல மனைவியருள் ஒவ்வொரு மனைவியும் தனக்கென்று பொருள்களைத் தனியே வைத்துக்கொள்ளும் பழக்கம் உள்ளது. காடர்களுள் ஒருவன் எத்தனை மனைவிகளை வைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்துகிருனே, அத்தனை மதிப்பு அவனுக்கு உண்டு; மனைவியரின் எண்ணிக்கை மிகுந்தால் பணச் சிறப்பும் மிகுகிறது. பலதார மணம் உண்டே தவிர பல கணவ மணம் இவர்களில் இல்லை. விதவை மறுமணமும் இல்லை. ஆனல் விதவைகளை வைப்பாட்டிகளாக வைத்துக்கொள்கின்றனர்.

காடர் மகளிர் நல்ல குணமுள்ளவர்கள்; கற்பு கெட நடந்து கொள்ளாதவர்களும் கூட என்னலாம்; பொறுமை கெடாமல் நல்ல மனைவிக்கு உரிய நற்பண்புகளுடன் வாழக்கூடியவர். காடர் மகனெருவன் தன் ஊரைவிட்டு வெளிச் சென்று அங்கு ஒரு பெண்ணைத் தேர்ந்து வந்து, தன் பெற்ருேரின் அல்லது மூத்தோரின் இசைவு பெற்றுத் திருமணம் செய்து கொள்ளும் வழக்கமும் இவர்களில் இருக்கிறது. இந்தோனேசியச் செமாங்கு (*Semangs of Indonesia*) களைப் போல, இவர்களும் தாமே செய்த சீப்பை (*Comb*) மணப் பெண்ணுக்குப் பரிசாக அளிப்பது வழக்கம்.

கருப்பவதியாக இருக்கும் பொழுது காடர் மகள் முண்டு ஒன்றை மார்பகத்தை மறைக்கப் போட்டுக்கொள்கிருள். மருத்து

வச்சி இல்லாமலே பெண்ணின் தாயோ அல்லது வேறு எவ்ளோ உடன் இருந்து பிள்ளைப்பேறு பார்க்கப்படுகிறது. பிள்ளை பெறும் நாளிலிருந்து மூன்று மாதங்கள் தீட்டு என்று கொள்ளப்படுகிறது. பிறகு மூப்பன் (*headman*) தலைமையில் குழந்தைக்குக் காது குத்திப் பெயரும் வைக்கின்றனர். மூப்பன், மூப்பாட்டி என்று இவர்களில் ஆண் பெண்களின் தலைவன் தலைவிகளாக உள்ளவர்களே இவர்களுடைய முக்கிய நிகழ்ச்சிகளில் பங்கு கொள்கின்றனர். காடர்கள் குடும்பப் பற்றுடையவர்கள். திருமணமான பிறகும்கூட அவர்கள் மனைவியருடன் எல்லோரும் ஒன்ருகவோ அல்லது ஒரு குடிசையில் தனித்தனியே இருந்தோ வாழ்கின்றனர்.

இவர்கள் காளியைத் தொழுதாலும் ஐயப்பன், மல்வாழி என்னும் தெய்வங்களையும் வழிபடுகின்றனர். இவர்களில் இறந்தோர் வழிபாடும் உண்டு. இவர்கள் எவ்விதப் பாம்புக் கடிக்கும் மாற்றுத் தெரிந்தவர்களெனச் சொல்லிக்கொள்கின்றனர்; அச்சமற்று எதையும் துணிந்து செய்யக்கூடியவர்கள். இவர்களை நாடோடிகள் என்றே சொல்லலாம்.

***மலாசர்***

மலையர் அல்லது மலைஅரசர் என்று சொல்லப்படும் மலாசர் என்னும் பழங்குடி மக்கள், மக்கள் தாயத்தைப் பின்பற்றும் ஒரு பிரிவினர். (1941–ஆம் ஆண்டு மக்கள் எண்ணிக்கைப்படி கோயமுத்தூர் மாவட்டத்தில் 8441ம், மலபார் மாவட்டத்தில் 2161 மாக இவர்கள் எண்ணிக்கை மொத்தம் 10,602.) இவர்களுடைய தலைவர்களுக்கு மூப்பர்கள் என்பது பெயர். இவர்களில் நாட்டு மலையர் (*Nattu Malayars*) என்றும், கொங்கு மலையர் (*KonguMalayars*) என்றும் இருவகை உண்டு.

இவர்கள் சமவெளி நிலங்களிலும், மலை அடிவாரச் சரிவுகளிலும் வாழ்கின்றனர். மலைவாசிகளுக்குரிய உடற்கூறுகள் இவர்கள்பால் சரிவர அமையவில்லை. இவர்கள்தலைகளில் சுமைகள் தூக்கிக் கூலிகளாகப் பிழைக்கின்றனர். மலை மலாசர், மலைச் சரிவு மலாசர், வெளி நில மலாசர் என்று இவர்கள் வாழும் இடத்துக்குத் தகுந்தாற்போல இவர்கள் அழைக்கப்படுகின்றனர்.

இவர்கள் குடியேறியுள்ள இடத்துக்கு, அதாவது வட்டாரத்துக்குப் பாடி அல்லது பட்டி என்பதும், தெருக்களுக்குச்சாலைகள் என்பதும் பெயர். மரங்களின்மீதுகூட இவர்கள் குடிசைகளைக் கட்டிக்கொண்டு வாழ்கின்றனர். காட்டு விலங்குகளிடமிருந்து தப்ப வேண்டி இப்படிச் செய்கின்கின்றனர் என்னலாம். கோடரி, கம்பு, வில், அம்பு இவையே இவர்களிடம் எப்பொழுதும் இருந்துவரும் ஆயுதங்கள். மன்னுதி (*Mannadi*) என்று அழைக்கப்படும் நிலச் சொந்தக்காரர்கள் பல மலாசார்களை வேலையாட்களாக வைத்துக்கொள்கின்றனர். இவர்கள் நிலத்தைப் பண்படுத்தி, விளைநிலமாக்கிப் பயிர் செய்கின்றனர்.

இவர்கள் தம் பெண்களைப் பருவம் வருவதற்கு முன்னமேயே, அதாவது பத்து அல்லது பதினேராம் ஆண்டு நிரம்புவதற்கு முன்னமேயே மணம் செய்துவிடுகின்றனர். பெற்றோரே பிள்ளையை (மணமகனை)த் தேர்ந்தெடுக்கின்றனர். மணமகனின் தாய் மணமகளின் கழுத்தில் மஞ்சள் கயிறு ஒன்றைக் கட்டுகிறுள். இது திருமண நிச்சயத்துக்குரிய ஒரு வழக்கு. பிறகு பிள்ளை வீட்டார் பெண் வீட்டுக்குக் கூறைப் புடைவையுடன் சென்று, சென்ற இடத்தில் நன்கு வரவேற்கப் பட்டுப் பின்னர் தம் வீட்டுக்குப் பெண்ணை அழைத்துவந்து, பிள்ளை வீட்டில் திருமணம் செய்கின்றனர். திருமண விழா வரவேற்புக்குப் பிறகு, பெண் வீட்டார் பெண்ணைப் புக்ககத்தில் விட்டுச் செல்கின்றனர். பெண் தவறுக நடந்துகொண்டால், ஊரார் கூடி ஒரு முடிவுக்கு வந்து, அவளைச் சவுக்கால் அடித்துத் தன் பிறந்தகத்துக்கு அனுப்பி விடுகின்றனர். இவள் இன்னெருவனை மணக்கலாம். விதவைத் திருமணமும் இவர்களுக்கு உடன்பாடே.

இவர்களில் பலதாரமணம் இருந்துவருகிறது என்றுலும், பல கணவர் மணம் காணவில்லை. தனிக் குடிசையில் பிள்ளைப் பேறு பார்க்கப்படுகிறது. பிள்ளைபெற்ற நாளிலிருந்து 15 நாட்கள் இவர்களுக்குத் தீட்டு நாட்கள். இவர்களிடை முன்னேர் வழிபாடும் காணப்படுகிறது; வீரபத்திரன், பத்திரகாளி போன்ற தெய்வங்களையும் தொழுகின்றனர். கார்த்திகை முதலாம் நாளிலிருந்து, மார்கழி 15–ஆம் நாள் வரை 45 நாட்கள், அதாவது ஒரு மண்

டலம் இவர்கள் இறை வழிபாடு நிகழ்த்துகின்றனர். ஆடு, கோழி களும் வெட்டப்படுகின்றன; புலி, யானைகளை விரட்ட மல்லன் என்ற தெய்வத்தை வழிபடுகின்றனர். பொங்கல் விழா, விஷ்ணு பண்டிகை, ஓணம் ஆகிய இந்நாட்கள் இவர்களுக்குச் சிறப்பு வாய்ந்த நன்னாட்கள்.

நாட்டு மலையர்கள் சிவ—பார்வதி வழி வந்தவர்களெனச் சொல்லிக் கொள்கின்றனர். மலையர்கள் தாங்கள் ஒரு காலத்தில் நாயர்களாக இருந்தவர்கள் என்றும், இவர்களுடைய மகளிர் வெளி நிலங்களில் இருந்த கீழ்ச்சாதிக்காரர்களுடன் உறவு கொண்டதன் பயனாக, இன்று இந்நிலையை எய்தியுள்ளனர் என்றும் சொல்லிக்கொள்கின்றனர். கொங்கு மலையர்கள் கொங்கு மண்டலத்திலிருந்து வந்தவர்களெனச் சொல்லிக் கொள் கின்றனர்.

நாட்டு மலாசர்கள் கருமை நிறத்தவர்களாகவும், குட்டை உருவத்தவர்களாகவும் உள்ளனர்; நல்ல உடற்கட்டும் உடல் நிலையும் உள்ளவர்கள்; பணிவுடனும், நம்பிக்கையுடனும் வேலை செய்பவர்கள். இவர்களுடைய பெண்பாலர் பார்வைக்கு அழ குடையவர்கள். கொங்கு மலாசர்கள் காடர்களைவிட உயரமான தோற்றம் உடையவர்கள்; கருமை நிறத்தவர்கள்; தட்டை மூக்கும் தடித்த உதடும் உடையவர்கள்; கச்சம் வைத்து வேட்டி கட்டுகின்றனர்; மேலாடைக்குக் கம்பளியைப் பயன்படுத்து கிறார்கள். இவர்களுடைய பெண்பாலர் கருமையாகவும் ஒல்லி யாகவும் காணப்படுகின்றனர். பார்வைக்கு ஏழ்மையும் அச்ச மும் களிப்பின்மையும் கூடிய தோற்றமுடையவர்கள்.

இவர்கள் பிறர் பொருளைத் திருடினாலும், இவர்களுக்குள் ஒருவர் பொருளை இன்னொருவர் வெளவுதல் இல்லை. மாட்டுச் சாணத்தைக்கூட ஒருவர் பார்த்து ஒதுக்கி வைத்தபின் இன் னொருவர் எடுப்பதில்லை என்று கூறப்படுகிறது. தனக்கு என்ன ஊறு நேரிடுமோ என்ற அச்சத்தால் ஒரு மலாசன் இன்னொரு மலாசனைத் தாக்குவது கிடையாது. இவர்கள் முயல், மான் பிடிப் பதில் வல்லவர்கள்; சாமை, தினை, கம்பு இவற்றைக் கொண்டு

கூழ் காய்ச்சிக் குடிக்கின்றனர். பசு, நாய், யானை, புலி இறைச்சியை இவர்கள் தின்பதில்லை.

### புலையர்

இவர்கள் கடும்பார்வையும் நீண்ட மயிரும் உடையவர்கள். 5 அடி 10 அங்குலம் உள்ள ஒரு புலையனின் தலை மயிர் தரையில் புரண்டதாகச் சொல்லப்படுகிறது. இவர்கள் அழுக்கான கந்தைகளை உடுத்து வாழ்கின்றனர். இவர்கள் தம் குடிசைகளுக்கு முன் பாகத்தில் பந்தல் போட்டுக்கொள்வது வழக்கம். இதைத்தான் தின்னவேண்டும் என்ற கட்டுப்பாடு இவர்களிடம் இல்லை. எந்த விலங்கையும் தின்பர்; எலிகளைப் பெரிதும் விரும்பித் தின்கின்றனர்; அடிமைகளாக வாழ்கின்ற பண்புள்ளவர்கள்; இவர்களுடைய பொருளாதார நிலை மிகத் தாழ்ந்தது என்றே சொல்ல வேண்டும். பெரும்பாலும் இவர்கள் அடிவாரங்களிலிருந்து மலைகளின்மேல் சுமைகொண்டு செல்லவே பயன்படுகின்றனர். முதுவர், காடர், மலாசர், புலையர் என்ற இந்நான்கு வகைப் பழங்குடிகளும் ஆனைமலையில் காணப்படுகின்றனர். ஏறத்தாழ இந்நான்கு வகையினரும் சேர 2000 குடும்பங்களாகக் கணக்கிட்டிருக்கின்றனர்.

### முதுவர்

முதுவர் தமிழ் நாட்டில் கோயமுத்தூரிலும், மதுரையிலும், கேரளாவில் திருவாங்கூரிலும் மலைவாசிகளாக இருந்துவரும் ஒரு பழங்குடியினர்; கொச்சைத் தமிழுடன் மலையாளம் சிறிது கலந்து பேசுகின்றனர். கஞ்சன், கார்மேகம் என்பன இவர்களுடைய ஆடவர்களுக்கும், கருப்பாயி, கூப்பி என்பன பெண்களுக்கும் சில சிறப்புப் பெயர்களாக வழங்கி வருகின்றன. ஆனால் இந்துக்களின் பெயர்களையே இவர்கள் பெரிதும் வைத்துக் கொள்கின்றனர். இவர்கள் தம் குழந்தைகளை முதுகின்மேல் சுமந்து கொண்டு பெரும் மலைத் தொடருக்குச் (*High range*) சென்றதால், இவர்களுக்கு முதுகர் என்னும் பெயர் வழங்கலாயிற்று என்று கருதப்படுகிறது. மலைப் பழங்குடிகளுள் இவர்கள் உயர்ந்த இடம் பெறுகின்றனர். போதிநாயக்கனூரைத் தெலுங்க நாயக்கர்கள் 14-ஆம் நூற்றுண்டில் பிடித்தபொழுது,

பாண்டியர்கள் தெற்கு நோக்கிச் செல்ல, அவர்களுடன் திருவாங்கூர் மலைகளுக்கு இப்பழங்குடிகள் சென்றதாகவும் கருதப்படுகிறது.

இவர்கள் இருவேறு முகத் தோற்றமும், மொழியும், பழக்க வழக்கங்களும் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். ஏல மலை, கண்ணன்தேவன் மலை, ஆனை மலை இங்கெல்லாம் இவர்கள் வசிக்கின்றனர். வேறு சாதியினரை இவர்கள் சேர்த்துக் கொள்வதில்லை. வேளாளர்களை மட்டும் கொஞ்ச காலமாகத் தங்களுடன் சேர்த்துக் கொள்கின்றனராம். ஊரார் கூடிய பஞ்சாயத்தின் படியே இவர்கள் சச்சரவுகளையோ, பொது நிகழ்ச்சிகளையோ முடிவு செய்கின்றனர். நல்ல நாள், நன்னிமித்தம் (*Omens*) முதலியவற்றில் இவர்களுக்கு நம்பிக்கை உண்டு. பையன்கள் பருவம் அடைவதை இவர்கள் கொண்டாடுகிறார்கள். பெண்கள் பருவம் வந்தபொழுது வீட்டுவிலக்கம் என்று ஒதுங்கிய குடிசையில் இருத்தப்படுகிறார்கள். மலடிகளாக உள்ள ஆண் பெண்ணுக்கு முறையே கருங்குரங்கின் மாமிசமும் மூலிகைகளும், கூட்டு (மசாலா) வகைகளும் தரப்படுகின்றன.

ஒருவன் ஒருத்தியை மணக்க விரும்பினால், அவர்களிருவரும் ஒரு குகையில் தனியே சில நாட்கள் வாழ வேண்டுமாம். பிறகே திருமணம் நிகழ்கிறது. விதவைத் திருமணம் அனுமதிக்கப்பட்டாலும், இறந்த கணவனுடைய உடன் பிறந்தவர்கள் அவளை மணக்கக்கூடாது. இறந்தவனின் மாமியின் மகனே அவளை மணக்க வேண்டும். திருமண விலக்கு இருவரும் சேர்ந்து வாழ முடியாத நிலையிலோ, அல்லது ஒருவர் கற்புக்கெட நடந்து கொண்டாலோ நாடப்படுகிறது. இவர்களிடையே பலகணவ மணம் (*polyandry*) சமவெளிகளில் வாழும் சிலரிடை மட்டுமே இருந்து வருகிறது. ஏழுமலை வாசிகள் பலகணவ மணம், பலதார மணம் இரண்டையுமே வெறுக்கின்றனர்.

இவர்கள் மீனாட்சி, சொக்கர், பழநியாண்டவர், சூரியன்முதலிய தெய்வங்களை வணங்குகின்றனர். தைப் பொங்கல் இவர்களுக்கு மிகச் சிறந்த நாள். இவர்கள் பிணங்களைப் புதைக்கின்றனர். நாய், ஓநாய், பாம்பு, மாடு இவற்றை இவர்கள் தின்பதில்லை. திப்பிலிக்கல் (*Tippilikal*) என்னும் காட்டுப்பனை (*wildpalm*)

யிலிருந்து எடுத்த சாற்றினை இவர்கள் சிறந்த பானமாக அருந்து கின்றனர்.

**மன்னர்**

இவர்கள் மயிரற்றுக் குட்டையாகவும், நல்ல உடற்கட்டு உடையவர்களாகவும் பெரியாற்று வட்டாரத்தில் வசிப்பவர்கள். திருவாங்கூர் மலைவாசிகள் என்றே இவர்களைச் சொல்லலாம்; மதுரையை ஆண்ட அரசர்களின் காப்பில் இருந்தவர்கள். இவர்கள் தமிழ் பேசுகின்றனர்; மறவர்களைப் போல ஆடை அணிகின்றனர். இருபாலரும் தம் குடித்தலைவனின் (*Headman of the tribe*) உத்தரவுபெற்றுதான் திருமணம் செய்துகொள்ள வேண்டுமாம். விதவைத் திருமணம் இவர்களிடையே இருந்து வருகிறது. இவர்கள் மருமக்கள் தாயத்தைப் பின்பற்றுபவர்கள். மருத்துவத்திலும் தம் குடிசை அமைப்பிலும் இவர்கள் மற்ற மலைப் பழங்குடிகளைவிடச் சற்று முன்னேறியவர்கள் என்றே சொல்லலாம். பெரியாற்றுச் சபரிமலையில் உள்ள சஸ்தா என்னும் ஐயப்பன் கடவுளை இவர்கள் வணங்குகின்றனர். இவர்கள் குரங்குகளைத் தின்கின்றனர் ; குடிப்பழக்கம் உடையவர்கள்.

**எரவாளர்**

காட்டுப் பழங்குடி மக்களாகிய இவர்கள் மிகக் குறைந்த எண்ணிக்கையுடையவர்கள்; தமிழ்நாட்டில் கோயமுத்தூர் மாவட்டத்திலும், கேரளாவிலும் வாழ்கின்றனர். இவர்கள் வில்லு வேடர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர்; சிலர் மலையாள மும், பலர் தமிழும் பேசுகின்றனர். மூக்கன் என்றும், பாட்டன் என்றும் இவர்கள் தம் பெரியவர்களை அழைக்கின்றனர். இவர் களுடைய வாழிடங்களாகிய பட்டிகள், காடுகளில் காணப்படு கின்றன. குடியானவர்களுடன் சேர்ந்து உழைக்கின்றவர்களே தவிர, இவர்களாகவே நிலத்தை உழுது பண்படுத்திப் பயிரிடு பவர்கள் அல்லர் ; நல்ல உடற்கட்டு உடையவர்கள்; ஒரு வேலையை மேற்கொண்டால் அதை நம்பிக்கை கெடாமல் செய்து முடிப்பவர்கள் என்றே சொல்லலாம்.

## மலையாளிகள்

இவர்கள் சேலம், வடவார்க்காடு, தென்னார்க்காடு, திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் உள்ள மலைத் தொடர்களில் உழுதுண்டு வாழ்கின்ற ஒரு மலைப்பழங்குடியினர். பெரிய மலையாளிகள், கொல்லி மலையாளிகள், பச்சைமலையாளிகள் என்று இவர்களில் மூன்று பிரிவினரைக் காணலாம். இம்மூவரும் உள்ள ஒவ்வொரு இடத்துக்கும் ஊர் என்பது பெயர். வெளிநில அமைவுக்குக் (*Plains settlement*) 'கொம்மை' என்னும் பெயர் வழங்குகிறது. பல ஊர்கள் சேர்ந்ததே ஒரு நாடு எனப்படுகிறது. காஞ்சீபுரத்தில் இருந்தவர்களென்றும், வேளாண்மை செய்து வேளாளர்களாக இருந்தவர்களென்றும், இவர்கள் தம்மைக் கூறிக் கொள்கின்றனர். காஞ்சிமண்டல வேளாளர் என்னும் பெயர் இவர்களுள் சிலருக்கு இருப்பது நோக்கற்பாலது. கொண்டர்கள் என இவர்களுக்கு ஒரு சாதிப் பெயர் நிலவுகிறது.

ஏறத்தாழ 60,000 மக்களைக் கொண்ட இப்பழங்குடியினர் சேலம் மாவட்டத்தில் வகுப்புகள் (*Vaguppus*) என்று புறமனப் பாகுபாட்டுக்கு உட்பட்டவர்களாக வாழ்கின்றனர். வடவார்க்காடு, தென்னார்க்காடு மாவட்டங்களில் இப்பாகுபாடு இல்லை. பச்சை மலையில் காணப்படும் புறமணப்பகுப்புக்களுக்குக் குலங்கள் (*Kulams*) என்பது பெயர். ஒவ்வொரு ஊருக்கும் ஊர்க் கொண்டன் அல்லது குட்டி மணியம் அல்லது மூப்பன் அல்லது ஊரான் என்று அழைக்கப்படும் ஓர் ஊர்த் தலைவன் உண்டு. இத்தலைமைப் பதவி வழிவழி வரும் ஒன்று. இவர்க்கு உதவி யாகக் கண்காணிகள் உண்டு. பத்துப் பதினைந்து ஊர்கள் சேர்ந்த ஒரு நாட்டுக்கு இப்படியே ஒரு தலைவன் உண்டு. இத்தலைவனுக்கு நாட்டான் என்றும், நாட்டுக் கௌண்டன் என்றும், சாதிக் கௌண்டன் என்றும், அல்லது பட்டக்காரன் என்றும் பெயர்கள் வழங்குகின்றன. இவர்க்கு உதவ மணியக் காரர்கள் உண்டு. பல நாடுகள் சேர்ந்த ஒரு தொகுதிக்குச் சில இடங்களில் பெரிய பட்டக்காரன் என்னும் தலைவனும், அத்தலைவ னுக்கு அமைச்சர்களும் உண்டு. இவர்கள் பேசும்மொழி தமிழ் மொழியே யெனினும், மாவட்டத்துக்கு மாவட்டம் வட்டார வழக்கு மாற்றம் நன்கு காணப்படுகிறது.

பிறப்பு, பூப்பு (*Puberty*), இறப்புக் காலங்களில் சில நாட்கள் தீட்டு நாட்களாகக் கொள்கின்றனர். மிருகபலி எல்லாக் காரியங்களின் முடிவிலும் இடம் பெறுகிறது. முன்னோர் வழிபாடும் அப்படியே; சிவன், விஷ்ணு, சுப்பிரமணியர், கணேசர் போன்ற தெய்வங்களை வணங்குகின்றனர். திருநீறு, நாமம் இரண்டையுமே இவர்கள் இட்டுக்கொள்கின்றனர். ஊர்த்தேவதைகளான கருப்பன், காளி, பிடாரி, மாரி இவற்றுக்கும் பூசை போடுகின்றனர். இவற்றுக்குப் பூசாரிகள் உண்டு. இப்பூசாரிகள் பிராமணர்கள் அல்லர். பொங்கல், தீபாவளி, ஆடிப் பதினெட்டு இவர்களுக்குப் பெரும் விழா நாட்களாகும், பொங்கலுக்குப் பிறகு 'எருது ஆட்டம்' (*Bull Baiting*) நடைபெறுகிறது.

திருமணத்தின் பொழுது பரியம் கொடுக்கும் பழக்கம் இவர்களிடையே உள்ளது. இதைப் பொருளாகவோ பண மாகவோ கொடுக்கின்றனர். மணமகள் வீட்டில் மணமகன் ஓராண்டுக் காலம் இருந்து பணி செய்வதும், சில இடங்களில் இவர்கள்பால் காணப்படுகிறது. திருமண நிச்சயத்தின் பொழுது பட்டக்காரன் எப்படியும் இருந்தே ஆகவேண்டும். மணமகனும் மணமகளும் இருவேறு ஊர்களைச் சேர்ந்தவர்களாக இருப்பின் இப்பட்டக்காரன் ஆணையிடத் திருமணம் நடைபெறும். கொல்லிமலை மலையாளிகளிடையே திருமணத்தில் மணமகன் மணமகளின் கழுத்தில் தாலியைப் பொருத்த, பட்டக்காரன் அதைக் கட்டுவான். மற்றவிடங்களில் மணமகன் தாலியைக் கட்டும் பழக்கம் இருக்கிறது. விதவைத் திருமணம் இவர் களிடையே உண்டு. ஆனால், இறந்த கணவனின் நெருங்கிய உறவினனை மணக்கக் கூடாது. இவர்களிடை மணவிலக்கும் உண்டு. பிற சாதிக்காரருடன் கள்ள உறவு கொண்டால், சாதியி லிருந்து விலக்கப்படுகிறார்கள். தம் சாதிக்குள்ளேயே இது நிகழ்ந்தால் கண்டனத் தொகை (*fine*) யுடன் வழக்கு நின்று விடுகிறது.

வேளாண்மை இவர்களுடைய முக்கியத் தொழில். காப்பித் தோட்டங்களிலும் சிலர் வேலை செய்கின்றனர். ஆண்களைப் போலவே பெண்களும் பயிர்த் தொழிலில் கைதேர்ந்தவர்கள்.

உழவுக் காடு, கொட்டுக் காடு என்று இவர்கள் விளை நிலத்தை வகைப்படுத்துகிறார்கள். வாழை, சாத்துக்குடி போன்ற பழ வகைகளையும் இவர்கள் பயிரிடுகின்றனர்; வெள்ளி அரைஞாணில் கோவணம் கட்டிக் கொள்கின்றனர். பெண்கள் இரவிக்கை அணிவதில்லை; மார்பகத்தை மறைக்க ஒரு துண்டைச் சுற்றிக் கொள்கின்றனர். தங்கம், வெள்ளி இன்னும் பல மட்ட உலோகங்களால் செய்யப்பட்ட அணிகலன்களை இருபாலரும் அணிகின்றனர். ஆண்கள்கூட மூக்குக் குத்தி, மூக்கில் வளையம் அணிகின்றனர். பச்சைமலையாளிகள் கொல்லி மலையாளி களைப் போலல்லாமல் பச்சை குத்திக் கொள்கின்றனர். பச்சை குதித்திக் கொண்டவர்களை இவர்கள் சேர்ப்பதுகூடக் கிடையாது. கேழ்வரகுக் கூழ், கறிகாய்வகைகள், பன்றி, கோழி, குரங்கு, பறவை ஆகியவைகளை உணவாகக் கொள்கின்றனர்.

## பாலியர்

இவர்கள் மிகவும் பிற்போக்கான ஒரு பழங்குடியினர்; பழநி, கோடைக்கானல், பெரியாறு மலைகளில் வாழ்ந்து வருகின்றனர்; 1921-ஆம் ஆண்டு மக்கள் எண்ணிக்கைப்படி 731 பாலியர்களே உள்ளனர் என்னலாம். கீழான தொழில்களாகிய பிச்சை எடுத்தலை அவர்கள் மேற்கொள்ளவில்லையாதலின், அவர்கள் கீழ்ச்சாதி யாக நடத்தப்படுவதில்லை. இவர்களும் தமிழ் பேசுகின்றவர் களே. வேட்டையாடியும், கிழங்கு வகைகளைத் தோண்டி விற்றும், தேன் முதலியவற்றைச் சேகரித்தும் பிழைக்கின்றனர். இவர்கள் எதையும் தமக்கென்று உடன் வைத்துக்கொள்வ தில்லை. நாய் ஒன்று தவிர, அரிவாள், பவுட்டம், கொம்பு என்று அவர்கள் சொல்லுகிற கடப்பாறை போன்ற கம்பு இவை தவிர அவர்களிடம் வேறு சொத்துக்கள் காணப்படவில்லை. இவர்கள் வெயில் காலங்களில் பாறைகளின் சந்து பொந்துகளில் வசிக் கின்றனர்; மழைக்காலங்களில் ஒருவித பந்தல் அமைத்து வாழ் கின்றனர்; மாயாண்டி, கருப்பச்சாமி போன்ற சிறு தெய் வங்களை வணங்குகின்றனர். இவர்களில் பலர் கிறித்துவர் களாக மாறிவிட்டனர். ஆனால் இப்படி மாறியவர்களைப் பாலியர் சேர்ப்பதில்லை. இவர்கள் இன்று மிகவும் துன்பநிலையில் இருந்து வருகின்ற ஒரு பழங்குடி மக்கள் என்றால் பொருந்தும்.

## செஞ்சுக்கள்

கர்நூல் மாவட்டத்தில் உள்ள நல்ல மலைகளே இவர்களின் முக்கிய உறைவிடம். 1941-ஆம் ஆண்டு மக்கள் எண்ணிக்கைப்படி இவர்களின் தொகை 9003. இவர்களில் 5878 பேர் கர்நூலிலும், 2104 பேர் குண்டூரிலும் உள்ளனர். கிருஷ்ணு, விசாகப்பட்டினம், கிழக்குக் கோதாவரி, மேற்குக் கோதாவரி, கர்நூல், நெல்லூர், பங்கனபள்ளி ஆகியவிடங்களில் மிகுந்த 1121 பேர்கள் சிதறிக் கிடக்கின்றனர். இவர்களுக்கு இப்பெயர் 'செஞ்சு' என்னும் சொல்லிலிருந்து வந்ததா, அல்லது 'சஞ்சு' என்னும் சொல்லிலிருந்து வந்ததா என்பது திட்டமாகத் தெரியவில்லை. இவர்கள் பேசுவது தெலுங்கு என்ருலும் இக்கொச்சைத் தெலுங்கு, குரல் அல்லது அழுத்த வேறுபாடு (*accent difference*) மொழியையே மாற்றிவிடுகிறது. இவர்கள் சில தெலுங்கு, கன்னடச் சொற்களையும் சேர்த்துப் பேசுகின்றனர். 1901-ஆம் ஆண்டு மக்கள் எண்ணிக்கைப்படி வடவார்க்காட்டிலும், மைசூரிலும் உள்ள இருளர்கள் தம்மைச் செஞ்சுக்கள் என்று சொல்லிக்கொண்டனர். 1891ல் இவர்கள் ஏனுதிகளின் ஒரு கீழ்ப் பகுப்பு என்று காணப்படுகின்றனர். செஞ்சுக்களும் ஏனுதிகளும் அவர்களுக்குள் திருமண உறவு கொள்வதாக அவர்களே சொல்லிக் கொள்கின்றனர்.

ஒரு கூடத்துக்கு (*gudem*) ஏறத்தாழ 20 அல்லது 30 வீடுகள் உண்டு. ஒவ்வொரு கூடத்துக்கும் ஒரு தலைவன் உண்டு. 10 அல்லது அதற்கு மேற்பட்ட கூடங்களுக்கு உரிய தலைவன் 'ரெட்டி' என்று அழைக்கப்படுகிருன். கர்ணமும் சில தலைவர்களும் இவனுக்கு உதவ, இவனுக்குக் கீழ் உள்ள கூடத் தலைவர்கள் கூடிய பஞ்சாயத்தின் முன்னிலையில் பல வகைத் தீர்ப்புகளையும் இவன் தருகிருன். செஞ்சுக்கள் சோம்பல் மிகுந்தவர்கள் என்னலாம். சிறிது காட்டுமிராண்டித்தனமும் இவர்களிடம் காணப்படுகிறது. வழிப்போக்கர்களை அடித்துக் கொள்ளையடிப்பதில் இவர்கள் கைதேர்ந்தவர்கள். இவர்கள் ஆஹோபிலத்தில் உள்ள ஸ்ரீ நரசிம்ம சுவாமியைத் தொழுகின்றனர்.

இவர்களில் மூவகைத் திருமணங்கள் காணப்படுகின்றன. முதல் வகை, பிள்ளை, தான் மணக்க விரும்பும் பெண்ணைத் தெரிந்தெடுத்தல். இதன்படி பெண்ணும் பிள்ளையும் தம் இசைவின் மேல் ஒருநாள் இரவு ஒரு காட்டில் இருவருமாக இருந்து மறு நாள் வீடு திரும்பித் தம் பெற்றோரால் பக்கத்து வீட்டார் அழைக்கப்பட்டு விருந்துடன் திருமணம் முடிகிறது. இரண்டாம் வகை, ஒரு சிறு வட்ட இடம் பசுஞ்சாணத்தால் மெழுகப்பட்டு, நடுவே ஒன்றிக் கட்டப்பட்ட வில்லும் அம்பும் வைக்கப்பட்டு, இவற்றைப் பிள்ளையையும் பெண்ணையும் தள்ளச் செய்து, அப்படி அவர்கள் செய்யும் பொழுது பெரியவர்கள் கொஞ்சம் அரிசியை அவர்கள் மேல்போடத் திருமணம் விருந்துடன் முடிகிறது. மூன்றும் வகை, பிராமணனை நல்ல நாள் கேட்டு, அந்நாளில் பெண்ணையும் பிள்ளையும் உயர்த்தப்பட்ட ஓரிடத்தில் அமர்த்திப் பெண் கழுத்தில் அப்பிராமணன் முன்னிலையில் தாலியைக் கட்டித் திருமணம் முடிகிறது. முதல் இரண்டு வகைத் திருமணங்களும் நண்பகல் 12 மணிக்குச் சரியாக நடை பெறும். அம்பு ஒன்றை வெளி நிலத்தில் நட்டு இவ்வம்பின் நிழல் வெளித் தோன்றாத நேரத்தை நண்பகல் என்று கொள்கின்றனர். விதவைத் திருமணமும், கணவனால் விடப்பட்டவளை மணப்பதும் இவர்களுக்கு உடன்பாடே. பலதார மணமும் இவர்களில் உண்டு.

இவர்கள் காட்டில் கிடைக்கும் சிறு பொருள்களைப் பணத்துக்கு விற்றோ, பண்டமாற்று செய்தோ பிழைக்கின்றனர். கொள்ளை யடிப்பதும் இவர்களுக்கு ஒரு தொழிலே எனின் மிகையாகாது. காக்கை, பல்லி, கரடி, மயில், கருங்குரங்கு இவற்றைத் தின்கின்றனர். இவர்களுள் ஆண்கள் வெறும் கோவணத்துடன் காணப்படுகின்றனர்; பெண்கள் புடைவை கட்டிக் கொள்கின்றனர். இவர்கள் எதையும் சற்றும் தயங்காமல், சிந்திக்காமல் செய்யக் கூடியவர்கள்; சிறிது பொருளுக்குக் காதம் நடக்கவும் செய்வர்; ஒரு மீன் பிடிக்க ஒரு குளத்தையே தூர்க்கவோ, நஞ்சு தோய்க்கவோ செய்வர்; பழங்களைப் பறிக்க மரங்களை வெட்டவே செய்வர். இப்படி இவர்கள் எதையும் பாழ் செய்துவிடாமல் இருக்கவே இவர்களுக்குக் காட்டில் சில சலுகைகள் கொடுக்கப் பட்டிருக்கின்றன.

போக்யா (*Bogya*) என்றதிலிருந்து வந்த போயா (*Boya*) என்னும் கூட்டத்தினரும் சில நேரங்களில் தம்மைச் செஞ்சுக்கள் என்று கூறிக்கொள்கின்றனர். விசயநகரப் பேரரசிலும், ஐதர் அலியின் ஆட்சிக் காலத்திலும் இவர்கள் போர்மறவர்களாக (*soldiers*) இருந்தனராம். இவர்கள் தம் பெண்களுள் சிலரை விபசாரத்துக்கு என்று விடுகிற வழக்கம் குறிக்கத்தக்கது. இவர்களுடைய பெண் மகளிர் எல்லாவித வேலைகளையும் செய்வர். இவர்களுள் பெத்த போயாக்கள் என்னும் ஒரு பிரிவு உண்டு. இவர்கள் போயாக்களிலும் உயர்ந்த தகுதி பெற்றவர்கள். பெத்த போயாக்களுள் சில ஜமீந்தார்களும் உண்டு. பெல்லாரி, கர்நூல், அனந்தபூர், கடப்பை மாவட்டங்களில் உள்ள மலைகளுக்கு மேற்கே இப்போயாக்கள் வாழ்கின்றனர்.

### லம்பாடிகள்

இவர்கள் சுகளிகள் (*Sugalis*) என்றும், பிரிஞ்ஜாரிகள் (*Brinjaris*) என்றும் கூட அழைக்கப்படுகின்றனர்; தெலுங்கு, கன்னட மாவட்டங்களில் வாழ்கின்றனர்; நல்ல உடற்கட்டும் வன்மையும் பெற்றவர்கள். தெலுங்கு, கன்னடத்தவர் உடுப்பதைப் போலவே இவர்களும் உடுக்கின்றனர். இவர்களின் மகளிர் அழகு செய்யப்பட்ட ஆடைகளை அணிகின்றனர். ஆடைகளை அழகுறச் செய்ய இப்பெண்கள் தம் சக்தி, நேரம் எல்லாவற்றையும் பெரிதும் செலவிடுகின்றனர் என்னலாம். இவர்கள் அணியும் வளைகள், காலணிகள் எல்லாம் இவர்களைப் பழங்குடியைச் சேர்ந்தவர்கள் என்பதை எளிதில் தெரிவிப்பதாக உள்ளன.

இப்பெண்களில் பெரும்பாலோர் கற்புத் தவருதவர்கள். விதவைத் திருமணம் இவர்களில் இல்லையென்ருலும், கணவனை இழந்தவள் வேருெருவனுடன் இருந்து வாழ முடியும். அப்படி வாழும்பொழுது பிறக்கும் குழந்தைகளை இவர்கள் ஏற்றுக் கொள்ளவே செய்கின்றனர்; தவருகப் பிறந்த குழந்தைகளென நினைப்பதில்லை. ஒரு விதவை இப்படி இன்னெருவனிடம் வாழ்வதற்கு முன், தனக்குப் பிள்ளைகள் இருப்பின், அப்பிள்ளைகளுக்கு எருமைகள் போன்ற சிலவற்றைக் கொடுத்துவிட்டுப் பின்னரே தன் வாழ்க்கையைத் தொடங்குகிருள். லம்பாடிப் பெண் நல்ல

உடற்கட்டுடையவள்; எப்பொழுதும் களிப்புடன் அச்சமின்றி காணப்படுகிருள். பாட்டு, நடனம் இவற்றிலும் இவள் நன்கு தேர்ச்சி பெற்றவளாகவே இருக்கிருள்.

லம்பாடிகள் கல்வி கற்கவும் பயிர்த்தொழில் செய்யவும் விரும்புகின்றனர். இவர்களை நாட்டுக்குப் பெரிதும் பயன்படக் கூடியவர்களாக ஆக்கலாம். இவர்களுடைய மொழிக்கு எழுத்துக்கள் இல்லையென்ருலும், தேவநாகரி எழுத்துக்களைப் பயன்படுத்தலாம். பழங்காலத்தில் உள்நாட்டிலிருந்து கூலங்களும், கரையோரங்களிலிருந்து உப்பும் எடுத்துச் செல்லும் தொழிலில் ஈடுபட்டிருந்தனர்.

## குறவர்

முருகன் என்னும் கடவுளின் தலைவியாகிய வள்ளி இக் கூட்டத்தைச் சேர்ந்தவளாகக் கதை உள்ளது. முருகனின் கோயிலைப் பழநிமலை போன்ற மலைகளில் காணலாம். தெலுங்கு நாட்டில் வைஷ்ணவமே சிறந்து விளங்குவதால் அங்குள்ள மலைத் தெய்வமாகிய நரசிம்மனையே கொரசா, எருகுளா என்போர் வணங்குகின்றனர் என்னலாம். கோர நாடு, கோர மண்டலம் இவற்றிலிருந்து இக்குறவர்கள் ஒரு காலத்தில் சிறப்புடன் வாழ்ந்திருக்கலாமென்று சொல்லலாம். இவர்கள் பல இடங்களையும் தெரிந்து, பல வகை மக்களுடன் வாணிகம் செய்திருந்ததால், இவர்களைத் திப்பு சுல்தான் உளவு அறியும் படையில் (*espionage corps*) வைத்திருந்தனன் என்று அறிகிறோம். இவர்கள் பேசுவது கொச்சைத் தமிழ்.

இவர்கள் கொள்ளையடிப்பதில் கைதேர்ந்தவர்கள் என்னலாம். இவர்கள் நல்ல உழைப்பாளிகளாகவும் திறமையுடையவர்களாகவும் இருந்தும்கூட, உழைப்பையும் திறமையையும் இப்படிப்பட்ட தகாத செயல்களில் செலுத்திவிட்டனர். இப்படியெல்லாம் ஈட்டிய பொருள்கள் இவர்களுக்குப் பயன்படுவதில்லை. காரணம், இவர்கள் மற்றவர்களின் கையாட்களாகவே இப்படியெல்லாம் நடந்துகொள்கின்றனர்.

### ஏனாதிகள்

எயினர் என்ற பெயர் ஏனாதியாகத் திரிந்தது என்னலாம். இருளன், வில்லியன், வேதன், மலயன் என்னும் பெயர்கள் இப் பழங்குடித் தமிழ் பேசும் மக்களுக்கு வழங்குகின்றன. நெல்லூர், சித்தூர், செங்கற்பட்டு மாவட்டங்களில் இவர்கள் வாழ்கின்றனர்; நல்ல உடற்கட்டு அமையப்பெருதவர்கள். தாடை எலும்பு தோன்றும், கூர்மையான மோவாய்க்கட்டையும், முகத்திலும் உடம்பிலும் இங்குமங்குமான சிறு மயிர்களும் இவர்களை மற்றப் பழங்குடிகளிலிருந்து நன்கு வேறுபடுத்திக்காட்டுகின்றன. காளத்தி, கார்வேத நகர், கம்பாக்கம் குன்றுகள் இங்கெல்லாம் அடவியேனாதி என்று அழைக்கப்படும் ஏனாதி அல்லது இருளரைக் காணலாம். மஞ்சியேனாதி என்னும் பிரிவினர் தம் காட்டுப் பழக்கங்களை விட்டு நல்லவர்களாகப் பல வீடுகளில் வேலை பார்ப்பவர்களாக இருக்கின்றனர். இவர்களைப் பிராமணர்களும், ரெட்டிகளும்கூடத் தம் வீடுகளில் வேலையாட்களாக வைத்துக்கொள்வதாகச் சொல்லப்படுகிறது. சல்ல ஏனாதி யென்னும் மற்றொரு பிரிவினர் தோட்டி வேலை செய்கின்றனர். ஏனாதிகள் செஞ்சு தேவதையை வணங்குகின்றனர். முன்னோர் வணக்கமும் இவர்களில் உண்டு; மாட்டிறைச்சியைத் தின்பதில்லை; எலிகளையும், மீன்களையும் தின்கின்றனர்.

இவர்களில் பெண்ணும் பிள்ளையும் ஒப்புக்கொண்டால் போதும். அன்று முதல் அவர்கள் கணவன் மனைவியாக வாழலாம். இதற்கென்று ஒரு நாளோ, விருந்தோ இவர்களில் இல்லை. கற்பில் இவர்கள் மிகத் தாழ்ந்தவர்களென்றே சொல்லலாம். ஒருவன் ஒரே நேரத்தில் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாம். ஆனால் ஒரு பெண் ஒரே நேரத்தில் ஒருவனை மட்டும்தான் கொள்ளவேண்டும். மணவிலக்கு இவர்களில் எளிதில் அடிக்கடி நிகழ்கிறது. ஒரு பெண் பருவம் வரின் அவளை ஒரு தனிக் குடிசையில் எட்டு நாட்கள் இறுத்திப் பின் ஒன்பதாம் நாள் குளிக்கவைத்துச் சேர்த்துக்கொள்கின்றனர். அவளுக்கென்று கட்டப்பட்ட அந்தக் குடிசையைக் கொளுத்தி விடுகின்றனர். பிள்ளை பெற்ற பொழுதும், பெற்ற தினத்தி

லிருந்து ஒன்பது நாட்கள் தீட்டு நாட்களாகும். பத்தாம் நாள் குளித்துவிட்டு அவள் மற்றவர்களுடன் கலந்துகொள்கிறாள்.

ஏனாதிகள் குறி சொல்வதில் தேர்ந்தவர்கள். மீன் பிடித்தல், நல்லபாம்பு பிடித்தல், நீர் மூழ்குதல் இவற்றில் இவர்கள் திறமை யுடையவர்கள் என்னலாம். அச்சமின்றிப் பெருமலை யுச்சிகளி லிருந்து தேன் கூடுகள் உள்ள இடங்கள் நோக்கி இறங்கு கின்றனர்.

இவர்கள் இறந்தவர்களைப் புதைக்கின்றனர்; சிலர் எறிக்க வும் செய்கின்றனர். சாவுச் சடங்குகளில் இந்துக்களைப் பின்பற்றி வருகின்றனர் என்னலாம். இவர்களில் சிலர் நெற்றி யில் நாமம் அணிகின்றனர்; இந்து தெய்வங்களையும் வணங்கு கின்றனர்.

1891ல் மக்கள் எண்ணிக்கைப்படி இவர்களின் தொகை 88,988. 1901ல் இவர்களைப் பழங்குடிகளாகக் கணக்கெடுக்க வில்லை. செங்கற்பட்டில் உள்ள வில்லியர் சங்கங்கள், இருளர், ஏனாதிகள், வேதாக்கார், வில்லியர் இவர்களிடையே நிலவும் ஒற்றுமையைக் காட்டுகின்றன. இவர்கள் தம் ஏழ்மை காரண மாகவே கொள்ளையடிப்பதும் திருடுவதும் போன்ற தீய செயல் களில் பிறர் கையாட்களாக மாறுகின்றனர். நெல்லூரிலும் குண்டூரிலும் இவர்கள் முழு இந்துக்களாகவே தம் பழங்குடி வாழ்க்கையிலிருந்து மாற்றமுற்றிருக்கின்றனர். இங்குள்ள மஞ்சி ஏனாதிகளும் பல வீடுகளில் வேலையாட்களாக, அவர்க ளுடைய சமூக நிலை மாறியே இருக்கின்றனர். சல்ல ஏனாதிகள் மட்டும் கீழ்ச்சாதிக்காரர்களை ஒத்து இருக்கின்றனர். இவர்கள் எதையும் தின்கின்றனர்; குப்பைவாரிகளாகவே உள்ளனர். காளத்தியில் ஏனாதி நெசவாளர்கள் நல்ல வருமானம் பெறுகின்றனர். இவர்களுக்குப் போதுமான வருமானம் கொடுக்கக்கூடிய வேலைகளாகச் சிலவற்றைக் கொடுத்துப் பின்னர் இவர்களுக்குக் கல்வியும் நன்கு புகட்டின் இவர்கள் விரைவில் மிகவும் முன்னேற்ற மடையக்கூடியவர்கள் என்றே சொல்லலாம்.

**கள்ளர்**

கள்ளர், மறவர், அகம்படியார் என்னும் முக்குலத்தார் என்று சொல்லப்படும் இம்முப்பிரிவினருள் கள்ளர், மறவர் என்னும் இரு பிரிவினரும் குற்றவாளிப் பழங்குடிச் சட்டத்தின் (*Criminal Tribes Act*) கீழ் வருகின்றவர்கள். இவர்களில் பெருநிலத்தவர்களும். அறிஞர்களும், முனிவர்களும் கூட இருக்கின்றனர். பாலைவாசிகள் கொள்ளையடிப்பதிலும் திருடுவதிலும் பேர்பெற்றவர்கள். கள்ளர்களுக்கென்று 256 தொடக்கப்பள்ளிகள் உள்ளனவென்று தெரிகிறது. இவர்கள் சைவர்களே என்றாலும், விஷ்ணுவைப் பல பெயர்களில் வணங்குகின்றனர். 'கள்ளர், மறவர், அகம்படியார் மெல்ல மெல்ல வேளாளர்,' என்னும் பழமொழி நோக்கற்பாலது.

**சோழகர்**

இவர்கள் பேசும் மொழி ஒருவகைப் பழம் கொச்சைக் கன்னடம்; மிகக் குறைந்த ஆடைகளை உடுக்கின்றனர். மலையுச்சிகளில் வசிக்கின்றனர். இவர்களுடைய குடிசைகள் வளைந்த மூங்கில்களின் முனைகள் ஒன்று சேர்க்கப்பட்டு வாழை இலைகளால் மூடப்பட்டு இருக்கின்றன. இவர்கள் சாலிகிரி (*Chalikiri*), தேனேரு (*Teneru*), பெலேரு (*Beleru*), சூர்யா (*Surya*), அலேரு என்று ஐவகையினராவர். இவர்களுக்கு எஜமானன் என்று ஒரு தலைவனும், அவனுக்கு உதவ ஒரு பட்டக்காரனும்உள்ளனர்; ராகியை உண்கின்றனர்; காட்டில் கிடைக்கும் பொருள்களைச் சேகரிக்கின்றனர். 1941–ஆம் ஆண்டு மக்கள் எண்ணிக்கைப்படி இவர்கள் தொகை 4302.

# 6. குடும்பம்

## (*Family*)

சிலரோ, பலரோ கூடி வாழ்வது குடும்பம். ஒரு சமூகத்தின் பண்பாட்டு வளர்ச்சி, ஒரு குடும்பத்தின் அமைப்பு, ஒரு கூட்டத்தின் நாகரிகம் எல்லாம் மாற்றத்துக்கு உரியனவே என்றாலும், அன்றும் இன்றும் எவ்வகைப் பண்பாடு, நாகரிகம், சமூக நிலையிலும் நாம் காண்பது இவ்வடிப்படைப் பொருள் ஒன்றே. அதாவது, காலத்துக்குக் காலம் குடும்பத் தொகுப்பு மாறிக்கொண்டே இருக்கிறது. சமூக வேறுபாடு எப்படியோ அப்படிக் குடும்ப அமைப்பும் உண்டாகிறது. தாய்வழித் தலைமைக் குடும்பம், தந்தைவழித் தலைமைக் குடும்பம், பல் கணவர் குடும்பம் (*polyandrous family*) பல்மனைவிக் குடும்பம் (*polygamous family*) ஆகியவையும், தன்னிச்சையாகவோ கட்டுப்பாட்டுக்கு அடங்கியோ செய்துகொள்ளும் ஒருதார மணம், மற்றும் தொகை மணம் (*group marriage*), அல்லது தேர்வு மணம் (*trial marriage*) போன்ற மண வகைகளிலிருந்து ஏற்படும் பலவிதக் குடும்பங்களும் நோக்கத் தகுவன.

ஒருவன் ஒருத்தியை மணக்கும்பொழுது, இருவருமாக இருந்துதான் தம் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள வேண்டி இருக்கிறது. தொல் சமூகத்தில்கூட (*primitive society*) இப்படித்தான் இருவர் கூடிய ஒரு வாழ்க்கை அமைப்பு ஏற்பட்டிருக்க வேண்டும். ஒருவனும் ஒருத்தியும் சேரும் வகை பலவாறு மாற்றம் உற, அவர்களால் ஏற்பட்ட குடும்பங்களும் பலவகை ஆயின என்னலாம். மார்க்சும், என்ஜல்சும் (*Marx and Engels*) குடும்பம் படிப்படி வளர்வதற்கு அடிப்படைக் காரணம் மனிதன்

சமூக—பொருளாதாரத் தொடர்புடையுவனுக இருப்பதே என்றும், ஒருதார மணம் என்பது இயற்கையில் தோன்றிய ஒரு குடும்ப அமைப்பு அன்று என்றும், ஒருவனுடைய தேவையை அடிப்படையாகக் கொண்டதே குடும்பம் என்றும் கூறினர். ஆனுல் வெஸ்டர்மார்க் (*Vestermarck*) என்பவர் சில விலங்குகள், பறவைகள்கூட இயற்கையிலே ஓர் ஆண் ஒரு பெண்ணுக வாழ்கின்றன என்றும், எவ்வகைச் சமூகத்திலும், அல்லது ஒரு சமூகத்தின் எந்தப் படியிலும், இப்படி ஓர் ஆண் ஒரு பெண்ணுக வாழ்வது இயற்கையே என்றும் கருதுகிருர். வேறு சிலர் ஒருவன் ஒருத்தியை மணப்பதும், பலரை மணப்பதும் இரண்டுமே சமூகத்தில் நாம் என்றும் காணக்கூடிய இயற்கை அமைப்பு என்றும் கருதுகின்றனர். பலர் பலவாருகக் கருதினுலும், குடும்பம் என்பதன் அடிப்படை சேர்ந்து வாழ்வது ஒன்றே யாதலின், இப்படிச் சேர்ந்து வாழவேண்டிய தேவை சமூகத்தில் எப்படியும் இருந்து வருவதால் அத்தேவைக்குத் தகுந்தாற்போல் அது அமைந்து விடுகிறது என்றே சொல்லலாம்.

பலர் ஒரு வீட்டில் இருந்து, அவர்கள் ஒருவருக்கொருவர் உறவால் பிணைந்து, அப்பிணைப்பின் பயனுக ஒருவருக்கொருவர் உதவியாக இருந்து வாழும் ஒரு கூட்டத்தைக் குடும்பம் என்னலாம். இன்னென்றும் கருதவேண்டிய ஒன்று. இப்படிப் பலர் கூடிவாழ்வதால் மாற்ருர் எவரும் எளிதில் இவர்களில் எந்த ஒருவரையும் தாக்க முடியாது. எனவே குடும்பம் என்பது பிறர் தாக்குதலைத் தடுக்கவும் பயன்படும் ஓர் அமைப்பாக உள்ளது என்றும் சொல்லலாம். பலர் கூடிவாழும் ஒரு குடும்பம் அப்பலர்க்கும் பல உரிமைகளை வழங்குகிறது. சிறப்பாக எந்த ஒரு பொருளும் பொதுவாக எவர்க்கும் பயன்படக் கூடியதாகவோ அல்லது தேவை எவர்க்கோ அவர்க்குப் பயன்படக் கூடியதாகவோ இருக்கிறது.

குடும்பம் என்பது கணவன் மனைவி குழந்தைகள் ஆகியோர் சேர்ந்த ஓர் அமைப்பாகப் பண்பாட்டு வளர்ச்சியின் எந்த நிலையிலும் காணப்படுகிறது. இப்படிப் பலர் சேர்ந்த ஒரு கூட்டமைப்பாகவும் காணப்படுகிறது. எப்படியும் திருமண நிகழ்ச்சிக்கும் குடும்பத்துக்கும் பெரும் தொடர்பு இருக்கிறது. ஒருவன்

ஒருத்தி என்று கணவன் மனைவியாகக் கருத முடியாத எந்த இருவராலும் ஒரு குடும்பம் ஆவதில்லை.

மனிதன் இரண்டு அடிப்படைத் தேவைகளுக்குக் கட்டுப் பட்டவன் என்னலாம். ஒன்று, அவன் உயிர்வாழ வேண்டிய தேவை; இன்னொன்று அவனுக்குப் பிறகு அவனைப் போன்ற இன்னொரு உயிர் இருந்து ஆகவேண்டிய தேவை. முன்னதை நிறைவுபடுத்த வயிற்றுப் பசியும், பின்னதை நிறைவுபடுத்த உடற்பசியும் (*sexual instinct*) மனிதனிடமிருந்து பிரிக்க முடியாத சிறப்பியல்புகளாக அமைந்திருக்கின்றன. இவற்றில் ஒன்றைத் தானே நிறைவுபடுத்திக்கொள்ள முடியும். ஆனால் இன்னொன்றை இன்னொரு ஆளைக் கொண்டே நிறைவுபடுத்திக் கொள்ள வேண்டி உள்ளது. அதாவது மனிதன் தன் உடற் பசிக்கு உணவாகப் பெண்ணை நாடுகிறான். அவள் இவனுக்கும், இவன் அவளுக்கும் தேவைப்படுவதால், உடன் இருந்து வாழ வேண்டிய தேவையும் ஏற்படுகிறது. இப்படி வாழ்வதன் விளைவதாக அவர்கள் பெறும் குழந்தைகளைக் காக்கவேண்டிய உணர்ச்சி அவர்களுக்கே உண்டாக, அதன் பயனாகப் பல உறவு களும் கட்டுப்பாடுகளும் உண்டாகின்றன. மணக்கும் நிகழ்ச்சி ஒன்றும், குழந்தைபெறும் நிகழ்ச்சி ஒன்றுமாக இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் கணவன் மனைவி என்ற உறவுடன் தாய்தந்தை என்ற உறவையும், அண்ணன், தங்கை, அக்காள், தம்பி என்ற உறவுகளையும் உண்டாக்குகின்றன. இவற்றுடன் பிறர் பெற்ற பிள்ளைகளை எடுத்து வளர்க்கும் பழக்கமும் இருப்பதால் குடும்பம் என்னும் சொல்லுக்கு உடலுறவைக்கொண்டேகூட பொருள் செல்லிவிட முடியாது. என்றாலும் அடிப்படையில் இவ்வுறவே குடும்பம் தோன்ற முதற்காரணமாய் உள்ளது என்னலாம்.

எனவே, குடும்பம் தோன்றிய விதத்தை நோக்கின், இது ஒரு செயலாற்றுத் தொகுதி (*functional unit*) என்பது நன்கு விளங்கும். உடலால் ஏற்பட்ட தேவைகளாலேயே (*biological needs*) இது வளருகிறது. கருப்பவதியாக உள்ள ஒரு பெண்ணோ அல்லது அவள் பெற்ற குழந்தையோ தனித்து வாழ முடியாது. இவர்களைக் காத்து வளர்க்க, இவர்களுடைய தேவைகளை நிறை வேற்ற இவர்களுக்கு மற்றவர்களுடைய உதவி எப்படியும்

தேவைப்படுகிறது. குறிப்பாகத் தகப்பனின் உதவி மிகவும் தேவை என்னலாம். அதுமட்டும் இன்றி, மனிதன் தன் பசியைப் போக்கப் பிறருடன் ஒன்றிச் செயலாற்ற (*co-act*) வேண்டியவனுகிருன். உணவு தேடும் முயற்சியில் பலருடன் இவனும் ஒருவனுக இருந்து செயலாற்றின், இவனுல் பலரும், பலரால் இவனும் பயன் எய்த முடியும். இவ்வாறே பல தேவைகளுக்கும் ஒன்றுகூடி செயலாற்றுவது இன்றியமையாத ஒன்றுக உள்ளது. எனவே, குடும்பம் என்பது முதலில் தன் தேவையையும், அடுத்தபடியாகப் பிறர் தேவையையும் நிறைவேற்றிவைக்கும் ஒரு பொருளாதாரத் தனித்தொகுதி (*economic unit*) ஆகிறது. எடுத்துக்காட்டாக, காடர் பழங்குடியைப் பார்ப்போம். இவர்கள் பலர் ஒன்று சேர்ந்து பழங்களையும் வேர்களையும் சேகரிக்கின்றனர். அப்படிச் சேகரித்த உணவுப் பெருள்கள் இவர்கள் அத்தனை பேருக்கும் உணவாகின்றன. தனி மனிதனின் தேவையும் நிறைவேறி, தனி மனிதனுல் பலருடைய தேவைகளும் நிறைவேறி, இப்பழங்குடியின் பொருளாதாரத்தைக் காக்கும் செயலாகவும் அமைந்துவிடுகிறது. குடும்பம் எப்படி ஒரு கூட்டத்தினரின் பொருளாதார நிலையைக் காக்கிறது என்பதற்கு இது ஒரு எளிய எடுத்துக்காட்டு. குடும்பம் சமூக அமைப்புக்கும் அடிப்படையாகவே அமைகிறது. ஒருவனுடைய காம இச்சையைத் தடங்கலின்றி முடித்து வைக்கும் ஒரு களமாகவும், அதன் விளைவாகத் தோன்றும் குழந்தைகளின்மூலம் தன் இனம் அழிந்துவிடாமல் நிலைக்கச் செய்யும் ஒரு ஏற்பாடாகவும் உள்ளது. இத்தனையும் இயற்கையாகவே ஏற்பட்டவை. எனவே குடும்பம் ஒரு செயற்கை அமைப்பு அன்று, இயற்கை அமைப்பே ஆகும்.

மனநிறைவுடன் ஒருவர் வாழ வாய்ப்பளிப்பது குடும்பம். ஒருவர் பிறரிடம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதையும், பிறர் இவரிடம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதையும், பிறரிடம் இவர் எவ்வெவற்றை எதிர்பார்க்கலாம் என்பதையும் தெரிவிக்கக்கூடியது குடும்பம். எனவே, குடும்பம் ஒருவர்க்கு ஒரு தகுதியைத் தருகிறது என்னலாம். ஒரு சமூகம் ஒருவர்க்கு ஒரு பண்பாட்டை ஊட்டவோ, ஒரு நடத்தையை வலியுறுத்தவோ, ஓர் ஒழுக்கத்தைக் கற்பிக்கவோ செய்யவில்லை என்றுலும்,

குடும்பம் இவற்றையெல்லாம் ஒருவர்க்குச் செய்துவிடுகிறது என்னலாம். எனவே, ஒரு சமூகத்தின் வரலாற்றை அல்லது அமைப்பை அச்சமூகத்தைச் சேர்ந்த ஒரு கும்பத்திலிருந்துகூடத் தெரிந்து கொள்ள முடிகிறது. ஒரே நேரத்தில் குடும்பம் ஒருவரை நன்னிலைக்குக் கொண்டுவிடச் செய்யவும், சமூகப் பண்பாட்டைத் தெரிவிக்க வல்லதாகவும் உள்ளது. ஒரு குழந்தை தன் முதல் பாடத்தைத் தன் குடும்பத்தில்தான் கற்கிறது. மொழி ஒன்றைமட்டும் அல்ல அது அதன்கண் கற்பது ; மொழியுடன் கலந்த பண்பாட்டையும் கற்கிறது. இந்தியப் பழங்குடிகளிடையே, நாகர்கள், ஓரோவோன்கள் (*Oroons*), முண்டர்கள், கோந்துகளில் பெரும்பாலோர் தவிர, குடும்பம் ஒன்றே மொழி, வழக்க ஒழுக்கம், பண்பாடு எல்லாவற்றையும் புகட்டுவதாக உள்ளது.

குடும்பம் உலகில் எச்சமூகத்திலும் காணப்படும் ஒரு நிலை பெற்ற வாழ்க்கைமுறை என்று கண்டோம் அல்லவா ? அதை ஒரு தொகுதி என்றும் அல்லது சிலர் கூடிய ஒரு கூட்டமைப்பு (*association*) என்றும் சொல்லலாம். இப்படிக் கொண்டால், அதன் புறத்தோற்றத்தையும் (*form*), உட்பொருளையும் (*Content*) நன்கு பார்க்கலாம். இப்படிப் பார்ப்பதால் ஒரு குடும்பம் எப்படி, எவ்வெவ்வகையில் இடத்துக்கு இடம், காலத்துக்குக்காலம், சமூகத்துக்குச் சமூகம் மாற்றம் உறுகிறது என்பதைச் செவ்வனே அறியலாம். குடும்பம் கருப்பவதிக்கும், குழந்தைக்கும் காப்பு அளிக்கிறது என்றும் கண்டோமல்லவா ? அப்படியிருந்தும்கூட, பிள்ளையைச் சுமந்து நிற்கும் தாயும், பிறந்த குழந்தையும் மட்டும் ஒரு குடும்பம் ஆகிவிட முடியாது. தாயும் தந்தையும் பிள்ளைகளும் எல்லாம் சேர ஒரு குடும்பம் உருவாகிறது. இப்படி மிக முக்கியமானவர்களாகிய தாய் தந்தை பிள்ளைகளால் ஆகிய குடும்பத்துக்கு நடுவணுக் குடும்பம் (*Nuclear family*) அல்லது முதல்நிலைக் குடும்பம் (*Primary family*) அல்லது உடனடிக் குடும்பம் (*Immediate family*) என்று ஆங்கிலத்தில் மூவகைப் பெயர்கள் உள்ளன. பெயர்கள் மூன்றாக இருப்பினும் அடிப்படைப்பொருள் என்னவோ ஒன்றுதான். எனவே இக்குடும்பம் தன்னகத்தே உள்ளவர்க்குப் பாதுகாப்பும், உற்பத்திக்கு வாய்ப்பளிக்கும்

கூட்டும் தருகிறது. தாய், தந்தை, பிள்ளைகளுடன் மற்றும் நெருங்கிய உறவுகொண்டவர்களில் சிலர் சேரின், அக்குடும்பம் விரிந்த குடும்பம் (*Extended family*) ஆகிறது. விரிந்த குடும்பம் பலவகைப்படும். மிக நெருங்கிய உறவுள்ளவர்களால் அது விரிவடைவதும் உண்டு. சற்றுத் தொலைவில் உள்ள உறவுகளால் விரிவடைவதும் உண்டு. பிறப்பால் ஒருவருக்கொருவர் உறவுகொண்டு இயங்கும் குடும்பம் இரத்தக் கலப்புக் குடும்பம் (*Consanguineous family*) எனப்படும். இக்குடும்பத்தைச் சேர்ந்த தனித்த எவர்க்கும் தன் விருப்பப்படி இயங்க உரிமையில்லை. குழந்தைகள் பெரியவர்களாவதாலோ, திருமண விலக்கு ஏற்படுவதாலோ, இரத்தக்கலப்புக்குத் தரப்பட்ட சிறப்புக் கெடுவதில்லை. எனவே இவ்வகைக் குடும்பம் கலைவதில்லை; சற்று நிலைத்தே நிற்கிறது. இக்குடும்ப அமைப்பின்படி நெருங்கிய உறவினர்களுள் உடல்தொடர்பு கொள்ளக்கூடாது. எனவே இரத்தக் கலப்புள்ளவர்களை நடுவில் வைத்துப் புறத்தே மணமக்களை இருத்தவேண்டியுள்ளது. இவ்வகைக் குடும்பம் இரத்தக் கலப்பால் உண்டாகும் உறவுக்குச் சிறப்பு அளிக்கிறது என்பதையும், மணவினையால் உண்டாகும் கட்டுப்பாடு இல்லாதது என்பதையும் அறிகிறோம். இதற்கு எடுத்துக்காட்டாக, கேரளத்தில் உள்ள நாயர் பெண்கள் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில்கூட இரத்தக்கலப்புக் குடும்ப அமைப்புடையவர்களாகவே இருந்தனர். இவர்கள் கணவன்மார்களை வேறாகவே கருதினர்; தம் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதவில்லை. தகப்பன் என்றோ கணவன் என்றோ இவர்கள் எச்சிறப்பும் காட்டவில்லை.

உடற்கலப்புக் குடும்பம் (*Conjugal family*) என்னும் வகையை நாம் நன்கு அறிவோம். இவ்வகையைக் கரியா (*the Kharia*) போன்ற பழங்குடிகளிடமும் காணலாம். உடலால் உறவு கொண்ட கணவன் மனைவியையும், அவர்களின் குழந்தைகளையும் நடுவில் வைத்துச் சுற்றிலும் மற்ற உறவினர்களைச் சூழ வைப்பது இவ்வகைக் குடும்பம். இவ்வகையில் உடலுறவுக்குச் சிறப்புத் தரப்படுகிறது. எனவே உடலுறவு கெடும் நேரத்தில், அதாவது மணவிலக்கின் பொழுது, இவ்வகைக் குடும்பம் நிலை பெறாத ஒன்றாக மாறிவிடுகிறது. நிலைபெற்ற ஒன்றாக இதை

ஆக்கவேண்டுமானல், மணவிலக்கை விலக்கி, உடலால்ஒன்றுபட்ட எந்த இருவரும் பிரிக்க முடியாத உறவுடையவர்கள் என்று ஆக்கப்படவேண்டும். இவ்வகைக் குடும்பம் இன்னொரு முக்கிய மாற்றத்தையும் உண்டுபண்ணுகிறது. ஒருவனோ ஒருத்தியோ மணம் ஆன பிறகு, தான் பிறந்த குடும்பத்தைவிட்டு வேறு குடும்பத்துக்குச் செல்வதால் உண்டாகும் மாற்றமே அது. தந்தையகத்து (*Patrilocal*) வாழ்முறையாக இருப்பின் பிறந்தகத்தை விட்டுப் புக்ககத்துக்கு வரும் புதுப்பெண் தன் வீட்டுத் தொடர்பு கொஞ்சமும் இல்லாதவளாக ஆகிவிடுகிருள். ஆனல் இவளுடை கணவன் என்னவோ தன்னகத்தைவிட்டு விலகுவதில்லை. ஒருவர் பிறந்த குடும்பத்தைப் பிறந்தகம் (*Family of Birth*) என்றும், புகும் குடும்பத்தைப் புக்ககம் அல்லது வேட்டகம் (வேள்+அகம்) (*Family of Procreation*) என்றும் அழைக்கிறோம்.

இந்தியப் பழங்குடிகளிடையே ஒருவன் பல பெண்களை மணக்கும் வழக்கம் இருந்து வருகிறது. இப்படிப்பட்ட பலதார மணம், முதல்நிலைக் குடும்பத்துள் அடங்காத ஒன்று என்றும், அதனின்று வேறுபட்டு நிற்கும் ஒரு குடும்பமே என்றும் ஆகும். பலகணவ மணமும் இப்படியே. ஒருத்தி பல ஆண்களைக் கணவர்களாக ஏற்கும் காசா (*The Khasa*) போன்ற பழங்குடிகளிடையேயும் குடும்ப அமைப்பு நாம் முதலில் வகைப்படுத்திய அமைப்புக்களுக்குச் சற்றுப் புறம்பானதாகவே காணப்படுகிறது. இக்காசாப் பழங்குடிகளில் உடன்பிறந்த அண்ணன் தம்பியர் அனைவரும் ஒரு பெண்ணை மணக்கின்ற வழக்கம் உள்ளது. அப்படி மணந்த ஒருத்தியிடம் எவற்கும் தனி உரிமையில்லாதது குறிப்பிடத்தக்கது. எனவே இவர்கள் அமைக்கும் குடும்பம் ஒருவகையதே. மேற்சொன்ன இருவகையும் கலந்த ஒருவகை, தோடர்களிடம் இன்று நிறவுகிறது. சில ஆண்கள் சில பெண்களை மணப்பதே அவ்வகை. இவ்வாண்களும் பெண்களும் எக்கட்டுப்பாடும் இன்றி ஒருவரையொருவர் சேரலாம். ஆனல் எந்த ஓர் ஆணுக்கும் எந்த ஒரு பெண்ணிடமும் தனி உரிமை இல்லை. இதைக் கூட்டுமணம் (*Group Marriage*) என்கிறோம்.

## கூட்டுக் குடும்பம்

இந்தியாவில் இமயத்திலிருந்து கன்னியாகுமரி வரை எங்கும் காணக்கூடிய ஒரு குடும்ப அமைப்பே இது. மரபு, மதம், வரலாறு, வெறுங்கதை எல்லாம் இக்கூட்டுக் குடும்ப அமைப்பை ஏற்றும் தழுவியும் உள்ளன. ஒரு கூரையின்கீழ்ப் பொதுச் சொத்துடன் இயங்கும் நெருங்கிய தொடர்புள்ள பல முதல் நிலைக்குடும்பங்களின் தொகுத்த வாழ்க்கையே இக்கூட்டுக் குடும்பம் ஆகிறது. இது இருவகைப்படும்.

1. கேரளத்து நாயர்களைப் போலத் தாயகத்துக் கூட்டுக் குடும்பம். 2. மற்ற இந்துக்களைப் போலவும், மத்திய இந்தியப் பழங்குடிகளைப் போலவும் தந்தையகத்துக் கூட்டுக் குடும்பம். திருமணத்துக்குப் பிறகு மேற்சொன்ன கூட்டுக் குடும்பங்களுள் முன்னதான தாயகத்து வழிப்படி பெண்ணும், பின்னதான தந்தைவழிப்படி ஆணும் தன் பிறந்தகத்தைவிட்டு வெளியேறுவதில்லை. தந்தையக வழிப்படி பெண்களும், தாயக வழிப்படி ஆண்களும் பிறந்தகத்தைவிட்டு விலக வேண்டிவரினும், இவர்கள் அறவே அப்படி விலகிவிடுவதும் இல்லை. எனவே இவர்களால் குடும்ப வகைகள் பெருகுகின்றன. முதல்நிலைக் குடும்பங்கள் (*Primary families*) ஒன்றுடன் ஒன்று உறவால் தொடர்புகொள்ளும் பொழுது உண்டாகும் தொகுப்புக்குக் கால் (*Clan*) அல்லது கால்வழி என்பது பெயர். ஆண் பெண் ஆகிய இருபாலரால் குடும்பம் உண்டாகிறது. ஆனால் கால் அல்லது கால்வழி ஆண் அல்லது பெண்ணால்மட்டுமே உண்டாகிறது. அதாவது, தந்தைக் கால்வழி (*Father clan*) என்றும், தாய்க் கால்வழி (*Mother clan*) என்றும் அவை பெயர்பெறுகின்றன. பல கால்வழிகள் சேர ஒரு பெருங்கால்வழி உண்டாகிறது. கால்வழிகளைத் துண்டித்துப் பார்த்தால் பலசிறு கால்வழிகள் (*lineages*) பிரிகின்றன. ஒவ்வொரு சிறுகால்வழிப் பிரிவுக்கும் ஒரு முன்னவர் (*ancestor*) உண்டு. கால்வழியின் அடிப்படையில் அமைந்த தோடர்களைப் பாருங்கள். தெய்வாளியாள் (*Teivaliol*) என்றும், தேர்த்தாராள் (*Tartharol*) என்றும் இவர்கள் இருபெருங்கால்வழிகளாகப் பிரிகின்றனர். ஒவ்வொரு பெருங்கால்வழியும் தந்தைக்கால்வழியாகப் பிரிகிறது.

கோத்திரம் என்று இந்துக்கள் சொல்லுகிற பாகுபாட்டைப் பார்ப்போம். கோத்திரம் என்பதும் ஒருவகைக் கால்வழியே. ஒரு காலத்தில் வாழ்ந்திருந்த முனிவர் ஒருவருடைய கால்வழியில் வந்தவர்கள் என்பதே இக்கோத்திரம் சொல்வது. பல முனிவர்கள் பல கால்வழிகளுக்கு முன்னவர்களாக இருப்பதால், பல கோத்திரங்கள் உள்ளன. ஒரு கோத்திரத்தைச் சேர்ந்த ஓர் ஆணும் பெண்ணும் மணக்கக்கூடாது என்ற விதி, ஒரு கால்வழி வந்த ஆண்பெண் மணத்தொடர்பு இன்மையை ஒட்டியதே என்னலாம். இரத்தக் கலப்புள்ள உறவினர்கள் அடங்கிய ஒரு தொகுதியெனக் கோத்திரத்தைப் பார்க்குங்கால், ஒரு கோத்திரத்துக்குள்ளேயே மணப்பது சரியன்று என்று தோன்றுகிறது. என்றாலும் இன்று நாம் காண்பது நூற்றுக்கு நூறு தனிப்பட்ட கோத்திரவகை அன்று. அதாவது ஒரு கோத்திரத்தைச் சேர்ந்தவர்களுள் எத்தனையோ பண்பாட்டு மாற்றங்கள் காணப்படுகின்றனவாகையால் கோத்திரத்தைக் கொண்டு மணவினையைக் கட்டுப்படுத்துவது தேவையில்லை என்னலாம்.

குடும்பங்களில் ஒரு தாரக் குடும்பம் என்றும், பல தாரக் குடும்பம் என்றும், பல கணவக் குடும்பம் என்றும், கூட்டு மணக் குடும்பம் என்றும் திருமண வகைகளைக் கொண்டு பலவகைக் குடும்பங்கள் உண்டு. தலைமையைக் கொண்டு பார்த்தால் தந்தைத் தலைமைக் குடும்பம் என்றும், தாய்த் தலைமைக் குடும்பம் என்றும், மாமன் தலைமைக் குடும்பம் என்றும் மூவகைக் குடும்பங்களைப் பார்க்கலாம். ஒரு குடும்பத்தின் பெயர் அல்லது பொருளை வழியுரிமையாக்கும் முறையினையோ, ஒருவருடைய தகுதியை வரிக்கும் (*succession to rank*) முறையினையோ பார்க்குங்கால் தாய்வழிக் குடும்பம், தந்தைவழிக் குடும்பம் என்றும், இடத்தைக் கொண்டு பார்க்குங்கால் தாயகத்துக்குக் குடும்பம், தந்தையகத்துக் குடும்பம் மாமனகத்துக் குடும்பம் என்றும் குடும்பங்கள் பெயர்பெறுகின்றன.

மனிதன் நாகரிகம் வளரப்பெற்றவனாயினும் சரி, அல்லது நாகரிகமே அறியாதவனாயினும் சரி, அவனையும் அறியாமல் ஒரு கட்டுப்பாட்டுக்கு, ஒழுங்குக்கு உட்பட்டவன் என்பதைக் குடும்ப

அமைப்பு நமக்கு தெரிவிக்கவே செய்கிறது. ஒருவனும் ஒருத்தியும் தம் உடற்பசியைத் தணித்துக்கொள்ள அடிப்படையில் ஓர் ஒழுங்கமைப்பால். சேர்க்கை நிலையமாக (*mating institution*) அமைந்ததே குடும்பம் என்னலாம். குடும்பம் இப்படி ஒரு சேர்க்கை நிலையமாக அமைந்த பிறகே மனிதன் தன் சூழ்நிலை, தேவை இவற்றுக்கு ஏற்பச் சேரும் வகையை உண்டாக்கினன் என்றும் சொல்லலாம். இப்படி ஆணும் பெண்ணுமாகக் கூடிய தன் பயனாக அவர்கள் பெற்ற குழந்தைகளைக் காக்கவும், வளர்க்கவும், வழியுரிமை கொடுக்கவும் அவர்களுக்கு இயற்கையாகவே தோன்றியிருக்கவேண்டும் என்பது எளிதில் விளங்கக்கூடியதே. இப்படி அவர்களுக்குள் ஏற்பட்ட இயற்கை உணர்ச்சிக்குச் சில தோற்றங்களை அளிக்கவே, அத்தோற்றங்கள் பல உறவு முறைகளாகவும், வழக்க ஒழுக்கங்களாகவும், குடும்பக் கட்டுப்பாடுகளாகவும் அமையலாயின. குடும்பம், அதாவது சேர்ந்து வாழ விரும்பும் ஆண் பெண்ணின் இருப்பிடம், அவர்களுக்கு ஒரு பொருளாதாரத் தகுதியையும் தருகிறது. தாய், குழந்தை இவர்களுக்கு மட்டும் காப்பளிக்கும் ஓர் இடம் அன்று குடும்பம். ஆனல் அவர்களுடன் இருக்கும் அல்லது அவர்களைச் சேர்ந்த அத்தனை பேருக்கும் ஓர் தங்குமிடமாகவும் அது இருக்கிறது என்றே சொல்லலாம்.

குடும்பம் பரந்து நிலைத்த ஓர் இன்றியமையாத அமைப்பு. எந்தக் காலத்தில், எந்தச் சமூகத்தில், எந்த நாகரிகத்தில், எந்தப் பண்பாட்டில் குடும்ப அழைப்பு இல்லை? தொன்றுதொட்டு இருந்து வருகிற ஓர் அடிப்படை இயற்கை அமைப்பு (*fundamental natural system*) என்றே இதைச் சொல்லலாம்.

குடும்பம் மன உணர்ச்சிகளை ஒன்றுகாட்டும் ஓர் அமைப்பு என்றும் ஆகிறது. உடற்பசி ஓர் உணர்ச்சி; இவ்வுணர்ச்சிக்கு உணவாகவுள்ள ஒரு பொருளிடம் (*male or female*) தன்னையும் அறியாமல் ஒரு பற்று உண்டாவதும், அப்பற்று அன்பாக மாறுவதும் எல்லாம் மன உணர்ச்சிகளே. இம்மன உணர்ச்சி ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவாக இருப்பதால், இவர்கள் பெற்ற குழந்தைகளிடமும் இவர்கள் இவ்வுணர்ச்சியைக் காட்ட, இப்படி, இரத்தக் கலப்புள்ள அத்தனைபேரும் ஒருவருக்கொருவர்

பற்றுடன் நடந்துகொள்ள இக்குடும்ப அமைப்பு வாய்ப்பளிக்கிறது. எனவே குடும்பம் ஓர் உணர்ச்சி ஈர்ப்புக் களம் (*institution of emotional integration*) என்றும் ஆகிறது.

ஒரு கூட்டத்தின் பண்பாடு காக்கப்படும் இடம் என்றும் இதைச் சொல்லலாம். எப்படியெனின், பற்றின் காரணமாகக் குழந்தைகள் தாய்தந்தையரின் வழக்க ஒழுக்கங்களைக் கற்று, அவற்றையே தம் வாழ்க்கையில் மேற்கொள்வதால் ஒரு கூட்டத்தினரின் வழக்க ஒழுக்கங்கள் கெட வாய்ப்பில்லை. எனவே அவர்களின் பண்பாடு காக்கப்படுகிறது.

குடும்பம் ஒரு கல்விக் களமாகவும் பயன்படுகிறது. குழந்தைப் பருவமே எல்லாப் பருவங்களிலும் இளகிய, எதையும் ஈர்க்கவல்ல ஒரு பருவம். 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா' என்னும் பழமொழியை நோக்குக. எனவே இப்பருவத்தில் குழந்தைகள் எப்படியெப்படி நடக்கவேண்டுமென்பதையெல்லாம் குடும்பத்தில் கற்றுக்கொள்கின்றன. பிறர் சொல்லிக் கற்றல் ஒன்றே கல்வி அன்று அல்லவா? எத்தனையோ நல்வழிகளையும் கெடுவழிகளையும் புலன்களால் ஈர்த்து ஈர்த்தே நம் மனங்களில் படியச் செய்துகொள்கிறோம். இப்படிக் குழந்தைகள் கல்வி கற்கும் நற்களமாகக் குடும்பம் உள்ளது என்னலாம். இத்துடன் குழந்தைகள் வளரத் தேவைப்படுவன எல்லாவற்றையும் குடும்பம் அவர்களுக்குத் தரவே செய்கிறது.

குடும்பம் அளவில் என்னவோ சிறிய ஒன்றுதான். கால்வழியைப் போலவோ அல்லது மற்றெந்தத் தொகுதிகளைப் போலவோ அவ்வளவு விரிவானதாகவும் பெரிய அமைப்புள்ளதாகவும் இல்லை என்றாலும், பொருள் (*Content*) அளவில், சிறப்பளவில் குடும்பம் ஒரு பேரமைப்பே என்னலாம்.

குடும்பம் தன்னகத்தே பல மக்களையும் கொண்டுள்ள ஒரு நடுவிடமாகவும், இம்மக்கள் சிதறாமல் இருக்கச் செய்யும் காவல் நிலையமாகவும், எக்காரணத்தாலோ தனித்து வாழ முடியாமல் இருப்பவர்களுக்கு ஓர் இருப்பிடமாகவும் இருக்கிறது. 'ஹோ' குடும்பம் (*Ho family*), தலைவன், தலைவி, குழந்தைகளாலே மட்டும் ஆன ஒன்றாக இருந்தாலும், சில இடங்களில் கூட்டுக்

குடும்பமாக, அண்ணன் தம்பியர் அவர்தம் மனைவியர், இன்னும் மணமாகாப் பெண்கள் சேர்ந்த ஓர் இடமாக இருக்கிறது. 'ஹோ'க்களில் பரியம் காரணமாகப் பல பெண்கள் மணப்பருவம் வந்தும் மணமாகாமல் உள்ளனர். எனவே இப்படிப்பட்ட நேரங்களில் அப்பெண்களை வைத்துக் காக்கும் பொறுப்பையும் இக்குடும்ப அமைப்பு ஏற்கிறது. வயதானவர்களையும் குடும்பம் புறக்கணிப்பதில்லை. எனவே குடும்பம் ஓர் அறநிலையமாகவும் இருக்கிறது எனின் மிகையாகாது.

உயிர்ப் பொருள்களாகிய (*biological species*) நாம் எத்தனையோ செயல்களைத் தனித்துச் செய்து கொண்டாலும், சில வற்றை அப்படிச் செய்வது முடியாத ஒன்றாக இருக்கிறது. அப்படிச் செய்ய முடியாதவைகளில் ஒன்றே மக்களைப் பெறுதல். இப்படி எந்த ஒருவரும் தனித்து நிகழ்த்த முடியாத செயல் களுக்குப் பிறர் ஒற்றுமை தேவைப்படுகிறது. எனவே ஒரு சமூகம் உருவாக அதன்கண் உள்ள மக்கள் எந்த ஒரு கட்டுப் பாட்டுக்கோ அல்லது ஒழுங்குக்கோ உட்பட வேண்டி உள்ளது. மக்களைப் பெற்று, பெற்ற மக்களைக் காத்து, வளர்த்து, சமூ கத்தில் ஓர் அடிப்படை ஒழுங்கை நிலைக்கச் செய்து, அதன் மூலம் தன் மனவுணர்ச்சிகளுக்கு ஓர் ஆறுதல் அல்லது நிறைவுதேடும் ஓர் அமைப்பே குடும்பம் என்று தெரிந்து கொண்டோம் அல்லவா ?

இக்குடும்பம் மார்கன் (*Morgan*) என்பவரால் ஐந்தாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. (1) இரத்தக் கலப்புக் குடும்பவகை (*Consanguino family*) : இதன்படி இரத்தக் கலப்புள்ள ஒரு தொகுப்பினர் இரத்தக் கலப்புள்ள வேறு தொகுப்பினரை மணந்துகொள்ள முடியும். (2) புனலௌன குடும்ப வகை (*Punalauna family*) : இதன்படி உடன் பிறந்த பெண்மகளிர் ஒருவர் கணவனை இன்னொருவர் மணந்து கொள்ள முடியும். கூட்டாக உள்ள இக்கணவன்மார்கள் (*joint husbands*) ஒருவருக் கொருவர் உறவுள்ளவர்களாக இருக்கவேண்டும் என்ற தேவை இல்லை. என்றாலும் நடைமுறையில் இக்கணவன்மாரும், மனைவி யரும் இருவேறு தொகுப்பினர்களாகவும், ஒரு தொகுப்பினர் தம்முள் ஒருவருக்கொருவர் உறவு கொண்டவர்களாகவுமே இருக்

கின்றனர். (3) இணைக் குடும்பவகை (*Syndiasmian or pairing family*) : இதன்படி ஆணும் பெண்ணும் கணவன் மனைவியாக இருப்பினும், ஒருவர் இன்னொருவரிடம் புணர்ச்சி குறித்துத் தனியுரிமை கொள்ள முடியாது. (4) தந்தை வழிக் குடும்ப வகை : இதன்படி ஒருவன் பல பெண்களை மணந்து கொள்ளலாம். மணந்த பிறகு இம்மனைவியரைத் தனித்தனி வைக்கவேண்டும். (5) ஒரு மனைவிக் குடும்ப வகை : இணைக் குடும்ப வகையைப் போன்றே இவ்வகையிலும் ஒருவன் ஒருத்தியை மணப்பினும் அவ்வகையைப் போல் அன்றிக் கணவன் மனைவியரிடையே புணர்ச்சித் தனியுரிமை (*right of exclusive co-habitation*) நிலவுகிறது.

இவற்றுடன் பழங்காலத்தில் இரத்தக்கலப்பு வகை அமைப்புகள் பலவாக இருந்தன என்றும் மார்கன் கூறுகிறார். வெஸ்டர்மார்க் (*Westermarck*) என்ற அறிஞர் நீண்ட கால ஆராய்ச்சிக்குப் பிறகு, குடும்பம் என்பது ஆண் உடைமையிலும், பொருமையிலும், பொருள் வளர்ச்சியிலும், பொருள் நாட்டத்திலும் பிறந்த ஓர் அமைப்பு என்று முடித்துள்ளமை நோக்கற்பாலது. ஆனால் ப்ரிபால்ட் (*Briffault*) என்பவர் குடும்பத்தின் பிறப்பைத் தாயுரிமையில் காண்கிறார்.

குடும்பம் எப்படிப் பிறந்தது என்பதை நாம் தீவிரமாக ஆராய்ந்து பார்க்க வேண்டிய தேவை இல்லை. ஆணும் பெண்ணும் சேர்ந்து நிலைத்த ஒரு சமூக வாழ்வையும், பொருளாதார நிலைமையையும் உண்டாக்கின் இயற்கையாகவே ஒரு குடும்பம் அமைந்துவிடுகிறது என்பதை எவரும் எளிதில் அறியலாம். இவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் இக்குடும்பத்தை மேலும் நிலைக்கச் செய்கின்றன. குடும்பம் என்பது இருபுறக் கூட்டமைப்பு (*bilateral grouping*) என்று கண்டோம். என்றாலும், ஒரு புறம் மட்டுமே சிறப்பிக்கப்படுகிறது. இன்னொருபுறம் ஏறத்தாழ புறக்கணிக்கப்படுகிறது என்றே சொல்லலாம். மணம் ஆன பிறகு தாம் பெற்ற குழந்தைகளுடன் கணவன் மனைவியரான இவர்கள் தம் இருவர் இல்லங்களிலும் இருந்து வாழ முடியாது. பொருள் முதலியவற்றையும்கூட இவர்கள் ஒரு வழிதான் பெற முடியும்; எனவே, கணவன் வீட்டிலோ அல்லது

கணவன் காப்பில் தனி வீட்டிலோ இருந்து வாழ்வதைத் தந்தையகத்து வாழ்க்கையாகவும், மனைவி வீட்டிலோ அல்லது மனைவியின் காப்பிலோ இருந்து வாழ்வதைத் தாயகத்து வாழ்க்கையாகவும் கருதுகிறோம், ஒரு பொருளையோ அல்லது ஓர் உறவையோ வழிவழிப் பெறும் முறையும் இவ்வாறே ஆண் வழியாக இருப்பின் தந்தைவழி என்றும், பெண் வழியாக இருப்பின் தாய்வழி என்றும் பெயர் பெறுகிறது. காடர் பண்பாட்டில் சில நல்ல எடுத்துகாட்டுகளைக் காணலாம்.

காடன் என்ற ஒருமைக்குப் பன்மை காடர். காடர் என்ற சொல்லுக்குக் காட்டில் வசிக்கும் ஒரு பழங்குடி என்பது பொருள். காடர் அல்லது காடன்மார் என்று இவர்களைச் சமவெளி மக்கள் அழைக்கின்றனர். இவர்களே தமக்குக் கொடுத்துக் கொண்ட பெயர் அன்று இது. தென்னிந்தியாவில் உணவு சேகரிப்பாளர்களின் சிறந்த எடுத்துக்காட்டாக 1947–48-ல் கொச்சியில் காணப்பட்டவர்களே இவர்கள். அஸ்ஸாமியக் காசிப் பழங்குடிகளிடையே (*Khasi of Assam*) காண்பதுபோல, ஒரு பழங்குடி இன்னொரு பழங்குடியுடன் திருமணத் தொடர்பு கொள்வது தன்னுரிமையுடன் வாழும் எந்த ஒரு காடனுக்கும் ஒவ்வாதது. ஹட்டன் என்பவர் இக்காடரைக் காட்டுப் பழங்குடிகளுள் மிகத் தொன்மை வாய்ந்தவர்களாகக் கருதுகிறார். எனவே இவர்களுடைய குடும்ப அமைப்பு, வழக்க ஒழுக்கங்கள் முதலியவை நமக்குப் பழங்குடிக் குடும்ப அமைப்பைத் தெரிந்து கொள்ளப் பெரிதும் பயன்படும். எந்த ஒரு குடும்ப அமைப்புக்கும் அடிப்படையில் இருப்பது திருமண வகையேயாதலின் இவர்களிடையே அது எப்படி அமைந்திருந்தது என்பதைக் காண்போம். தந்தையின் உறவினர்களில் எந்தப் பெண்ணையும் இவர்கள் மணப்பதில்லை. மாமன் மகளை மணப்பது முறையாகக் கருதப்படுகிறது. இம்முறையை இந்திய மேனரிக்க முறை (*menarikka system*) என்கிறோம். தாய் மாமன் ஒரு சிறு கூட்டத்துக்கும், தகப்பன் ஒரு குடும்பத்துக்கும் தலைமை கொள்கின்றனர். இவர்களில் விதவைத் திருமணம் இல்லாமல் இருப்பது இந்து பிராமண பழக்கத்தின் செல்வாக்கே என்று சொல்லலாம்.

காடர்களில் பெண்பாலர் உரிமை பெற்றவர்கள். திருமண நிகழ்ச்சியில் இவர்களுடைய விருப்பத்துக்குப் பெரிதும் இடம்

அளிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். திருமணத்துக்குப் பிறகு கணவனை விலக்கவும், விலக்கிய அவனையோ அல்லது வேறு ஒருவனையோ மறுமணம் செய்துகொள்ளவும் உரிமை உண்டு. குடும்பத்தில் இவர்கள் பொருந்தி வாழ்வது சரிவரச் சொல்வதற்கில்லை. அதாவது, உரிமை மிகுதியால் குடும்பம் நிலைத்த அமைப்பைப் பெருமல், ஓர் ஊரில் மக்கள் வாழ்வதும் செல்வதுமாக இருப்பதுபோலக் காணப்படுகிறது. இப்படியே இவர்களில் கீழ்த் தொகுப்புக்களுக்குக் (*sub-groups*) கால் வழிப் பெயரோ (*clan name*), குடும்பப் பெயரோ, தொகுப்புப் பெயரோ (*regional name*) இல்லை. எனினும், காடன் தனக்கென்று ஒரு பெயர் உடையவனே. அந்த ஒரு பெயரே அவனுக்கு எங்கும் எப்பொழுதும் வழங்கி வருகிறது. சில இடங்களில் இவன் ஒரு பெயர் கெட்டு இன்னொரு பெயரால் வழங்கப் பெறுகிருன். தனக்கென்று ஒரு நல்ல பெயரை வைத்துக் கொள்வதைக் காட்டிலும் பிறரால் இவனுக்கு ஏளனமாக வழங்கப் பெறும் பெயரே (*nick name*) இவனுக்கு நிலவுகிறது.

காடர் குடும்ப அமைப்பு ஒரு கட்டாக, நிலைத்த ஒரு அமைப்பாகக் காணப்படவில்லை என்ருலும் கணவன், மனைவி, மக்கள் என்ற பாசம் இவர்களிடையே நன்கு காணப்படுகிறது. திருமண விலக்கின் பிறகுகூடத் தாம் பெற்ற மக்களைச் சரிபாதிக் காலம் இருவரும் உடன் வைத்துக் காக்கின்றனர். இவர்களிடம் சிறப்பாகக் காணப்படும் பாசம் ஒன்றே இவர்களைத் தம்முடன் உறவு கொண்ட மைத்துனன், மைத்துனி, மாமன், மாமி முதலியவர்களுடன் பிணைக்கிறது. அவர்களுடைய பொறுப்புக்களில் பலவற்றை இவர்கள் ஏற்கவும் செய்கின்றனர். காடர், தந்தை வழிக்கும் தாய் வழிக்கும் ஏறத்தாழச் சம உரிமை கொடுக்கின்றனர். எனவே, இவர்களைத் தாய்வழிக் குடும்ப வகையினர் என்ரோ, தந்தை வழிக் குடும்ப வகையினர் என்ரோ திட்டமாக வரையிட முடியவில்லை. என்ருலும் காடன் குடும்ப வகையை இருபுற அமைப்பாகக் (*bilateral*) கொள்ளலாம். மணப்பெண் தன்னை மணப்பவனின் இல்லத்துக்குச் செல்வது எங்கும் வழக்கமே. ஆதலின் இவர்களிடையேயும் இவ்வழக்கம் காணப்படுகிறது என்னலாம்.

காடர்களில் தாய்மாமன் நிலைத்த ஒரு தகுதியைப் பெற வில்லை; எனினும் இவர்களின் குடும்ப வாழ்க்கையில் ஒரு முக்கிய இடம் பெறுமலும் இல்லை. தாய்வழி அமைப்புக்களில் தாய் மாமன் நிலைத்த ஒரு தகுதியைப் பெறுவதும், தந்தைவழி அமைப்புக்களில் தாய் மாமனுக்கு ஓர் இடம் இல்லாமையும் நாம் அறிந்தனவே. காடர்களில் தந்தை இறந்த பிறகு தாய் மாமன் அக்குடும்பத்தின் காப்பாளனுகிருன். ஒருவன் ஒருத்தியுடன் வாழ்கிற வழக்கமுடையவர்களே காடர் என்றுலும், ஒருவரை யொருவர் அடிக்கடி பிரிவதும் பிறரை ஏற்பதும், இப்படி ஒருவன் பல பெண்களையும், ஒருத்தி பல ஆண்களையும் கொண்டவர்களா கின்றனர். காடர் தம்மை 'மலைப் பார்ப்பனர்' (*Brahmins of the hills*) என்று கூறிக் கொள்வது நோக்கற்பாலது.

# 7. சமூக அமைப்பு

## (*Social System*)

சமூக அமைப்பை நாம் தெரிந்து கொள்வதற்குமுன் சமூகம் என்பது என்ன என்பதை நன்கு தெரிந்து கொள்வது முக்கியம். சமூகம் என்ற மக்களின் கூட்டு வாழ்க்கை எப்படி உருவாயிற்று என்பதைத் தெரிந்து கொள்ளாமல் அவ்வாழ்க்கையில் அமைப்பைத் தெரிந்துகொள்வது முடியாது அல்லவா ? எனவே முதலில் சமூகம் பிறந்த விதத்தைப் பார்ப்போம்.

மக்கள் சிலரோ அல்லது பலரோ கூடிவிட்டால் மட்டும் ஒரு சமூகம் அமைந்து விடுவதில்லை. சிலரோ அல்லது பலரோ தம் வாழ்க்கையின் முடிவு அல்லது குறிக்கோள் ஒன்றேயெனக் கொண்டு, அக்குறிக்கோளின் நிறைவுக்கு ஆவன செய்தல் வேண்டி, அத்தனை பேரும் ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழும் ஒரு மக்கள் கூட்டமே சமூகம் என்னலாம். ஒருவருக்கொருவர் உதவி செய்தல் எனின் தனி ஒருவருக்கு மட்டுமே என்பதன்று பொருள்; தனி ஒருவர் நலம் பெற்று வாழ எவரும் பொதுவாக உழைப்பது என்றே கொள்ள வேண்டும். அதாவது தனியொருவரின் தனித் தேவையை நடுவணு (*nucleus*) வாகக் கொள்ளாமல், தனியொருவருக்கும் அவரைச் சூழ்ந்துள்ள மற்றவர்களுக்கும் இடையே பொதுவாக அமைந்த தேவையை நிறைவு படுத்த அத்தனியொருவரும் மற்றவரும் கூடிச் செயலாற்றுவது என்றாகும்.

எடுத்துக்காட்டாக, ஒரு காட்டை (*jungle*) எடுத்துக் கொள்வோம். காடும் நாட்டைப்போல ஒரு நிலப்பரப்பேயாகும்.

நாட்டில் மக்கள் உயிர் வாழ்ந்தால், காட்டில் மாக்கள் (விலங்குகள்) உயிர் வாழ்கின்றன. ஆனால் வேறுபாடோ, சொல்லாமலே விளங்கும். ஏன் அப்படி? காட்டில், நாட்டில் உள்ளதைப்போலச் செப்பனிட்ட பாதை இல்லை. விலங்குகளிடையே கட்டுப்பாடு இல்லை. எங்கும் புதர். எவ்விலங்கும் தனக்கென்றே வாழக் கூடிய பிறவி. எனவே ஒன்றையொன்று நெருங்கி வாழ முடியாத அமைப்பற்ற ஓர் இடமாகக் காடு உள்ளது.

நாடோ அப்படியின்றி ஒருவர் நல்லதை நாடின், அந் நாட்டத்தின் முடிவு கண்டு வாழ வழி கோலுகிறது. நாடியதைத் தரவல்லது நாடு என்கிறோம். நாடியது எவ்வளவு உயர்ந்த அல்லது சிறந்த பொருளாக இருப்பினும் அந் நாட்டத்தின் நிறைவுக்குத் தனி ஒருவரின் முயற்சி ஒன்றே போதாது. தனியொருவரும் மற்றவரும் கூடி முயன்றால் நாடியதை எளிதில் எப்படியும் பெறலாம். எனவே ஒருவருக்காகப் பலர், பலருக்காக ஒருவர் என்ற அடிப்படையில் பிறந்ததே சமூகம் எனின் மிகப் பொருந்தும். எனவே ஒரு சமூகம் ஆடவர், மகளிர், மக்கள் (*men, women and children*) அத்தனை பேரையும் ஒன்று கூட்டித் தலைமுறை தலைமுறையாக மரபு கெடாமல் வாழச் செய்கிறது என்றும் சொல்லலாம்.

ஒரு குடும்பமேகூடச் சிறு அளவில் ஒரு சமூகமாகிவிடுகிறது. குடும்பத் தலைவர்களாகிய கணவனும் மனைவியும் தம் மக்களுக்கு இப்படித்தான் வாழ வேண்டும் என்று தாம் வாழ்ந்த வாழ்க்கை முறையைக் கற்பித்து, அவர்களைப் பெரியவர்களாக்கித் தாம் வாழும் சமூகத்துக்கு அளித்து விடுவார்களேயானால் அச்சமூகம் அழிவு பெறுவதில்லை. எனவே சமூக வளர்ச்சிக்குக் காரணமா யிருந்த அக் குடும்பமே ஒரு சிறு சமூகமாகிவிடுகிறது. மேலும், குழந்தைகள் சமூக அறிவினைத் தம் குடும்பங்களி லேயே கற்றுக் கொள்வதால் குடும்பத்தை ஒருவாறு சிறு சமூக அமைப்பு என்றால் மிகையாகாது. இதுபோலவே தமக்கென்ற மரபுகளும் வாழ்முறைகளும் கொண்டுள்ள பெரிய நாடுகளும் பேரளவில் சமூகங்களாகிவிடுகின்றன என்னலாம். இப்படியே மேலைச் சமூகம் (*Western society*), கீழைச் சமூகம் (*Eastern society*) என்றெல்லாம் பாகுபடுத்தவும்

செய்கிறோம். உலகெங்கும் மக்கள் வாழவே செய்கின்றனர். இவர்கள் அனைவருக்கும் பொதுவான வாழ்க்கைத் தேவைகளும் இல்லாமல் இல்லை. எனவே பரந்துநோக்கின், உலகமே கூட ஒரு பெருஞ் சமூகமாகிவிடுகிறது. ஆனால் ஒன்று ; நல்வாழ்வுக்கு வேண்டிய பொதுத் தேவைகளை ஏற்றுச் செய்யும் ஒரு மக்கள் கூட்டம் சமூகம் என்றால், அப்பொதுத் தேவைகள் எத்தனையோ காரணங்களால் வேறுபடுவதால், பல சமூக அமைப்புக்கள் ஏற்படுகின்றன. ஒரு சமூக அமைப்புக்கு உட்பட்ட மக்கள் ஒருவருக்கொருவர் ஒருமைப்பாடுடன் வாழ்கின்றனர். இவ்வொருமைப்பாட்டுக்கு அடிப்படையாக ஒருவர் செய்யாத ஒரு செயலை இன்னொருவர் செய்து உதவும் போக்கே அமைந்துள்ளது. பயிரிடுகிறான் ஒருவன் ; ஆடை நெய்கிறான் இன்னொருவன் ; கல்வி புகட்டுகிறான் ஒருவன் ; காவல் புரிகிறான் இன்னொருவன் ; இப்படிப் பலர் பல வேலைகளை அவரவர்களுடைய ஆற்றலுக்குத் தகுந்தபடி செய்கின்றனர். எனவேதான் ஒரு சமூகம் வாழ முடிகிறது.

ஆற்றல் மட்டுமே கூட ஒருவர் ஒரு வேலையைச் செய்ய முக்கியமான ஒன்றாக இல்லை. உலகெங்குமே ஆடவரும் மகளிரும் சேர்ந்து, சமூக அமைப்புக்குக் காரணமாக இருப்பினும், ஏறத்தாழ ஆடவர் செய்யும் தொழில் வேறாகவும், மகளிர் செய்யும் தொழில் வேறாகவும் இருந்து வருவது எவரும் அறிந்ததே. ஒரு சமூகத்தில் கடுமையான வேலைகள் பலவும் ஆடவரால் செய்யப்படுகின்றன. சற்று எளிய வேலைகளை மகளிர் செய்கின்றனர். குடும்ப வாழ்க்கையில் வெளிப்புற அலுவல்களை ஆண் மகனும், உட்புற, அதாவது, மனைப்புற அலுவல்களைப் பெண் மகளும் ஏற்றுச் செய்வதை விளக்க வேண்டியதில்லை. எக்காலத்தும் இப்படித்தான் எச்சமூக மக்களும் தம்மிடையே அலுவல்களைப் பகிர்ந்து கொள்கின்றனரா என்னின், ஏறத்தாழ அப்படி அமைந்திருக்கிறது என்றே கூறலாம். பாலினீசியா (*Palinisia*) வில் ஆடவரே சமையல் வேலை செய்தனராம். ஹிதட்ஸா இந்தியரில் (*Hidatsa Indian*) பெண்களே உழவர்களாயிருந்தனராம். எனவே, ஒரு சமூகத்துத் தொழில் எதுவாயினும் அதைச் செய்பவர் ஆடவரா, மகளிரா என்னின் இருவரும் ஏறத்தாழ பொது உடலமைப்பு, அறிவுத்திறம்

பெற்றிருப்பதால், சமூகத் தேவை எப்படியோ, வாய்ப்பு எப்படியோ, அலுவலரின் (*working people*) திறமையும் தகுதியும் எப்படியோ அப்படி அவரவர்க்கு ஒருவேலே வந்துறு கிறது. காலத்துக்குக் காலம் இது வேறுபடவும் செய்கிறது. இன்றைய சமூக அமைப்பில் கணக்கற்ற சிறப்புச் செயலறிஞர் கள் (*specialists*) பல்வேறு துறைகளில் உழைக்கின்றனர். அவ்வாறு உழைப்பதாலேயே இன்றைய சமூகம் ஒரு தனிச் சிறப்பும் பெறுகிறது. இத்தனிச் சிறப்பில் ஒரு தனிச் சிக்கலும் இருக்கிறது. பலருக்காகப் பலவித வேலேகளேச் செய்யத் தகுதி பெற்ற சிலருடைய நோக்கம், பலர் தேவைகளே நிறைவேற்றவும் பல பொருள்களேப் பேரளவில் பெறவும் ஏற்பட்ட இயந்திரங்கள், பலர்பார்வைக்கு எட்டுவதில்லே. எனவே அவர்களுடைய நோக்கம் குறுகி (*narrow*) விடுகிறது. இதனுல் தொழில் அமைதி, குடியரசுத் தன்மை (*democratic way*), தனியொருவரின் நலம் எல்லாம் சற்றுப் பாதிக்கப்படுகின்றன என்றே சொல்லலாம். சமூகம் சிறியதோர் அமைப்பாக இருப்பின், அச் சமூக மக்கள் தம்மிடையே வேலேகளேப் பகிர்ந்து செய்வதன் முன், தம் தேவை, தாம் உள்ள சமூகத்தின் தேவை என இரு தேவைகளேயும் நன்கு தெரிந்து உணர்ந்து செயலாற்றுகின்றனர். சமூகம் பெரியதோர் அமைப்பாக இருப்பின், அச் சமூகத் தேவைகளேப் பேரளவில் இயந்திரங்களும், அவ்வியந்திரங்களே இயக்கும் சில மக்களும் நிறைவேற்றி விடுவதால் பலரும் ஒரு தேவையை உணர முடிவதில்லே. தேவையை உணர்ந்து செயலாற்றவில்லே யெனின் சிக்கல் தாளுகவே வந்துறுகிறது.

தொழிற் பகுப்பு (*division of labour*) ஒன்றே மக்க ளிடையே காணப்படும் தொழில் அமைப்பு (*Organisation of work*) என்றும் சொல்வதற்கில்லே. எகிப்து நாட்டில் அடிமை களேக் கொண்டு பல தொழில்களேச் செய்வித்தனர். பழங்கால இந்தியாவில் சாதிப்பாகுபாட்டைப் புகுத்திப் பல தொழில்களேச் செய்வித்தனர். இரஷ்யாவில் பொதுவுடைமை (*Communism*) என்ற கொள்கையைப் புகுத்தித் தொழில்களேச் செய்வித்தனர். இன்றைய இந்தியாவில் முன்னேற்றத் திட்டங்களே வகுத்துத் (*project planning*) தொழில்களேச் செய்வித்து வருவதைக் காண்கிரேும் அல்லவா ? இப்படிப் பலவிதங்களில் ஒரு சமூகம்

பல வேலைகளைச் செய்து வளம் பெறுகிறது. இன்று திட்டங்களை வகுத்து ஒரு சமூகத்தை வளர்க்கும் இந்தியத் தொழில் அமைப்புக்கு அடிப்படையில் இருப்பது பலரும் ஒரு முடிவு நாடி, இப்படிச் செயலாற்றுவதே நலம் பயப்பது என்று துணிந்து ஒன்று கூடி இயங்கும் சமூகப் பண்பே (*social trait*) என்னலாம்.

வேலை செய்யவில்லையெனின் பட்டினி கிடக்க வேண்டுமே என்ற அச்சத்தால் இப்படி நடக்கிறார்களோவெனின், அன்று என்றே சொல்லலாம். ஏனெனில், விலங்குகளும் உணவைத் தேடித்தான் அலைகின்றன. அவற்றுக்கு ஒரு சமூகம் இல்லையே! மக்கள் தொழிலை வாழ்க்கையெனக் கருதி, தொழில் அற்ற வாழ்க்கை பொருளற்றது, பயனற்றது என்று கொண்டு வாழ்கின்றனர். இப்படிக் கொள்வதற்கு ஒரு தூண்டுதலாக அமைந்தனவே வயிற்றுப் பசியும் உடற்பசியும் என்னலாம். நம்மைப் போன்ற பலர் வாழும் இடமே இவ்வுலகு என்ற எண்ணத்தில் தோன்றுவதே ஒரு சமூகம். நல்ல பொருள் என்றும், உண்மைப் பொருள் என்றும், அழகுப் பொருள் என்றும் நினைப்பதற்குக் காரணம், அப்படி நினைத்து ஒரு சமூகத்தை வளர்ப்பதற்குக் காரணம் ஒருவர் வாழ்க்கையை இன்னொருவர் மதிப்பதே என்னலாம். இம்மதிப்பால் மக்கள் பல நற்செயல்களைப் புரிகின்றனர். இந் நற்செயல்கள் அத்தனையும் சேர்ந்தே மக்களின் பண்பாடு (*Culture*) தோன்றுகிறது. எனவே எந்த ஒரு சமூகப் பண்பாட்டிலும் அச்சமூகத்துத் தனியொருவனுக்கு அச்சமூகம் வகுத்துத் தந்த ஒரு நல்வழி காணப்படவே செய்கிறது. சமூக அமைப்பு, சிறு அளவில் இருப்பின் மேற் சொன்னவை மிகப் பொருந்தும். சமூகம் பெருகப் பெருக, வளர வளர, தனியொருவனுக்குச் சமூகம் தரும் பண்பாடுதான் என்னவெனின், அது, பல பண்பாடுகளின் ஒரு கலவையே ஆகும் என்றுதான் சொல்லவேண்டும். எனவே ஒரு தனிப் பண்பாட்டை ஒருவருடன் இணைத்துப் பார்க்க முடியாது ; பல பண்பாடுகளை முழுமையும் கூடப் பார்க்க முடியாது. அதுமட்டுமன்று. தந்தையின் பண்பாடு தன் பிள்ளையின் பண்பாட்டினின்றும்கூடச் சற்று வேறுபடவே செய்யும். ஏனெனில் தந்தை வளர்ந்த பண்பாட்டுச் சூழ்நிலை

வேறு. பிள்ளை வளரும் பண்பாட்டுச் சூழ்நிலைவேறு. இதனால் வாழ்க்கை தன் பொருளை இழக்கவும் ஏதுவாகிறது; நிலையற்று (*without certainty*), காப்பற்று (*without security*), அமைதி யற்று (*without rest*) வாழவேண்டியும் ஏற்படுகிறது. வாழ்க்கை இப்படி மாற்றம் உறும்பொழுது மக்களின் சிந்தனையும் இதை எதிர்த்து எழுகிறது. இவ்வெழுச்சி பகுத்தறிவால் செம்மை செய்யப்பட்டுச் சமூக வாழ்க்கையைச் சீர்ப்படுத்தவும் உதவுகிறது. அறிவியல் வளர, பகுத்தறிவுத் திட்டங்கள் பெருக, சமூக அமைப்பே மாறிவிடுகிறது.

உலகில் உள்ள பல சமூகங்களும் இப்படி இணைந்து இயங்க முடிந்த பொழுதும்கூட வேறுபாடுகள் பேரளவில் தோன்றவும், பேரளவில் முடியவும் கூடும். ஆனால் இந்நெருக்கடியை ஒரு மனிதன் இன்னொரு மனிதனிடம் காட்டும் மனிதப் பரிவால் தவிர்க்க முடியும்.

ஒருவரைப் போன்று இன்னொருவர் இருப்பினும் ஒருவரினின்றும் இன்னொருவர் எவ்வளவு வேறுபடுகிறார்! இவ்வேறுபாடுகள் இவ்விருவருக்குமே பொது. ஆயினும் ஒருவரிடம் உள்ள வேறுபாடுகளை இன்னொருவர் காணப் பொறுப்பதில்லை. இருவரும் வாழ வேண்டும் என்று மனிதப் பரிவு உண்டாயின் வேறுபாடுகள் ஒன்றையொன்று மோதாமல் நன்முறையில் களையப் பெறும். களையப் பெறவில்லை யென்றாலும் ஒன்றையொன்று பொறுக்கும் தன்மையேனும் (*tolerance*) கட்டாயம் ஏற்படும். ஒரு சமூகத்தின் மன நிலை வேண்டுமானால் அச் சமூகத்துடன் பிணைந்து காணலாம். ஆனால் மனித சமூகம் வாழ வேண்டும் என்ற பேரெண்ணம் பிற சமூகங்களில் காணப்படும் வேறுபாடுகளைப் பொறுக்கும் சக்தியை ஒரு சமூகத்து மக்களுக்குக் கொடுக்கிறது. இச்சத்தியைப் பெறுவதேகூட ஒரு சமூக மாற்றம் என்று கருதலாம். மனித சமூகத்தையே அழித்துவிடக்கூடிய போர்முறைகள் மக்களிடையே புகுத்தும் பேரச்சம் ஒன்றே இன்றைய சமூகங்களைத் திருத்தவும் உதவலாம். சமூகச் சரித்திரத்தில் (*history of society*) சிலரோ பலரோ கூடி வாழும் வாழ்க்கையைச் சமூகம் என்ற பெயரிட்டு அழைத்து வரினும், இக்கூட்டு வாழ்க்கை

எத்தனையோ நிகழ்ச்சிகளால் பெரும்பெருந் திருப்பங்களைப் பெற்றிருக்கிறது. அப்படியே இன்றைய சமூகத்தில் ஏற்பட விருக்கும் ஒரு பெரும் திருப்பத்துக்குக் காரணமாக இவ்வச்சம் வளர்ந்து வருகிறது எனின் மிகையாகாது. இருவேறு கருத்தும் போக்கும் உடைய ஒரு வீட்டில் வாழும் அண்ணன் தம்பியர் பகைவரேயாயினும், மாற்றான் ஒருவன் அவ்வீட்டினுள் நுழைந்து ஒருவன் வாழ்க்கையைப் பாழ்ப்படுத்தும் பொழுது மனித உணர்ச்சி, மனிதப் பரிவு உள்ள மனிதப் பிறவியாகிய இன்னொருவன், அதுவும் உடன்பிறந்தவனாகிய அவன், வாளா விருக்கவே மாட்டான் அல்லவா? அதுபோலவே, மனித சமூகத்தையே அழிக்கவல்ல சத்தியைச் சூறையாட விட்டு விட்டு உடன் பிறந்தவர்களைப் போன்ற மனித சமுதாயத்தினர் எவரும் பார்த்துக் களிக்கமாட்டார்கள்; இப்பரிவு மக்களிடையே தோன்றக் காரணமான இவ்வச்சம் சமூகத்தையே நல்வழிப் படுத்தக்கூடியது என்றே சொல்லலாம்.

போர் என்பது உலகில் பல சமூகத்தினர் முறைப்படுத்தி, அமைத்துப் போற்றிய உயிர் வருத்தல் (*organised violence*) என்றே கூறலாம். இருவேறு சமூகத்தினர் தம் வேறுபாட்டைச் சரிப்படுத்த உண்டாக்கிய ஓர் அமைப்பு அது. இரு சிறுவர் தம்மிடையே உள்ள வேறுபாட்டைப் பொறுக்கவும் மாட்டாமல், களையவும் மாட்டாமல் கைகலந்து சண்டையிடுவதைப் போன்றதே அது. சிறுவர்களோ, அல்லது ஒரு சமூகத்துள் ஒரு சிலரோ ஒருவரை ஒருவர் தாக்கின் அவர்களை மூத்தவர்கள், சமூகத்துப் பெரியவர்கள் கண்டித்துத் தண்டனையும் தந்து சீர்ப்படுத்துகிறார்கள். அப்படிச் சண்டையிடுவதைக் குற்றமாகக் கருதுகிறார்கள். என்றாலும் தம் கருத்தை நிலைநாட்டவோ, தம் மதத்தைப் பரவச் செய்யவோ, தம் ஆதிக்கத்தைப் பெருக்கவோ, இப்படிப் பல காரணங்களால் போர் தொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் உண்மையான போர் அரசியலை அடிப்படையாகக் கொண்ட படை அணிவகுப்பில் மட்டுமே காணப்படுகிறது. இரு பண்பாடுகள் ஏறத்தாழ ஒன்றியிருப்பின் அவற்றைப் பிணைக்கவோ அல்லது இருவேறு பண்பாட்டினரிடையே உள்ள வேறுபாட்டின் உயர்வை வெற்றியில் காணவோ நிகழ்த்தப்படுவதே போர். எனவே, சமூகம் இயங்க இப்போர்

ஒரு கருவியாக இருந்து வந்திருக்கிறது என்பதைவிடச் சமூக வளர்ச்சிக்கும் வீழ்ச்சிக்கும் காரணமாக இருந்து வந்திருக்கிறது என்பதே பொருந்தும்; ஒரு சமூகத்தை வீழ்த்தி இன்னொரு சமூகத்தை உண்டாக்கி வந்திருக்கிறது. சமூக அமைப்பில் போர் ஓர் இடம் பெற்றே வந்திருக்கிறது. போரால் எத்தனை பண்பாடுகள் கலந்திருக்கின்றன ! போரால் எத்தனை புதுக் கருவிகளும், புது மாறுதல்களும், புதுக் கண்டுபிடிப்புக்களும் (*inveentions*) ஏற்பட்டிருக்கின்றன. அணுச்சத்தியின் தோற்றத்துக்கே இரண்டாம் உலகப் போரல்லவா காரணம் ? இவ்வணுச் சத்தி இன்றைய சமூகத்தை எவ்வளவு மாற்றிவிட்டது! ஒரு சமூகத்தை அழிக்கவும் செய்கிறது; ஆக்கவும் செய்கிறது; பல சமூகங்களை ஒன்றுபடுத்தவும் செய்கிறது. சமூகத்துக்கும் போருக்கும் இவ்விதத் தொடர்பு இருப்பினும் ஒரு பெரிய நாகரிகத்தையே அழிக்கவல்ல அதன் இயல்பு இச்சமூகத்தை, சமூக அமைப்பை, போக்கை மாற்றியும் அமைக்கக்கூடும்.

சமூக அமைப்புக்குப் பொருள் உற்பத்தி இன்றியமையாத ஒன்று என்னலாம். பொருள் உற்பத்தி எப்படியோ அப்படியே பங்கீடும் (*distribution*) அமைகிறது. உற்பத்திக்கும் பங்கீட்டுக்கும் அடிப்படையாக இருப்பது செலவீடு (*consumption*). இச் செலவீடு ஒரு சமூகத்தினரின் தேவைகளைப் பொருத்திருப்பது. பழங்காலத்தில் ஒரு பொருளை விற்பனைக்கென்று எச்சமூகமும் உற்பத்தி செய்ததில்லை. உழவன் நெல்லைக் கொடுத்தால் குயவன் பானையைக் கொடுத்தான். இப்படி ஒருவன் தன்னல் செய்ய முடிந்ததை இன்னொருவனுக்குச் செய்து, தான் வேண்டியதைப் பிறனொருவன் செய்துதரப் பெற்று வாழ்ந்தான். இப்படிச் செய்துவந்ததைத் தொழில் பாகுபாடு என்று சொன்னேம் அல்லவா ?

இப்படிப் பலர் தேவைகளையும் நிறைவுபடுத்திக்கொள்ள ஒரு சமூகம் சில கட்டுப்பாடுகளையும் கடமைகளையும் ஒழுங்கு முறை செய்து அமைத்துக்கொண்ட விதத்தையே அச்சமூகத்தின் பொருளாதார நிலை (*economy*) என்கிறேம். எனவே ஒரு சமூகத்தின் பொருளாதார நிலை அச்சமூகத்தின் தேவைகளையும் அச்சமூக மக்களின் செய்திறமை (*skrill*) யையும் அடிப்

படையில் கொண்டுள்ளது என்பது எளிதில் விளங்கக்கூடியதே. சமூக அமைப்பில் பொருளாதாரம் முதலிடம் பெறுகிறது. பொருளாதாரம் என்றதும் பெரிய அங்காடிகளும் (*markets*), பெரிய உற்பத்திச் சாலைகளும் (*factories*), பெரிய மூலதனங் களும் (*capital*) நம் நினைவுக்கு வருகின்றன, அல்லவா? இவை மக்களின் செய்திறமைக்கு அடுத்த படியில் உள்ளவை என்றே சொல்லலாம். ஏனெனில், பொருள்களை விற்கவும் வாங்கவும் முடிந்த இடமே அங்காடி; இப்படி விற்றல், வாங்கல் செய்ய ஒரு கருவியாக இருப்பது மூலதனம்; பொருள்களை உற்பத்தி செய்து தரும் இடம் உற்பத்திச்சாலை எனினும், அவ்வுற் பத்திக்குத் தேவைப்படுவன கருவிகளும், இயந்திரங்களும் எனினும், இவற்றைப் பார்வையிடவும், உண்டாக்கவும், பயன் படுத்தவும் தெரிந்த மக்களின் செய்திறமை ஒன்றே மிக மிக முக்கியமானதாக உள்ளது. இச்செய்திறமையை ஒரு வளரும் சமூகம் அச்சமூக வளர்ச்சிக்குத் தகுந்தாற்போல் மக்களுக்குக் கற்றுக்கொடுக்கிறது. இப்படிக் கற்றுக் கொடுக்கவே பள்ளி களும், கல்லூரிகளும், ஆசிரியர்களும் புத்தகங்களும் உள்ளன.

பழங்காலச் சமூகங்களில் பொருள்களை உற்பத்திச் செய்து விற்றதில்லை. பொருள் உற்பத்தியும் பங்கீடும் (*production and distribution*) பொருள் விற்பனைக்காகச் செய்யப்படவில்லை. எனவே, பழங்காலப் பொருளாதார நிலை (*ancient economy*) தற்காலப் பொருளாதார நிலையினின்றும் (*modern economy*) வேறுபட்டதே. பழங்காலப் பொருளாதார நிலையின் அடிப்படை மக்களுள் ஒருவருக்கொருவர் வழக்க ஒழுக்கங்களால் கொண்டிருந்த மரபுரிமைகளும் (*traditional rights*), கடமைப்பாடுகளுமே (*obligation*) என்னலாம். இப்பொழுதும்கூடப் பல குடும்பங் களில் இவ்வித நிலையைக்காணலாம். குடும்பத்தலைவன் கொண்டு வரும் மாதச் சம்பளத்தை மனைவி, மக்கள், முதிய தாய்தந்தையர் பகிர்ந்துதானே வாழ்கின்றனர்? இச் செயலில் விற்றலும் வாங்க லும் இல்லை. ஆனால் குடும்பத் தலைவன் இச்செயலைத் தன் கடமை யாகக் கருதுகிறான். பெற்றோர் தாம்பெற்ற குழந்தைகளைக் காத்து வளர்ப்பதைக் கடமையாகக் கருதுகின்றனர். தம்மைப் பெற்ற முதியவர்களைப் பேணுவதும் கடமையெனக் கருதப்படுகிறது. இவ்வுணர்ச்சி வழிவழியாகப் போற்றப்பட்டு, மரபுரிமையாகவும்

கடமைப்பாடாகவும் ஆகிவிடுகிறது. இன்றைய சமூகத்தில் தந்தையே குடும்பத் தலைவனாக, குடும்பத் தகுதியைக் காப்பவனாக இருக்கிறான். இவன் செய்கிற தொழில், பெறுகிற பணம், பெற்ற பணத்தின் பங்கீடு எல்லாம் இவனுடைய தகுதியைக் காட்ட வல்லவை. எனவே, இவ்வகைப் பொருளாதார நிலையைத் தகுதிப் பொருளாதார நிலை (*status economy*) என்று சொல்லலாம். மனித சமூகத்தின் அடிப்படைப் பொருளாதாரமே இவ்வகைத் தகுதிப் பொருளாதாரம்தான். பழங்காலச் சமூகங்களில் மனிதன் மண்பானைகள் செய்தான்; கூடைகள் முடைந்தான்; பயிரிட்டான்; வேட்டையாடினான் என்றால் இவையாவும் அவனுடைய வாழ்க்கைத் தகுதியை உணர்ந்தே அவ்வாழ்க்கைத் தகுதியைப் போற்றுவதற்கெனச் செய்தானே தவிர, அப்பொருள்களை விற்றுப் பணத்தைப் பெருக்க அன்று; ஒருவன் செய்த ஒரு பொருளைத் தேவையுள்ள மற்றவன் பகிர்ந்து கொண்டான்.

தென் பசிபிக் சமூகங்களில் ஒருவன் ஈட்டும் பொருள் தன் தங்கை மக்களுக்கே என்று உள்ளது. பெற்ற குழந்தைகளுக்கு இவனுடைய மனைவியின் உடன்பிறந்தான் அளிக்கிறான். இப்படி இவன் கொடுப்பதும் பெறுவதும் சரி செய்யப்படுகிறது. எளிய சமூகம் ஒரு சிறு குடும்பம் போன்றது. பணம் என்றோ அல்லது அங்காடிஎன்றோ ஒன்று இல்லாமலே வாழும் மக்கள் கூட்டமே அச்சமூகம் எனலாம். இவ்வகைச் சமூகத்தில் ஒருவனுடைய அல்லது ஒருத்தியுடைய தகுதியே சமூகப் பொருளாதாரத்துக்கு முதுகெலும்பு.

தொல் சமூகங்களில் (*primitive societies*) ஒரு தொகுதியினர் தாம் சேகரித்த அல்லது உற்பத்தி செய்த பொருள்களை இன்னொரு தொகுதியினரிடம் கொண்டு சென்று அவர்களுக்குத் தேவையான பொருள்களை அவர்களிடமிருந்து பெற்று வந்தனர். இப்படிப் பண்டமாற்றாகவும், பரிசாகவும் ஒருவருக்கொருவர் தேவைப் பொருள்களை மாற்றிக் கொண்டனர். ஒருவர் இன்னொருவரிடம் பொருளை எதிர்பார்த்தே பொருள் கொடுத்தல் நிகழ்ந்தது என்னலாம். இப்படி நிகழ்ந்துவந்த கொடுக்கல் வாங்கலில் முக்கியமாக இருவருக்கிடையே நல்லெண்ணமும்

உதவி மனப்பான்மையுமே இருந்து வந்தன. கடைவிலை என்று ஒரு மதிப்பினை வைத்துக்கொண்டு பொருள்களை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொண்டதில்லை. கொடுப்பவரிடம் உள்ள பொருள்களின் முக்கியத் தன்மையும் வாங்குபவரின் தகுதியும் (*status*), தேவையுமே (*necessity*) பொருள் மாற்றத்துக்கு (*exchange of commodities*) அடிப்படையாக இருந்தன. ஒரு பொருளைக் கடையில் வைத்து விற்பது என்றால் அப் பொருளுக்கு ஒரு விலையைக் கொடுக்க வேண்டியிருக்கிறது.

ஒருவர்க்கு ஒரு பொருள் தேவைப்படுகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்பொருள் எளிதில் கிடைக்கக் கூடியதாக இருப்பின் அதன்விலை குறைந்திருக்கும். அதே பொருள் போர்க் காலத்தில் போல அரிதில் கிடைக்கக்கூடியதாக இருப்பின் அதன் விலை சற்றுக்கூடியே இருக்கும். அது மட்டும் அன்று. ஒரு பொருளை விற்பவர் அப்பொருளை வாங்குபவரிடமிருந்து பெரும் விலையைப் பெறவே முயல்வர். எனவே பெரும் விலையைக் கொடுத்துப் பெறக்கூடியவர் எவராயினும் அவர் அப் பொருளைப் பெறக்கூடும். தேவை மிகுந்தவரேயாயினும் பெரும் விலை கொடுக்க முடியாதவர் அப்பொருளைப் பெற முடியாது. இப்படி விற்றல் வாங்கலுக்கு உதவியாகவும் வாங்கும் சக்தியை (*purchasing power*) நிர்ணயிக்கவும் பல சமூகங்களில் பலவித முறைகளைக் கையாண்டனர்.

தற்காலத்தில் எப்பொருள் எங்குக் கிடைத்தாலும் அப் பொருள் எவர்க்குக் கொடுக்கப்படுகிறது என்பது 'கடை'யை (*market*)ப் பொருத்திருக்கிறது; அப்பொருளைப் பெறுபவருக்குச் சமூகத்தில் உள்ள தகுதியையோ அல்லது சமூகத்துக் கட்டுப் பாட்டையோ பொருத்தது அன்று. எந்த இடத்தில் வேலை கிடைக்கிறதோ அந்த இடத்திலேதான் ஒருவர் வேலை செய்ய வேண்டி இருக்கிறது. ஏனெனில் அந்த இடத்தில்தான் அவர்கள் உண்டாக்கும் பொருள்களுக்கு விற்பனை இடம் (*market*) உள்ளது. அவ்விடத்தில் கூட அப்பொருளை வாங்குபவர் இல்லை எனின், அதாவது விற்பனை இடம் கெட்டுவிட்டது எனின், அத்தொழிலாளர்கள் வேலையின்றித்தான் இருக்க வேண்டிவரும். எனவே, இன்றைய சமூகத்தில் ஒரு பொருளைத் தோற்று

விக்கவும் செய்து, அப்பொருளுக்கு உரிய தேவையையும் உண்டாக்க வேண்டி இருக்கிறது. அதாவது, ஒரு பொருளின் விற்பனை இடம் (*market*) எந்த அளவு உதவியாக உள்ளதோ அந்த அளவே அந்தப் பொருளின் உற்பத்தியும் வளர்கிறது என்னலாம். ஒரு சமூகத்தின் பொருளாதார நிலை அச்சமூகத்து அரசாங்கத்தால் காக்கப்படுகிறது. அதாவது, அரசாங்கமே பொருளை உற்பத்தி செய்தும் பகுத்தும் (*distribute*) தருகிறது. சில நாடுகளில் தனி வணிகம் (*private enterprise*) பெரிதும் போற்றப்பட்டுப் பொருள் உற்பத்தியும் பகுப்பும் தனித்தே இயங்குகின்றன. இவ்வுற்பத்திக்கு அரசாங்கம் ஆதரவு அளித்துப் பகுப்பு முறையைச் சரி செய்யப் பல கட்டுப் பாடுகளை உண்டாக்குகிறது. இப்படிப் பலவகைகளில் ஒரு சமூகம் பொருளாதார நிலையைப் பெறுகிறது.

சமூக அமைப்பில் மக்களே அல்லாமல் பொருள்களும் இடம் பெறுகின்றன. இயற்கையில் கிடைக்கும் பல பொருள்களை மக்கள் தம் வாழ்க்கையில் பயன்படுத்த வேண்டியிருப்பதால் அவர்கள் அவற்றைப் பெறும் வழிகளையும், பெற்றபின் பயன் படுத்தும் வகைகளையும், இதனிடையே அவற்றைக் காத்துப் போற்றும் விதங்களையும் நன்கு தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இப்படித் தெரிந்து நடப்பது மக்கள் சமூக அமைப்புக்கு அடிப்படையாகவுள்ளது என்றுகூடச் சொல்லலாம். இப்பொருள்களுக்கும் சமூகத்துக்கும் உள்ள தொடர்பைத்தான் பொருளாதாரம் என்ற தலைப்பில் விரிவாகக் கற்கின்றோம். இப்பொருள்கள் ஒருவருடைய உரிமையை மட்டும் பற்றியதாக இருப்பின் 'சொத்து' என்ற பெயர் பெறுகின்றன. இப்பெயரைக் கொண்டே தனிச் சொத்து என்றும் பொதுச் சொத்து என்றும் வகைப்படுத்துகிறோம். இச்சொத்துக்கள் சமூகத்தில் மக்கள் உழைப்புக்கு ஓரளவு தூண்டுகோலாகவும் உள்ளன. உழைப்பது ஏன்? உழைத்தாலன்றி விரும்பும் பொருளோ அல்லது தேவைப் படும் பொருளோ ஒருவர்க்குக் கிடைத்தல் அரிது. எனவே தேவையை நிறைவேற்ற உழைக்கவேண்டி இருக்கிறது. எவ்வெத் துறையில் எவ்வெவற்றிற்கு எவ்வெப்படி யெல்லாம் உழைக்கின்றனரோ, அவ்வப்படி அவர்க்குப் பயன் கிடைக்கிறது. இப் பயன் ஒன்றே ஒருவரை ஒரு சமூகத்தில் ஒரு தகுதி பெற்று

வாழச் செய்கிறது. சமூகத்தில் தகுதி பெற்று வாழ்கின்றவர்களே பல பொது நிகழ்ச்சிகளைப் பொதுநலம் கருதிச் செய்ய முடிகிறது. இத்தகுதியைப் பெற எவரும் உழைக்கவே விரும்புவர்.

வீடு, மனை, மோட்டார், நாற்காலி, கருவி (*tool*) போன்ற பொருள்கள் மட்டும் சொத்துக்கள் அல்ல; ஒருவர் பெறும் கல்வி, எழுதும் திறமை, மீன்பிடித்தல் போன்ற தொழில்களைச் செய்வதற்கெனப் பெறும் உரிமை, ஒருவர் உழைப்பால் பெறும் நற்பெயர் (*goodwill*), ஒரு பொருளிடத்துப் பெறும் தனியுரிமை (*patent*), ஆசிரியர் உரிமை (*copyright*) போன்ற பலவும் சொத்துக்களே. இவை அத்தனையும் சமூக அமைப்பில் பெரும் பங்கு கொள்கின்றன.

தொழிலைப் பகிர்ந்து பொருள்களை உண்டாக்கி, அப்பொருள்களைப் பயன்படுத்தியே சமூகம் இயங்குகிறது. வழிவழியாகத் தலைமுறை தலைமுறையாக மக்கள் ஒருவருக்கொருவர் நடந்து கொள்ளும் முறையாலும் சமூகம் இயங்குகிறது. ஒருவர் மற்றொருவர்க்குச் செய்ய வேண்டிய சமூகக் கடமை (*social obligation*) யின் உயர்வாலும் சமூகம் இயங்குகிறது. ஒருவர் பொறுப்புணர்ச்சியும் அன்புச் செயலும் சமூகம் நன்கு இயங்கக் காரணங்களாய் உள்ளன. இவை அத்தனையும் சமூகத்தில் மனிதன் தனக்கென்று பெற விரும்பும் தகுதியை அடிப்படையாகக் கொண்டவை என்றே சொல்லலாம். தனக்கென்று ஒரு தகுதியை மனிதன் உண்டாக்கிக் கொள்வதன் மூலம் முன்கூட்டியே அவன் சமூகத்துக்கு இந்த விதத்தில் சேவை செய்கிறவன் என்பதைத் தெளிவுப்படுத்துகிறான். இத்தெளிவால் சமூகத்து மக்கள் தத்தம் கடமைகளை நன்கு தெரிந்து நடக்கின்றனர். இப்படி நடத்தலும் சமூகம் இயங்க ஏதுவாக இருக்கிறது. எனவே சமூக அமைப்பே பல பேருடைய தகுதிகளையும், அத்தகுதிகள் ஒன்றுக்கொன்று கொண்டுள்ள உறவையும் கொண்டதாக உள்ளது.

ஒருவர் இன்னொருவரிடம் கலந்து பழகுவதற்கு அவ்விருவருடைய தகுதிகளும் ஒத்திருக்க வேண்டும். நீக்ரோவும்

வெள்ளையரும் ஒன்றிப் போவதில்லை. மனிதன் மனிதனை வேறுபடுத்தக் கூடாது என்ற கருத்து வளர்ந்து வரினும் இன்றும் இவ்வேறுபாடு நீங்காமல் இருப்பதைக் காண்கிறோம் அல்லவா ? நம் நாட்டில் மக்களிடையே காணப்படும் சாதி வேறுபாடுகளும் இப்படித்தான். சாதி வேறுபாடு ஓரளவு குறைந்து இருப்பினும் சமூகம் வேறுபாடே இல்லாத ஒன்றாக இன்னும் ஆகவில்லை. ஆனால், சாதியை அடிப்படையாகக் கொண்ட சமூகத் தகுதிக்கு ஆதரவு குறைந்து வருவதைக் காணவே செய்கிறோம். இன்றைய இந்தியச் சமூகத்தில் காணக் கூடிய பெரும் மாறுதல் இது என்னலாம்.

ஒருவனிடம் சமூகம் எதை எதிர்பார்க்கிறது எனின், அவன் சமூகத்துப் பொதுநலனுக்கு எதைச் செய்ய முடியுமோ அதையே எதிர்பார்க்கிறது என்றுதான் சொல்லவேண்டும். மனிதனையும் அவன் செய்யும் தொழிலையும் மதித்து அவனுக்கு ஒரு தகுதியைத் தந்து அவனுக்கும் சமூகத்துக்கும் ஒரு நல்ல தொடர்பை உண்டாக்கக் கூடியதாக இன்றைய சமூகம் வளர்ந்து வருகிறது. இப்படித்தான் நடக்கவேண்டும், இதைத்தான் நம்மிடம் நம் சமூகம் எதிர்பார்க்கிறது என்று தெரிந்து நடப்பதால், ஒரு சமூகம் இடர்ப்பாடின்றி நல்வளர்ச்சி பெற முடிகிறது. அப்படி நடப்பது ஒருவர்க்குச் சற்று எளிதும்கூட. எடுத்துக் காட்டாக, தெரு வழியே ஒருவர் இடப்புறமே செல்வதால் ஒருவரை ஒருவர் மோதாமல் இடர்ப்பாடின்றி அனைவரும் அவ் வழியைப் பயன்படுத்த முடிகிறது. அப்படியின்றி அவர் பிறரைப் பற்றிச் சிறிதும் கவலை கொள்ளாமல் எப்படி யெல்லாமோ சென்றால் பிறருக்கு மட்டுமல்ல, அவருக்கே அவர் ஊறு செய்து கொள்கிறார் என்பது விளங்காத ஒன்றன்று. எனவே சில வழக்க ஒழுக்கங்கள், மரபுகள், (*traditions*), சமூகக் கட்டுப்பாடுகள் (*social regulations*) எல்லாம் பொதுவாக ஒருவரையும், பலரையும் வாழ்விக்கக் கூடியனவாகவே உள்ளன என்னலாம். என்றாலும் கால வளர்ச்சிக்குத் தக்கவாறு வளர்ச்சி எவரிடமும் காண முடியாத காரணத்தால் அகற்றப்பட வேண்டியவை அகற்றப்படாமலும், சேர்க்கப்பட வேண்டியவை சேர்க்கப்படாமலும் பழமைக்கும் புதுமைக்கும், எதிர்ப்பு

உண்டாகி, இவ்வெதிர்ப்பே புரட்சி என்ற பெயரையும் ஏற்கிறது.

சட்டம் என்பது மட்டும் என்ன? ஒருவரிடம் சமூகம் எதை எதிர்பார்க்கிறதோ அதை அவர் செய்யாமல் அதற்கு மாருக ஒன்றைச் செய்தால் அச்சமூகத்துப் பொது உள்ளம் (*common conscience*) எப்படியோ, அப்படியே அவரைத் திருத்தவோ கட்டுப்படுத்தவோ முனையும் ஒரு முயற்சியே சட்டம் ஆகிறது அல்லவா? ஒரு குடும்பத்தில் இச்சட்டத்தைக் காணலாம்; ஒரு கூட்டத்தில் இச்சட்டத்தைக் காணலாம்; ஒரு சமூகத்தில் இச் சட்டத்தைக் காணலாம். ஆனல் பெருமளவில் எல்லோருடைய நலனும் காக்கப்பட வேண்டி ஒரு சமூகத்துப் பெரியவர்கள் தம்மிடம் இருத்திக் கொண்டுள்ள ஆட்சித் திறம் ஒன்றே பலரையும் கட்டுப்படுத்தப் பயன்படுத்தப்படுகிறது. எனவே சட்டம் என்பது ஒரு நாட்டின் ஆட்சி பெற்றுள்ள ஆதிக்கத்துப் பயன் என்னலாம்.

மிக எளிய சமூகங்களில் (*simplest societies*) அரசியல் அமைப்புக்களே இல்லை; ஒரு சமூகத்துப் பொது உணர்ச்சி அல்லது பொதுக் கட்டளையைத் தெரிவிக்க வல்ல ஓர் ஆட்சி முறை இல்லாமலே காணப்படுகின்றது. அந்தமான் தீவுகளில் பிறந்து வாழ்ந்து வருகின்றவர்கள் சிறுசிறு கூட்டங் களாகக் காணப்படுகின்றனரே தவிர, அவர்களுக்கு ஒரு தலைவரோ, அமைப்போ, சட்டமோ, ஆட்சி முறையோ காணப் படவில்லை. ஒருவர் தவருக நடந்து கொண்டால், அவரை அவர்கள் அணுகாமல் விட்டுவிடுகின்றனர். சமூகத்துக் கட்டளை என்றோ, அக்கட்டளையை அச்சமூகத்து மக்கள் ஏற்கச் செய்கிறவர் என்றோ காணப்படவில்லை. இப்படிப்பட்ட சமூகத்தில் அரசியல் அமைப்பு இருப்பதில்லை; ஆட்சிக்கு உட்பட்ட ஒரு பகுதியாகவும் இருப்பதில்லை. ஆனல் சில பழங்குடி களிடையே இவ்வகை அரசியல் அமைப்புக்களைக் காணலாம்; தலைவன் என்றும், கட்டளை என்றும், ஆட்சிக் குழு (*council*) என்றும் காணலாம். தலைவர்களின் முடிவை அப்பழங்குடிகள் ஏற்று நடப்பதும் காணலாம்.

தற்காலத்தில் வளர்ச்சி பெற்ற சமூகங்களில் பல சிக்கலான முறைகளைக் காண்கிறோம். இம்முறைகளே சமூகம் இயங்கக் காரணமாகவும் உள்ளன. தனிப்பட்ட ஒருவருடைய செயல் பலருடைய வாழ்க்கை முறைகளால் கட்டுப்படுத்தப்படுகிறது. இச்செயலுக்கே சட்டம்செய் மன்றங்களும் (*legislatures*), சட்ட மன்றங்களும் (*courts of law*), செயலகங்களும் *executives*) உள்ளன. சட்டத்தைச் செய்து, அதைச் சமூகத்துள் புகுத்தி, புகுத்தப்பட்ட அச்சட்டத்துக்கே விளக்கம் தந்து, அதைப் போற்றவே பலர் உழைக்கின்றனர். சட்டம் ஒரு சமூகத்து வழக்க ஒழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டதாகச் கருதப்படினும், அவ்வக் கால மாறுதலுக்கு உட்பட்டு மாற்றம் பெறக்கூடியதாகவே உள்ளது. சமூக இயக்கத்துக்குச் சட்டம் பெரிதும் பயன்படுகிறது.

சட்டம் ஒன்றே அல்லது மனச்சாட்சி ஒன்றேகூட ஒருவரை நல்வழிப்படுத்துவதில்லை. உலக நிகழ்ச்சிகளுக்கு அடிப்படைக் காரணமாக இருக்கும் பரம்பொருள் மனிதனின் ஒவ்வொரு செயலையும் நன்கு கண்டே அதற்கொப்ப அவனுக்கு நன்றும் தீதும் தந்து, புகழவும் இகழவும் செய்கிறது என்ற எண்ணம் ஒருவரை நல்வழியில் கொண்டு விடுகிறது. நல்லது போற்றலே மதம் என்று சுருங்கச் சொல்லலாம். மதத்துக்கு அடிப்படையும் உட்கருத்தும் இந்நல்லது ஒன்றே என்னலாம். நீதிகளின் கட்டன்று (*bundle of morals*) மதம். நல்வழிக்குத் தூண்டுகோல் மதம் என்றால் பொருந்தும். எனவே இம்மதம் தொல் சமூகத்திலும் தற்காலச் சமூகத்திலும் மக்களை நல்வழிப் படுத்தும் ஒரு நல்லமைப்பாகவே இருந்து வந்திருக்கிறது. உலக மக்கள் அனைவரும் நன்மையை நாடியே மதத்தை வளர்த்தனர். சமூக நல்லமைப்புக்கு முதலில் ஏற்பட்ட வழிகாட்டி மதம் என்னலாம்.

சமூகம் இயங்கக் காரணமாக இருப்பவை உழைப்பும் ஒழுக்கமும் என்று கண்டோம். இவ்வுழைப்பும் ஒழுக்கமுமே காலத்துக்குக் காலம் மாறுகின்றன என்றும் கண்டோம். இம் மாற்றத்துக்குக் காரணம் என்ன? வளர்ச்சி என்றுதான் சொல்ல வேண்டும். மனிதன் வளர்கிறான். அவனுடன் அவன் தேவைகளும் வளர்கின்றன. இத்தேவைகளை அவன் எங்குப் பெறுகிறான்? சமூகத்தில் அல்லவா? அச்சமூகம் அவனுடைய தேவைகளை நிறைவுபடுத்தவே வளர்கிறது. இப்படி வளர்ந்த சமூகம், அதன் முன் காலத்தினின்றும் (*time before improvement*) வேறுபடவே செய்கிறது.

# 8. இந்தியக் கிராமங்கள்

(*Indian Villages*)

ஏறத்தாழ அரை மில்லியன் கிராமங்களைக் கொண்ட நம் நாட்டில் ஒரு சில கிராமங்களைக் கண்டு, இந்தியக் கிராமத்தின் அன்றைய நிலையையும் இன்றைய நிலையையும் திட்டமாகவோ, அல்லது பொதுவாகவோ சொல்லுதல் சரியாகாது எனினும், இந்தியக் கிராமங்களின் மேலமைப்பு (*super structure*) ஒருவாறு விளங்கும். கிராமங்களை நீக்கிப் பார்த்தால் இந்தியா ஒரு வெற்றிடம் என்றேகூடச் சொல்லலாம். எனவேதான் காந்தியார்கூடக் கிராம முன்னேற்றத்துக்குப் பாடுபட்டார்; ஒரு கிராமம் தனித்ததொரு முழுக் குடியரசாக விளங்கவேண்டும் என்று விழைந்தார். படித்தவர்கள், நாட்டுக்குச் சேவை செய்ய விரும்புகின்றவர்கள், கிராமங்களைப் புறக்கணிக்காமல், அவற்றின் நலனே இந்தியாவின் நலன் என்று கொண்டு உழைப்பின் பெரிதும் நலம். குடிசைத் தொழிலுக்கு இருப்பிடமாகிய இக்கிராமங்களின் அமைப்புக் கெடாமல் வேண்டுவன யாவும் அவை பெற்றுப் பயனடையச் செய்வதே இந்தியர்களாகிய நாம் எப்படியும் செய்ய வேண்டுவது. மானிடவியலாரும் சமூகவியலாரும் ஒத்துழைப்பின் இந்தியக் கிராமங்கள் சிறக்கும். எனவே மானிடவியலார் கண்ட இந்தியக் கிராம அமைப்பை, கிராம நிலையைப் பார்ப்போம்.

முதலில் தஞ்சாவூர் மாவட்டத்தின் ஒரு கிராமத்தைப் பார்ப்போம். தமிழ் நாட்டின் 'நெற்களஞ்சியம்' தஞ்சாவூர்; தென்னை நிறைந்த இடம். இங்குள்ளோர் பேசும் மொழி தமிழ். சேலத்தில் 1934-இல் கட்டப்பட்ட மேட்டூர் அணை இங்கு விளையும்

பயிர்களுக்குப் பெரும்பாலும் கோடையில் நீர் பாய்ச்ச உதவுகிறது.

இங்குள்ள இந்துக்களிடையே பிராமணர், பிராமணரல்லாதார், ஆதித்திராவிடர் என முப்பெரும் பிரிவுகளைக் காணலாம். 24,111 கிராமங்களுள் ஏறத்தாழ 900 கிராமங்களுக்குச் சொந்தக்காரர் பிராமணரே.

பிராமணரல்லாதாரில் மேல் குலத்தவர் என்றும் கீழ்க் குலத்தவர் என்றும் இருபிரிவினர் காணப்படுகின்றனர். இம்மேல் குலத்தவர் வழிவழி நிலம் பெற்றவர்களாகவும், அவற்றைப் பிராமணர்களைப் போலவே தம் ஆட்சிக்குட்பட்டவைகளாக வைத்திருப்பவர்களாகவும் உள்ளனர். கீழ்க்குலத்தவருக்கு நிலம் ஏதும் சொந்தமில்லை. அவர்கள் மேல்குலத்தவருக்குப் பணிந்து, உழைத்து, ஊதியம் பெற்று வாழ வேண்டியவர்கள். இவ்விரு பிரிவினரில் வேளாளர் என்றும் கள்ளர் என்றும் உள்ள இரு பகுப்பினரும் மேல் குலத்தவராவர். சோனர், மூப்பர், படையாச்சிகள், அகம்படியர், நாடார், ஆண்டிகள், குயவர், கருமார், பொற்கொல்லர், கொத்தர், தச்சர் யாவரும் கீழ்க்குலத்தவராவர். கடை நான்கு சாதியினரும் ஒருவருடன் ஒருவர் திருமண உறவு கொள்வது உண்டு. இவர்களுக்குக் கீழாக அம்பலக்காரர் (*Barbers*), செம்படவர், குறவர் என்று உள்ளனர். ஆதித்திராவிடர் என்போர் மிகத் தாழ்ந்த பிரிவினர். பள்ளர், பறையர், சக்கிலியர் இவ்வாதித் திராவிடக் கூட்டத்தினரே.

தஞ்சாவூர் காவிரி சூழ்ந்த ஒரு செழுமையான இடம் என்பதால் மட்டும் அது உயர்ந்துவிடவில்லை. இவ் விடத்தில் தான் பத்துப்பதினோராம் நூற்றுண்டுகளில் சோழர்களால் கட்டப்பட்ட இந்தியாவிலேயே மிகப் பெரிய, மிகச் சிறந்த கோவில்கள் உள்ளன. ஸ்ரீ ஆதிசங்கராசாரியாரின் அத்வைத மதப் பிரசாரத்துக்கும், சங்கீதக் கலைக்கும், நாட்டியக் கலைக்கும் சிறந்த ஓர் இடமாக விளங்குவதும் தஞ்சாவூர். தஞ்சாவூர்ப்பச்சரிசி, தஞ்சாவூர்ப் பொம்மை, தஞ்சாவூர் நாட்டியக்காரி, தஞ்சாவூர்ப் பிராமணன் என்றெல்லாம் நாம் அடிக்கடித் தஞ்சாவூரை அடை

மொழி கொடுத்துப் பேசுவதிலிருந்தேகூட அவ்வூரின் சிறப்பை நன்கு உணரலாம்.

இப்படிப்பட்ட தஞ்சாவூரில் கும்பம்பேட்டை என்ற ஒரு பிராமணக் கிராமம் உண்டு. இங்குள்ள பிராமணர்கள் நிலங்கள் வைத்திருப்பவர்கள். சிலர் வைத்திருந்த நிலங்களை விற்று விட்டனர் என்றாலும் பெரும்பாலோர் நிலச்சொந்தக்காரர்களே. பிராமண வீதிக்கு அருகே சில பிராமணரல்லாதார் இல்லங்கள் கொண்ட தெருக்கள் உள்ளன. வேளாண்மை பெரும்பான்மை நிலம் இல்லாத் தொழிலாளர்களாலேயே செய்யப்படுகிறது. கிராமத்துக்குச் சற்றுப் புறம்பே விளைநிலங்களுக்கு அப்பால் வசிக்கும் பள்ளர் என்ற ஆதித்திராவிடப் பகுப்பைச் சேர்ந்தவர்களே பெரும்பாலும் நிலத்தில் உழைக்கின்றனர். இப் பேட்டையில் பறையர்கள் இல்லையெனினும் அடுத்த கிராமத்துக் குடும்பங்களில் இரண்டைக் கொண்டு இறந்த மக்களையும் விலங்குகளையும் இவ்வூரார் அப்புறப்படுத்துகின்றனர்.

ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளுக்கு முன்வரை இக் கிராமத்துப் பிராமணக் குடிகளே எல்லா நிலங்களுக்கும் சொந்தக்காரர்களாகவும், இக்கிராமப் பொருளாதார நிலையைக் காத்தவர்களாகவும், இங்குள்ள ஆதித்திராவிடர்களைத் தம் பிடியில் வைத்திருந்தவர்களாகவும் இருந்தனர். அறுபது ஆண்டுகளுக்கு முன் பிராமணரல்லாதார் எவரும் இங்கு நிலம் வைத்திருந்ததில்லை; இங்கிருந்த பிராமணர்களிடம் நிலங்களை வாடகைக்குப் பெற்றோ அல்லது அப்பிராமணர்களுக்குச் சிறப்பாகச் சில வேலைகள் செய்தோ வாழ்ந்தனர். கோனார் என்னும் பிராமணரல்லாதார் பகுப்பினர் பிராமணர்களிடமிருந்து நிலங்களை வாடகைக்குப் பெற்றுப் பயிர் செய்து விளைச்சலில் ஐந்தில் ஒரு பங்கைச் செய்த வேலைக்கு ஈடாக வைத்துக்கொண்டு மிகுந்ததை நிலச் சொந்தக்காரர்களுக்குக் கொடுத்தனர். சிலர் மாடுகள் மேய்த்தும், தோட்டவேலை செய்தும் பிராமணர்களுக்கு உதவியாக இருந்தனர். கிராம நிலத்தில் மூன்றில் இரண்டு பங்கு, பிராணர்களுக்காக ஆதித் திராவிடர்களாலேயே பயிரிடப்பட்டது. இப்பணியாட்களுக்குப் பண்ணையாட்கள் என்பது பெயர். தினமும் இவர்களுக்கு நெல்

கூலியாகக் கொடுக்கப்பட்டது. திருமணம், பிறப்பு இறப்பின் பொழுதும், கோடையில் விளைச்சல் அற்ற சில மாதங்களிலும் இப் பண்ணையாட்களுக்குப் பிராமணர்கள் உதவி வந்தனர். எனவே இவர்கள் எப்பொழுதும் பிராமணர்களுக்குக் கடமைப் பட்டே இருந்தனர்.

இப்பொழுது சில நிலங்கள் பக்கத்து ஊர்க்காரர்க்கு விற்கப் பட்டுவிட்டன. மலேயாவில் பணம் ஈட்டிய சில முஸ்லிம்கள் கூடச் சில நிலங்களை வாங்கிவிட்டனர். அவரவர்களுக்குக் கொடுக்கப்பட்ட வேலைபோக இப்பொழுது பலவிதங்களில், பிராமணரல்லாதார், அதாவது தேநீர்க் கடை, மளிகைக் கடை போன்ற துறைகளில், பணம் ஈட்டியும் வாழ்கின்றனர். எனவே இப்பொழுது சிலரே பிராமணர்களை அண்டிப் பிழைக்கின்றனர் என்னலாம். முன்போல் அல்லாமல், எல்லாச் சாதிக்காரர்களும் பேரியங்கிகளில் (*buses*) செல்வதும், பேசும்படத் துறையில் புகுவதும், துணிமணிகளைத் தாமாகவே கடைகளில் வாங்கிக் கொள்வதும் இப்படிப் பலமாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன. எனவே இங்கு அன்றைய கிராமப் பொருளாதார நிலை (*Rural economy*) போக, இன்று நகரப் பொருளாதாரம் (*urban economy*) பரவுவதைக் காணலாம். இன்றுள்ள இந்தியக் கிராமம் எதையும் அன்றிருந்த நிலையில் பார்க்க இயலாது.

ஆங்கிலேயரின் ஆட்சிக்கு முன் தஞ்சாவூர்க் கிராமம் ஆட்சிக்கு உட்படாத தனித்த ஓர் ஊர்ப் பகுதியாகவும், வேண்டுவன யாவும் பெற்றதாகவும் இருந்தது. இக்கிராமத் தலைவரில் பிராமணர்க்குள் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு தலைவன் இருந்ததில்லை. தந்தை வழிக் குடும்பங்களில் முதியவருடைய சொல்லைக் கேட்டே பிறர் நடந்தனர். கீழ்ச்சாதிக்காரர்கள் கண்டு ஏளனம் செய்யாமல் இருக்கவே இவர்கள் நீதி மன்றங் களுக்குச் சென்றதில்லை. பிராமணரல்லாதார், ஆதித்திராவிடர் இவர்களுடைய கிராமச் சச்சரவுகளை நீக்கவோ, இவர்களைத் தண்டிக்கவோ பிராமணர்கள் உரிமையுடையவர்களாயிருந்தனர்.

பிராமணரல்லாதாரில் ஒவ்வொரு தெருவிலும் உள்ள திருமணம் ஆனவர் தம் தனிப்பட்ட சச்சரவுகளை முடித்துவைக்க

அவ்வத் தெருவில் அவரவர்க்கென ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்தனர். பிராமணரல்லாதார் இரு சமவுரிமைத் தலைவர்களையும், பள்ளர் ஒரு தலைவனையும், ஒரு பொருளாளனையும், குற்றவாளியைச் சபைக்குக் கொண்டு வரவோ அல்லது இறப்பு, திருமணம் போன்ற செய்திகளைப் பிறருக்கு அறிவிக்கவோ ஒருவனையும் தேர்ந்தெடுத்தனர். பிராமணரல்லாதாரிடையே தண்டனையால் வசூலிக்கப்பட்ட பணம் அவ்வூர்க் கோவில் உண்டிக்குச் செலுத்தப்பட்டு ஆண்டுதோறும் நிகழும் கிராம தேவதை விழாவுக்கு அவர்களுடைய தலைவர்களால் உதவிப் பணமாகக் கொடுக்கப்பட்டது. பள்ளரில் இப்படி வசூலிக்கப்பட்ட பணம் தம் ஊர்த் தேவதையின் தங்கையெனக் கருதப்பட்ட ஒரு தேவதையின் பூசைக்கு வைக்கப்பட்டது,

கிராம ஒற்றுமையை நோக்குங்கால், பிராமணர்களே எவ்விதச் சண்டை சச்சரவுகளும் தீர்த்துவைப்பது மட்டுமல்லாமல் கிராமக் கட்டுப்பாட்டுக்குத் தலைமை வகித்தவர்களாகவும் காணப்பட்டனர் என்றே சொல்ல வேண்டும். ஏனெனில் இன்று இக்கிராமத்துப் பிராமணர்களின் பொருளாதார நிலை அன்றிருந்ததைப் போலில்லை. மற்றச் சாதியினரின் பொருளாதார நிலையும் அன்றிருந்ததைப் போலில்லை. மற்றச் சாதியினரின் பொருளாதார நிலை உயர்ந்தும் வேலையாட்களின் பணிவு குறைந்தும் வருகிற காரணத்தால் இக்கிராமத் தோற்றமே மாறிவிட்டது என்னலாம், இப்படி மாறிவிட்டமைக்குக் காரணம் அரசியல் கட்சியாரின் சொற்பொழிவுகளும் இந்தியா தன்னுரிமை பெற்ற பிறகு ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்பட்ட பேச்சுரிமை, செயலுரிமையும் என்றே சொல்லலாம். இச் சொற்பொழிவுகளும் உரிமையுமே இம் மாற்றத்திற்குக் காரணம் என்றுகூடச் சொல்வதற்கில்லை. ஏனெனில் கிராம மக்கள் சிறந்த கல்வியைப் பெருதவர்களாயிருந்திருக்கின்றனர்; எனவே ஒன்றைச் செய்ய உள்ள உரிமையை மட்டுமே மனத்தில் கொண்டனரே தவிர, அதை ஏன் செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும், பிறரை மதித்துப் பிறர் உரிமையையும் மதித்து வாழ்வது எப்படி என்பதெல்லாம் தெரிந்துகொள்ளாமையே சண்டைக்கும், சச்சரவுக்கும், கட்டுப்பாடின்மைக்கும், கூட்டுறவின்மைக்கும் அடிப்படைக் காரணம்

என்னலாம். இத்துடன், ஒரு காலத்தில் உயர்ந்திருந்தவர்கள் இக்காலத்தும் அப்படியே கண்மூடித்தனமாகக் காலப்போக்கை மதியாமல் நடந்துகொள்வதும் ஒரு காரணம் என்னலாம். இக் குறைகளை யெல்லாம் நீக்கவே அரசியலார் கட்டணமற்ற கல்வி யைப் புகுத்தி நம் நாட்டைக் கல்லாதவர்கள் இல்லா நாடாக்க முனைந்திருக்கின்றனர்.

இக்கும்பம்பேட்டைக் கிராமத்துக் கட்டுப்பாட்டை விளக் குவதுபோல் அக்கிராமத்துப் பிராமணரல்லாதார் தெருக்கள் இரண்டின் இடையே ஊர்த்தாச்சியம்மன் என்ற ஓர் அம்மன் கோவில் இருக்கிறது. அம்மை, வாந்திபேதி, மலடுத்தனம் போன்றவற்றுக்குக் காரண தேவதையென இவ்வம்ம னைக் கொண்டு ஆண்டுதோறும் பிராமணரல்லதார் கொண்டாட, பிராமணர்களும் இவ்வம்மனை வணங்குகின்றனர். எனினும் சிவன், விஷ்ணுவுக்கென உள்ள இரு கோவில்களுக்கே பிராம ணர்கள் பெரும்பாலும் செல்கின்றனர். பள்ளர் தமக்கென ஒரு காளியம்மன் கோவிலை அவர்களுடைய தெருக்களின் முதலில் வைத்திருக்கின்றனர். இவ்வம்மனுக்கும் ஆண்டு தோறும் சிறப்பாக வழிபாடு நடத்தப்படுகிறது. சித்திரை மாதம் இது நடைபெறுகிறது. பிராமணரல்லாத பூசாரி ஊரைச் சுற்றி மணியடித்துக்கொண்டு செல்லுவார். இம்மணி யோசை கேட்ட நாளிலிருந்து 17 நாட்களுக்கு இவ்வூரில் தூய்மை யற்ற செயல் எதுவும் எவரும் செய்யக்கூடாது. கணவன் மனைவிகூட ஒன்று சேரக்கூடாது. இந்த நாட்களில் இரவில் அம்மன் ஊர்வலம் நிகழும். இவ்வூர்வலம் எல்லாத் தெருக்க ளுள்ளும் செல்லும். அவ்வச்சாதியினரின் பழக்க வழக்கங்களுக்கு ஒப்ப இவ்வம்மனுக்குக் கறி, காய், பழம், நறுமணப் பொருள், உணவு, ஆடுகள் இப்படிக் கொடுக்கப்படும். இவ்வம்மன் திரு விழா இவ்வூரினரின் கூட்டுச் செயலுக்கும் கட்டுப்பாட்டுக்கும் ஓர் எடுத்துக்காட்டாக இருந்தது.

இவ்வூரில் பிராமணர்களும் பிராமணரல்லாதாரில் பெரும் பாலோரும் ஆதித் திராவிடர்கள் வசிக்கும் தெருக்களுக்குச் செல்ல மாட்டார்கள். ஆதித் திராவிடர்கள் பிராமணரல்லாதார் தெருக்களில் சென்றாலும் அவர்கள் வீடுகளுள் நுழையமாட்

டார்கள். பிராமணர்கள் பிராமணரல்லாதார் வீடுகளுள் நுழைவதும் அவர்களுடைய மனைவியர்களுடன் உறவு கொள்வதும் உண்டு. ஆனால் அவ்வீடுகளில் உண்ணமாட்டார்கள். உறவு முடிந்ததும் குளித்துவிட்டுத் தம் வீடு செல்வர். பிராமணர்கள் வைத்துள்ள உணவு விடுதிகளில், பிராமணர் பிராமணரல்லாதார்க்கென இரு வேறு இடங்கள் உண்டு. பிராமணரல்லாதார் பிராமணர்கள் வீடுகளுள் முன்பெல்லாம் புகாமலே இருந்தனர். இப்பொழுது அப்படி இல்லை. ஒருகாலத்தில் செருப்பு அணிந்து கூட அவர்கள் பிராமண வீதிகளில் செல்லக்கூடாதென்றிருந்தது. பிராமணர் பிராமணரல்லாதார் பெண்களுடன் உறவுகொண்டு, அதற்கப்புறம் நீரில் மூழ்கித் தம் வீட்டுக்குச் செல்வாரேயாயினும், ஓர் ஆடவன் ஓர் ஆதித்திராவிடப் பெண்ணுடன் உறவு கொண்டால் அவனை அச்சாதியிலிருந்து நீக்கிவிடுவர். அப்படியே வேறுசாதியினன் ஒரு பிராமணப் பெண்ணினிடம் உறவு கொள்ளினும் அச்சாதியினின்றும் தள்ளப்படுவான். ஆனால் இப்பொழுது பள்ளர் பெண்களுடன் அநேகர் உறவு கொள்வது தெரிந்தும் கண்டிக்கப்படுகிறார்களே தவிர தள்ளப்படுவதில்லை, இவ்வாறே பிராமணப் பெண்கள் பிறசாதி ஆடவருடன் கொள்ளும் உறவை அக்குடும்பத்தினர் மறைத்துவிடுகின்றனர். பொதுவுடைமைக் கட்சியினர் ஆதித்திராவிடர்களிடையேயும் மற்றக் கீழ்ச்சாதிக்காரர்களிடையேயும் சாதிக் கோட்பாட்டையே தகர்த்துவிட்டனர் என்னலாம். இவர்கள் ஆதித்திராவிடர்களிடம் உண்ணுவதும் உறங்குவதும் உண்டு. இக்காலத்தில் பள்ளர் பறையர் ஒருங்கிருந்தே பல செயல்கள் புரிகின்றனர்.

அரசியலார் அலுவலகங்களில் தாழ்த்தப்பட்டவர்களுக்குக் கொடுத்துள்ள இடத்தாலும், காங்கிரசாரும் சாதியை ஒழிக்கப் படும் பாட்டாலும், 1947இல் கொண்டுவரப்பட்ட கோவில் நுழைவுச் சட்டத்தாலும் (*Temple Entry act of 1947*), கட்டண மற்றக் கல்வித் திட்டத்தாலும், பொதுவில் பொருளாதார நிலை மாற்றத்தாலும் இவ்வூரின் பழைய சமூக நிலை பெரும்பான்மை மாறிவிட்டது என்றே சொல்லவேண்டும். எனவே இத்தஞ்சாவூர்க் கிராமத்துப் பழைய வரலாற்றையும் புது மாற்றத்தையும் கொண்டே இந்தியக் கிராம வாழ்க்கையைக் கணக்கிடக்கூடும்.

தென்னிந்தியாவின் இன்னொரு கிராமத்தைப் பார்ப்போம். ராம்புரா என்ற கிராமம் மைசூரில் உள்ளது. 1948இல் இக் கிராமத்தின் மக்கள் எண்ணிக்கை 1528. இங்குப் பல சாதி யினர் உளர். இங்குள்ள ஒவ்வொரு சாதியினரும் ஒவ்வொரு தொழிலைச் செய்கின்றனர். வழி வழி செய்தொழிலை ஒரு சாதியினர் செய்துவந்தாலும் பிற தொழில் செய்ய விலக்கில்லை. சிலர் அப்படிச் செய்வதை விரும்புவதில்லை. அவரவர் செய் தொழிலைச் செய்வதன் மூலம் தொழில் ஒழுக்கம் உண்டாவதே இதற்குக் காரணம் என்னலாம். ஒரு சாதியினன் ஒன்றுக்கு மேம்பட்ட தொழிலையும் வழிவழி செய்து வருபவனாக இருக் கலாம்; மீனவன் மீனைப் பிடிப்பதும் அதை விற்பதும் போல அதாவது தொழில் பங்கீட்டு முறை (*division of labour*) இவர் களில் வளர்ச்சியடையவில்லை என்று சொல்லலாம். பார்ப்பனர் களிலிருந்த தீண்டப்படாதவர்கள் வரை பயிர்த் தொழிலை விட்டா ரில்லை. பார்ப்பனர்கள் தெய்வ நிகழ்ச்சிகள் தவிர பிறவற்றில் ஈடுபடக்கூடாது என்று இருப்பினும் வேளாண்மை எவர்க்கும் உரிய ஒரு தொழிலாகவே இருந்தது என்னலாம் (மனு : X 84).

ராம்புரா கிராமத்தில் பாதிக்கு மேம்பட்டவர்கள் பயிர்த் தொழில் செய்பவர்களே. இவர்கள் நிலங்களை உடைய வேளா ளர்களாகவும், நிலங்களைக் குத்தகைக்குப் பெற்ற உழவர்களா கவும், நிலங்களில் உழைக்கும் குடியானவர்களாகவும், நிலங் களின் பலவகை வேலைகளையும் செய்யும் பணியாட்களாகவும் இப்படிப் பலவாக உள்ளனர் என்னலாம். ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு முன் பார்ப்பனர்கள் கூடப் பேரளவு நிலங்களை உடையவர்களாக இருந்தனர்.

பார்ப்பனர்களும் லிங்கதாரிகளுமே இவ்வூர்த் தெய்வ நிகழ்ச் சிகளை நிகழ்த்துபவர்கள். ஆனால் இவர்கள் ஒருவர் கோவிலுள் இன்னொருவர் நுழைவதில்லை. லிங்கதாரிகளை லிங்கதாரிகளே தம் வீட்டில் பிறப்பு முதலிய காரியங்களுக்கு அழைப்பர். பார்ப்பனரல்லாதாரில் சற்று உயர்ந்த சாதியினர் பார்ப்பன ரையே இந்நிகழ்ச்சிகளுக்கு அழைக்கின்றனர். வழிபாட்டின் நிகழ்ச்சிக்கென்று எந்தச் சாதியினின்றும் ஒருவனைத் தோற்று விக்கலாம். இவ்வூரில் பெரும்பாலோர் மாரியம்மனை வணங்கு

கின்றனர். கும்பம்பேட்டையில் கண்டதுபோலவே இங்கும் இவர்கள் அம்மை போன்ற நோய்களைத் தவிர்க்கவே இவ்வம்மனை வணங்குவதாகத் தெரிகிறது.

கருமார், குயவர், வண்ணார், அம்பட்டர் ஆகியவர்களுக்கு ஆண்டுக்கொருமுறை, எவர்க்கு அவர்கள் வேலை செய்கின்றனரோ அவர்களால் அறுவடைக் காலத்தில் நெல் கொடுக்கப்படுகிறது. கருமாரில் மடாசாரி என்றும் குலாசாரி என்றும் இரு பிரிவினரைக் காணலாம். 1948-ல் 39 முஸ்லிம் குடும்பங்களே இவ்வூரில் இருந்தன. இவர்களுள் பதின்மூன்று குடும்பத்தினர் பயிரிட்டும், பதினைந்து குடும்பத்தினர் உழைத்தும் வாழ்ந்தனர். மாங்காய் வணிகம் இவர்கள் கையில் இருந்தது என்னலாம். இவ்வூரில் பண்டமாற்றே சிறந்திருந்தது. கோவில் வழிபாடு செய்பவர்க்கும் கிராம வேலையைத் தலைமையிடத்திருந்து பார்ப்பவர்க்கும் நிலம் கொடுத்து வைத்தனர். கிராமத்து வேலையாட்களும் கோவில் வழிபாடு செய்கின்றவர்களும் நிலங்கள் பெற்றூர்களென்ருலும் முன்னவர் அரசியலார்க்கும், பின்னவர் பொதுமக்களுக்கும் கட்டுப்பட்டவர்கள். கிராமத்துத் தலைவனுக்கும்கணக்கனுக்கும் நிலத்திலிருந்தே தானியம் மறைமுகமாகக் கொடுக்கப்பட்டது. தானியம் கொடுத்தல் நிலம் கொடுத்தலைவிட ஒருபடி தாழ்ந்ததாகக் கருதப்படினும் வாடகை, வள்ளன்மை, உழைப்பு இவற்றுக்கெல்லாம் தானியமே சில சமயங்களில் கொடுக்கப்பட்டது. ஆனுல் இப்பொழுது பணம் கொடுக்கும் பழக்கமே மிகுந்து வருகிறது என்னலாம்.

கிராமப் பஞ்சாயத்து மூலம் இங்குச் சச்சரவுகளைத் தீர்த்துக் கொள்வது நலம் பயக்கக்கூடியதாகவே உள்ளது. இன்று அரசியலார் புகுத்தி உள்ள பஞ்சாயத்து முறை இந்தியக் கிராமவாசிகளுக்குப் புதிய ஒன்றன்று. கிராமவாசிகளிடையேயோ, அவர்களின் குடும்பங்களிலேயோ உண்டாகும் மனத்தாங்கல்களையும் பெருஞ் சச்சரவுகளையும் அக்கிராமப் பஞ்சாயத்தாரைவிட உணர்ந்து தீர்த்துவைக்கக்கூடியவர்கள் இருக்க முடியாது. பட்டணங்களில் உள்ள பெரிய நீதிமன்றங்களில் பெரும் வழக்கறிஞர்கள் எப்படியெப்படியோ வேற்றுமொழியில் பேசி, நீதிபதியின் முடிவைப் பெறுவதைவிடக்

கிராமப் பஞ்சாயத்தில் அக்கிராம வழக்க ஒழுக்கங்கள் எல்லாம் தெரிந்த வழக்காடிகளுக்குத் (*litigants*) தெரிந்த சில பெரியவர்கள் தலைமையில் ஒரு முடிவைப் பெறுவது சிறந்த ஒன்றே என்னலாம். இரு வழக்காடிகளைக் கட்டுப்படுத்தி அக்கட்டுப்பாட்டுக்கு அடிப்படையாக அவ்விருவருக்கும் பொதுவில் இருந்து செயலாற்றும் தன்மையை ஒரு கிராமத்து மக்கள் பெறவேண்டும் என்றே காந்தியார்கூட இவ்வகைக் கிராமப் பஞ்சாயத்தை விழைந்தார்.

வேளாண்மை செய்பவரில் மூத்தவரே நீதி வழங்குகின்றனர். இவர்கள் தம் சாதியினர்க்கேயன்றிப் பிற சாதியினர்க்கும், அவர்கள் விழைந்தால், நீதி வழங்குகின்றனர். இவர் பிறசாதியினர் வழக்கில் தலையிடும்பொழுது அச்சாதியினரின் கோட்பாடுகளை மதித்தே எதையும் முடிவு செய்கின்றனர். எனவேதான் இவர் களிடம் மற்றவர்களுக்குப் பெரும் நம்பிக்கையும் பற்றும் உண்டு. இதனல் பார்ப்பனர்கள் தீண்டப்படாதவர்கள், முஸ்லிம்கள் ஆக எல்லோருமே இவர்களின் முடிவை நாடுவது குறிக்கத்தக்கது.

ஒரு சாதிக்குள் மட்டுமே பலரும் சேர்ந்து உண்கின்றனர். பிற சாதியினருடன் கலந்திருந்து உண்ணுதல் ஆடவரிடையே இருப்பினும், மகளிரிடையே இல்லை. கறிகாய்களை உயர்ந்த உணவாகவும் இறைச்சி வகைகளையும் மதுவையும் தாழ்ந்த உணவாகவும் இவர்கள் கருதுகின்றனர். லிங்கதாரிகளும் பிரா மணர்களைப் போலவே காய்கறிகளையே உண்கின்றனர். இவர் களில் சிலர் பிராமணர்கள் சமைத்த உணவையும் உண்பதில்லை. பிராமணர்கள் இவர்களிடம் உண்பதும் இல்லை.

கம்மாள சாதியினர் (*smiths*) பிராமணர்களிடம் மட்டுமே சமைத்த உணவை ஏற்கின்றனர். இவர்களின் ஆடவர் லிங்க தாரிகளிடமும் ஏற்பர். ஆனல் மகளிர் ஏற்பதில்லை. இந்துக் களில் பலர் இவர்களைத் தாழ்ந்த சாதியினராகவே கருது கின்றனர். தீண்டப்படாதவர்கள்கூட இவர்களிடம் உண்பது கிடையாது. தர்ஸ்டன் என்பவர் இவர்களைப் பற்றிப் பின் வருமாறு எழுதியுள்ளமை கவனிக்க வேண்டிய ஒன்று (1909, 111:118):

'கம்மாளர் தம்மை ஆசாரி என்றும் பட்டர் என்றும் அழைக்கின்றனர். இப்பெயர்கள் பிராமணப் பெயர்களான ஆசார்யா, பட்டா என்பவற்றுக்கு நேரானவை. இவர்கள் வேதங்களைத் தெரிந்தவர்களாகவும் சொல்லிக் கொள்கின்றனர். திருமணங்களுக்கும், மற்ற எந்தக் காரியங்களுக்கும் இவர்களுடைய பூசாரிகளே வந்திருந்து நடத்தி வைக்கின்றனர். இவர்களில் பலர் மரக்கறி உணவு கொள்பவர் என்று சொல்லிக் கொள்கின்றனர். பிராமணரல்லாதார் இவர்களை நமஸ்கரிப்பதில்லை.'

இக்கிராமத்தினரில் பயிர்த் தொழில் செய்பவரும் அவர்களுடைய வேலையாட்களும் மிகவும் நெருங்கிய மனம் உடையவர்களாக இருக்கின்றனர். இருவரிடையேயும் ஒருவித நல்லுணர்ச்சி வளர்கிறது. இந்துக்களும் முஸ்லிம்களும்கூட இப்படியே பழகுகின்றனர். அறுவடைக் காலங்களிலும் நடவுக் காலங்களிலும் வேலையாட்கள் கிடைப்பது அரிது. இவர்கள் கிராமப் பற்றுடையவர்கள். மற்றக் கிராமங்களை நோட்டம் சொல்லியும் தம் கிராமத்தைப் புகழ்ந்தும் பேசுவர். இவர்கள் தம் உரிமையைக் காப்பதில் தவறுவதில்லை. எடுத்துக்காட்டாக, 1948-இல் பயிர்த் தொழில் அலுவலகத்தினர் (*agricultural department*) இங்குள்ள குளங்களில் மீன் பிடிக்கும் உரிமையை ஏலத்துக்குவிட முன்வந்தனர். இதை எதிர்த்து உடனே இக்கிராமத்தினர் அரசியலார்க்கு ஒரு பதிலனுப்பியது மட்டுமின்றி, கிராமத்தில் ஒருவன்கூட ஏலத்தில் விலைகூற முன்வரவில்லை. அதுமட்டுமல்லாமல், பக்கத்துக் கிராமத்தினரையும் அவ்வாறேயிருக்கச் செய்தனர். எனவே அரசியலார் ஒன்றும் செய்ய முடியாமல் போயிற்று.

ஏறத்தாழ ஒவ்வொரு கிராமத்திலும் மாரியம்மன் கோவில் உண்டு. இக்கோவில் பூசாரியின் நடத்தை சரியில்லையெனின் அம்மன் வேறு கிராமத்துக்குச் சென்றுவிடும் என்று அஞ்சினர். ஒவ்வொரு கிராமத்துக்கும் வழிவழித் தலைவன் ஒருவனும், கணக்கன் ஒருவனும், வேலையாட்களும், காவலாட்களும் உண்டு. இவ்வேலையாட்கள் தீண்டப்படாதவர்கள். இவர்கள் கிராமத்துக்கு உரியவர்களேயல்லாமல்

கிராமத்து மக்களுள் ஒரு சிலர்க்கு உரியவர்கள் அல்லர். பிராமணரல்லாதார் திருவிழாக்களில் பிராமணர்களுக்கும், தீண்டப்படாதவர்களுக்கும், முஸ்லிம்களுக்கும் பேரிடம் இல்லை என்னலாம். தீண்டப்படாதவர்களும் முஸ்லிம்களும் பலவித வேலைகளுக்குப் பயன்படுத்தப் படுகிறுர்கள் என்ருலும் இவர் களைச் சேர்த்து எதையும் செய்வதில்லை. அரிசி, உப்பு, மிளகாய், புளி, காய்கறிகள் முதலியவை கொடுக்கப்படுகின்றன என்ருலும் பிராமணர்களையும் அணுகி எதையும் செய்வதில்லை. எப்படியும் இக்கிராமத்தில் ஒருவித ஒற்றுமை இருந்தே வந்திருக்கிறது என்னலாம்.

தென்னிந்தியக் கிராமங்களில் இரண்டைப் பார்த்தோம். இப்பொழுது, வடவிந்தியக் கிராமங்களைப் பார்ப்போம். தென்னிந்திய வடவிந்தியக் கிராமங்களில் ஓரிரண்டையேனும் ஒருவாறு தெரிந்து கொண்டோமாளுல் பொதுவாக இந்தியக் கிராமங்களின் சமூக அமைப்பு, நாகரிகம், பண்பாடு, மாற்றம் முதலிய எல்லாம் நன்கு விளங்கும். கிராமப் பொருளாதார நிலை அல்லது சமூக நிலையைச் சரிவர தெரிந்துகொள்ள வேண்டு மாயின் பேரூர் ஒன்றையும், சிற்றூர் ஒன்றையும் இந்தியாவின் வடக்கிலும் தெற்கிலுமாக எடுத்துக்கொண்டு, அவ்வவ்வூரில் ஓராண்டுக் காலமேனும் இருந்து, அவர்களுடைய இன்றைய வழக்க ஒழுக்கங்களை நேரில் கண்டு குறிப்பெடுப்பின் பயன்தரும். பல சாதிக்காரர்களுடனும் பழகிப் பொருள் மிகப் பெற்றவன், பொருளற்றவன், மிகுந்த செல்வாக்குடையவன், செல்வாக் கற்றவன், ஆண், பெண் எல்லோரிடமிருந்தும் இறந்தகால, நிகழ்கால சமூக விஷயங்களனைத்தையும் பெற முயல வேண்டும். உண்டு அல்லது இல்லை என்ற விடை போதும் என்று எண்ணி அவ்விதக் கேள்விகளைத் திடீரென்று ஒரு கிராமத்தினனிடம் கேட்பதால் ஏறத்தாழப் பயன் ஒன்றும் இல்லை யென்றே சொல்லலாம்.

வடவிந்தியாவில் உள்ள குஜராத்துக் கிராமம் ஒன்றைப் பார்ப்போம். ராத்வனஜ் (*Radvanaj*) என்ற ஓர் ஊர் கைரா (*Kaira*) மாவட்டத்தைச் சேர்ந்தது. இங்கு ஏறத்தாழ 1500 மக்களும் 300 குடும்பங்களும் உள்ளன. சில வீடுகள் ஊரின்

உள்ளும், சில வயற்புறமும் உள்ளன. வயற்புறத்தவர்களில் பெரும்பாலோர் படன்வாடியா சாதியைச் சேர்ந்தவர்கள். இவர்களுள்ள இடத்திற்குச் சோனர் (*Sonar*) என்பது பெயர். இவர்களுக்கு ஊருக்குள்ளும் வீடுகள் உண்டு. திருமணம், திருவிழா மற்ற எல்லா நிகழ்ச்சிகளின் பொழுதும் இவர்கள் ஊருக்குள் வருவர். இவ்வூரின் நெருங்கிய பகுதியில் இவர்கள் எதிலும் தீவிரமாகப் பங்கு கொள்வதில்லை; ஊரரசியலில் (*Village politics*) தலையிடுவதில்லை என்றே சொல்லலாம்; ஊர்மக்களுடன் வீண்பேச்சுக்களில் காலம் கழிப்பதும் இல்லை. இவர்களுடைய குழந்தைகள் ஊரில் உள்ள பள்ளிகளுக்குச் செல்கின்றனரென்றாலும் ஊரில் மற்றப் பிள்ளைகளுடன் கலந்து விளையாடுவதும் இல்லை. இவர்கள் இப்படித் தனித்து இருப்பதற்குக் காரணம் இன்னதென்று திட்டமாகச் சொல்வதற்கில்லை.

இவ்வூருக்கு முகி அல்லது படேல் (*Mukhi or patel*) என்று ஒரு தலைவர் உண்டு. இவர்கள் பணம், காவல் (*Revenue and police*) இவற்றுக்கு உரியவர்களாவர். தளதி (*Talati*) என்ற கணக்கர் ஒருவரும் உண்டு. இவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் உதவியாக இருந்து பணியாற்றுகின்றனர். இவர்களுக்குக் கீழ் ரவணியர்கள் என்றும் வர்தானியர்கள் என்றும் வேலையாட்கள் உள்ளனர். இவர்களுள் ரவணியர்கள் வர்தானியர்களைவிடச் சற்று உயர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர், ஊர்த் தலைவருடனும் கணக்கருடனும் அவர்கள் செல்லுமிடமெல்லாம் இவர்கள் சென்று வருவார்கள். இவர்களுக்கு அரசியலார் பணம் கொடுக்கின்றனர். ஊர்த் தலைவர் அல்லது கணக்கர் இட்ட கட்டளைகளை ஊருக்குச் சொல்லுவது வர்தானியர்களின் வேலை. இவர்களுக்கு வரியில்லாமல் நிலங்கள் கொடுக்கப்படுகின்றன. இவ்வூரில் 21 சாதியினர் உளர். இங்கு எல்லாச் சாதியினரும் பயிர்த் தொழிலில் கலந்து கொள்கின்றனர், ஒரு சாதியினன் தன் சாதித் தொழிலையேதான் செய்ய வேண்டும் என்பது இல்லை. பலர் வேறு தொழில்களையும் செய்கின்றனர். பார்ப்பனர்களில் கோசாயி (*Gosais*), தபோதன் (*Tapothan*) என்ற பகுப்பினர் கோவில் வழிபாட்டுக்கென்றும், கேதவால் (*Kaethaval*) என்ற பகுப்பினர் திருமணம் போன்ற வீட்டு

நிகழ்ச்சிகளுக்கென்றும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இப்பொழுதெல்லாம் பலர் ஊரைவிட்டே சென்று, பணம் தரக்கூடிய வேலைகளாகத் தேடுகின்றனர். பனியா (*Bania*) என்ற சாதியினர் பணம் கொடுக்கல் வாங்கலும், ஊருக்குப் புறம்பே இருக்கும் பொருள்களைப் பெற்று ஊருக்குள் விற்பனை செய்வதும் போன்ற தொழிலைச் செய்கின்றனர். ஆனால் இந்த ஊரில் பழைய பனியாக் குடும்பங்கள் இல்லையென்னலாம். இப்பொழுது புதிய பனியாக்களே குடி புகுந்துள்ளனர். பொருளாதார மாற்றம் பயிர்த் தொழிலாளர்களைப் பனியாக்களின் இடத்தைப் பெறுமாறு செய்துவிட்டது. முன்போல் பனியாக்களே பணத்துக்கு இருப்பிடமாக இல்லை என்னலாம். போக்குவரத்து ஏற்பாடுகளால் பனியாவின் உதவி தேவையற்றதாக ஆகிவிட்டது. குஜரத்தில் இன்று பனியாக்கள் வணிகத் துறையில் முதன்மை பெற்றிருப்பதற்குக் காரணமே இப்படி இவர்கள் தம் ஊர்களில் செல்வாக்குக் குறைந்தவர்களாக ஆகியதே என்று துணியலாம். பொதுவாகவே புகையிலை நல்லதொரு வணிகப் பொருளாக, ஒருவரின் பொருளாதாரத்தை உயர்த்த முடிந்த ஒரு பொருளாக உள்ளது. இப்பொருள் இவ்வூரில் கராசியர்களிடம் (*Garasiyas*) உள்ளது. பல ஊர்கள் சேர்ந்து ஒரு வட்டமாகிறது. எந்த ஓர் ஊர் சாதிக் கட்டுப்பாடுகளைத் தகர்க்கிறதோ அவ்வூர் அவ்வட்டத்தினின்றும் நீக்கப்படுகிறது.

எல்லோரிலும் தாழ்ந்தவர்களாகக் கராசியர்கள் கருதப்படுகிறார்கள். என்றாலும் இவ்வூரில் அரசியல் நிலையிலும் பொருளாதார நிலையிலும் இவர்கள் கையே ஓங்கி இருக்கிறது. முஸ்லிம் ஆட்சியின் பொழுது கராசியர்களுக்குச் சொந்தமான பெரு நிலங்கள் (*estates*) பறிக்கப்பட்டன. அத்துடன் அவர்கள் வரிப் பணமும் கட்டவேண்டி வந்தது. சில கராசியருக்கு மட்டும் நிலம் கொடுக்கப்பட்டது. இப்படிக் கொடுக்கப்பட்ட நிலங்கள் சிலவற்றுக்கு ஊரில் உள்ள கராசியர்கள் அனைவரும் சொந்தக்காரர்களாயினர். இவர்கள் மிகைமணம் தழுவியவர்கள். நாளுக்கு நாள் இந்தியக் கிராமத்துப் பொருளாதாரம் பெரிதும் மாறிவருகிறது. அத்துடன் சமூக அமைப்பும் அப்

படியே மாறிவருகிறது. கிராமத்துக்கு வெளியிலிருந்து உட்புகும் மாற்றமே இவை என்னலாம்.

இந்திய மக்களை இந்தியர் என்கின்ருேம். அப்படியே இந்தியாவில் உள்ள கிராமங்களை இந்தியக் கிராமங்கள் என் கிருேம். இந்திய நாடு பல பண்பாடுகளைக் கொண்டது. பழக்க வழக்கங்கள் யாவுமே பல திறப்பட்டவை. எனவே இந்தியாவின் ஒரு மூலையில் ஓர் இந்தியனை எடுத்துக்கொண்டு அவனுடைய பண்பாடு, வழக்க ஒழுக்கங்கள் அனைத்தும் எந்த இந்தியனுக்கும் உரியவையென்று சொல்வது எவ்வாறு பொறுத்தமற்றதோ அவ்வாறே இந்தியக் கிராமம் ஒன்றை வடக்கிலோ தெற்கிலோ பார்த்துவிட்டு அக்கிராமமே பொதுவாக இந்தியக் கிராமத்தின் ஓர் எடுத்துக்காட்டு என்று சொல்வதும் பொருத்தமற்றதே. இந்திய நாட்டுள் உள்ள ஒரு கிராமம் எனவே அது இந்தியக் கிராமம் ஆகிறது. பல இந்தியக் கிராமங்களைப் பார்த்தால் பொது வாக இந்தியக் கிராமமொன்றின் இயல்பு, அமைப்பு அல்லது போக்கு மட்டுமே தெரிந்துகொள்ள முடியும். ஒரு கிராமத்துக் கும் இன்னொரு கிராமத்துக்கும் குறிப்பிடத் தகுந்த வேறுபாடுகள் இருக்கின்றன என்பதை மறத்தல் கூடாது. இந்தியக் கிராமம் ஒவ்வொன்றுக்கும் ஒரு தனித் தன்மை உண்டு. ஊர் அமைப்பு, உறவு முறை, ஒரு சாதியின் ஆட்சிச் சிறப்பு (*caste dominance*), சாதிக்கோவை (*caste composition*) எல்லாமே தனிச் சிறப்புள்ளவை என்னலாம். வடவிந்தியக் கிராமத் துக்கும் தென்னிந்தியக் கிராமத்துக்குமே பல வேறுபாடுகள் உள்ளன. எடுத்துக்காட்டாக முதலில் வட விந்தியக் கிராமங் களிரண்டைப் பார்ப்போம்: மஹாகோசலில் உள்ள கிராமங் களில் பெற்ருேர் தம் மகளின் காலடிகளைத் தொட்டு வணக்கம் தெரிவிப்பராம். உடன் பிறந்த ஆடவரும் அப்படியே செய் வராம். ஆனல் ராஜஸ்தானில் மகள் பெற்ருேரை வணங்கும் வழக்கமே உள்ளது. இளையவள் மூத்தவரை வணங்குவது அங்கு முறையாகக் கருதப்படுகிறது. எனவே வடவிந்தியக் கிராமம் என்று எடுத்துக் கொண்டால்கூட ஒரு கிராமத்து மக்களின் வழக்க ஒழுக்கங்களை இன்னெரு கிராமத்து மக்களின் வழக்க ஒழுக்கங்களுக்கு நேராகச் சொல்ல முடியாது. தென் னிந்தியக் கிராமங்களில் பல வழக்க ஒழுக்கங்களை அடுத்தடுத்துக்

காணலாம். ஆனால் வடவிந்தியக் கிராமங்களில் பழக்க வழக்கங்கள் பரந்து காணப்படுகின்றன என்றே சொல்லலாம்.

என்றாலும் இந்தியக் கிராமங்களின் சிறப்பியல்புகளை ஒப்பு நோக்கின் சில அடிப்படையில் ஒன்றாகவே காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாகச் சாதி முறை. இந்தியக் கிராமங்கள் அனைத்துக்கும் இம்முறை பொதுவாக அமைந்த ஒன்று என்றால் தவறாகாது. ஆனால் இச்சாதியினின்றும் பிறந்த கட்டுப்பாடுகள், பிரிவுகள், பயன்கள் போன்றவற்றில் கிராமத்துக்குக் கிராமம் சில வேறுபாடுகளைக் காணலாம். எனவே முறையாகப் பல கிராமங்களைப் பற்றிப் படிக்கவேண்டிய தேவை ஏற்படுகிறது. அப்படிப் படித்த பின்னும்கூட ஒன்றுக்கொன்று உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஒப்பு நோக்கியே சில அடிப்படைப் பொதுமைகளைத் (*common factors representative of an indian village*) தெரிந்து கொள்ளலாம்.

# 9. மதம்

## *(Religion)*

பழங்காலத்தில் மனிதன் ஒரு நிகழ்ச்சிக்கு உரிய அடிப்படையைத் தெரிந்துகொள்ள முடியாத நிலையில்கூட நம்பிக்கை என்ற ஒன்றுமட்டும் அவனிடம் இருந்தே வந்தது. இக்காலத்தில் மனிதன் இயற்கையில் நிகழும் எந்த ஒரு நிகழ்ச்சிக்கும் உள்ள அடிப்படையை ஆராய்வதில் முனைகிறான்; அவ்வடிப்படையைத் தெரிந்துகொண்டு பயனடைகிறான். ஆனால் அக்காலத்து மனிதன் தன் மனம் எதை எப்படிக் கொண்டதோ அப்படியே அதைக் கடைப்பிடிக்கலானான். எதையும் சிந்தித்துப் பார்க்கும் திறமையை அவன் ஏறத்தாழப் பெறவில்லை என்றே கூடச் சொல்லலாம். எனவேதான் இடியின் ஓசையைக் கேட்டதும் அதைக்கண்டு அஞ்சி, அதன் அடிப்படை உண்மையைச் சிந்தித்துத் தெளியாமல், அதற்கு ஒரு தலைவனைக் கற்பித்து, அதை வணங்குவதன் மூலம் அதைத் தனக்குக் கேடு விளைவிக்காத வண்ணம் கட்டுப்படுத்த எண்ணினான்; இதில் நம்பிக்கையும் கொண்டான். இப்படி அச்சம், கற்பனை, நம்பிக்கை ஆகிய மூன்று மன நிலைகளும் மனிதனின் வாழ்க்கை வளர்ச்சியில் ஒன்றுடன் ஒன்று சேர்ந்தே வந்திருக்கின்றன. அப்படியென்றால் அன்றைய மனிதனின் மதம் என்ன? அன்றைய மனிதன் மதம் என்ற சொல்லுக்குக் கொடுத்த பொருள் என்ன? அன்றைய மனிதன் ஒரு நம்பிக்கையையோ அல்லது ஒரு கற்பனையையோ அல்லது ஒரு செயலையோ மதம் என்று கொள்ளவில்லை என்றால் பொருந்தும். மதம் என்ற சொல்லே பிற்காலத்தது என்னலாம். இன்றைய மதத்தின் பொருளையோ

அல்லது அடிப்படையையோ அன்றைய மனிதனிடம் காண முடியாதெனினும், அவனிடம் தோன்றிய எண்ணங்களே இன்று மதம் என்ற பேருருக் கொண்டுள்ளது என்னலாம்,

டுர்க்ஹைம் (*Durkheim*) என்பவர் மதம் என்ற சொல்லை விரித்துச் சொல்லும் பொழுது, 'நம்பிக்கைகளும் சடங்குகளும் கொண்டதே மதம் என்றும், புனிதப் பொருள்களிடம் நம்பிக்கையும் அப்பொருள்களுக்குக் காணிக்கையாகச் சடங்குகளும் உள்ளன என்றும் சொன்னது பொருத்தமே. நம்பிக்கை மட்டும் ஒரு மனிதனின் மனத்தில் இருந்துவிடின் அது மதமாகி விடுவதில்லை. அந்நம்பிக்கையை வெளிக்காட்டுவதே சடங்கு. எனவே இச்சடங்கே மதத்துக்கு உயிர்நாடி போன்றது. மனிதன் தன்னகத்தே எழுகின்ற உணர்ச்சிகளைக் கலை வடிவில் உலகத்துக்குக் கொடுக்கிறான். உண்மையில் மத உணர்ச்சி அவனுடைய மனத்தில் எழுந்து வெளி உலகத்தில் கலை வடிவில் காட்சியளிக்கிறது என்னலாம் என்று மாக்ஸ் ஷ்மிட் (*Max Schmiot*) என்ற பேரறிஞர் கூறுகிறார். இந்து மதத்தில் நடராசர் போன்ற தெய்வச்சிலைகளைக் கண்டால், மாக்ஸ் ஷ்மிட் கூறியவாறு, மனிதனின் மத உணர்ச்சியே இவ்வாறு ஒரு கலையெனத்திகழும் உண்மை நன்கு விளங்கும். தியாகராசர் தம் தெய்வ வழிபாட்டை, மத உணர்ச்சியை, இசைக் கலை மூலம் வெளிப்படுத்தியதும், நம்கோவில்களில் காணப்படும் மிகச் சிறந்த சிற்ப வேலைப்பாடுகளும் இவ்வுண்மையை வலியுறுத்தவே செய்கின்றன.

பழங்கால மதம் ஒருவிதச் சத்தியை நம்பியது என்னலாம். இச்சத்தியைத் தன்பால் ஈர்க்கவே மனிதன் முயன்றான். இச் சத்தி நல்லதை நிகழ்வித்தால் தெய்வம் என்றும், கெட்டதை நிகழ்வித்தால் பூதம் என்றும் கருதப்பட்டது. தெய்வத்துக்கு வணக்கமும், பூதத்துக்குத் தணிக்கையும் மனிதனிடமிருந்து வெளிப்பட்டன. இவ்வாறு பழங்கால மனிதனின் மனம் ஒன்றையொன்று எதிர்த்த இருவேறு சத்திகளை உருவாக்கியது. பிரிட்டானிய மானிடவியலார் மனிதனின் மனத்தில் வளர்ந்த இம்மதவுணர்ச்சி உலகெங்கும் இவ்வுருக்கொண்டே தோன்றியதாகக் கருதுகின்றனர். உலகத்து எந்த மூலையில் பிறந்திருப்

பினும் மனிதன் மனிதன்தானே? வெப்பதட்ப நிலையாலும், கிடைக்கும் பொருள் வேறுபாட்டாலும் மட்டுமே மனிதன் வேறுபடுகிறுன் அல்லவா? எனவே எங்கும் மனிதன் அடிப் படையில் ஓரியல்பினனுகவே காணப்படுவதில் வியப்பில்லை. சர்குஜாக் காடுகளில் உள்ள குறவர்கள் (*Korwa of the charguja forests*) மனிதன் விலங்காகவும், மரமாகவும், கல்லாகவும் இப்படி எதுவாகவும் மாறமுடியும் என்ற நம்பிக்கை யுள்ளவர்கள். 'கல்லைப் பெண்ணுக்கி வைத்த கருணுகரனே' என்று இராமபிரானை இன்றும் சிறப்பித்துப் பாடவில்லையா? 'இன்னெரு சரீரத்தினும் புகுதலாம்' என்று தாயுமானவர் பாடவில்லையா? இவை யாவும் நன்கு கூர்ந்து நோக்கற் பாலனவே.

முண்டர்கள் மலையுச்சிகளிலிருந்து பெரும் பாறைகளை உருட்டிவிடுவார்களாம். இப்படி உருட்டும் பொழுது உண்டாகும் ஓசை இடியோசையை ஒத்திருக்கிறது என்றும், அதனுல் வானம் இந்த ஓசையைக் கேட்டு மழையைப் பொழியும் என்றும் நம்புகிறுர்களாம். இப்படிப் பல பொருளற்ற செயல்களே பழங்கால மதத்தின் வெளித் தோற்றங்களாக இருந்தன என்பது எளிதில் விளங்கக்கூடிய ஓர் உண்மை. இப்பொருள் அற்ற செயலின் உச்சநிலையை எட்டிய ஒரு செயலே கண்கட்டு (*Magic*) என்றும் சொல்லலாம். கண்கட்டுக்கும் மதத்துக்கும் அவ்வளவாக வேறுபாடு இருக்கவில்லை என்னலாம். தன்னுக்கம் (*suggestion*) கடவுள் வணக்கமாகவும் (*worship*), கண்கட்டு மதமாகவும் பிற்காலத்தில் உருவெடுத்தன என்றுல் மிகை யாகாது. இதை இயற்கைப் பெருக்கம் (*evolution*) என்னலாம். மனிதன் எப்படி ஒருவகைக் குரங்கின் வழிவந்தவன் எங்கிறுேமோ அப்படியே மதமும் கண்கட்டிலிருந்து பெருகிய ஒன்று எனின் தவருகாது. ஆனுல் இன்றைய மனிதனையும் அன்றைய அக்குரங்கையும் மேலாகப் பார்க்கும் பொழுது வேறுபாடு நகைத்தற்குரிய ஒன்றுகப் படுகிறது. இக்கருத்துப் படியே இன்றைய மதத்தையும் அன்றைய கண்கட்டையும் பார்க் குங்கால் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடு ஒன்றே நமக்குப் படுகிறது. எனினும் வளர்ச்சியின் மூலம் மடுவும் மலையாகிற உண்மையை மறத்தலாகாது. கண்கட்டு என்பது என்ன?

ஒரு நிகழ்ச்சிக்குக் காரணம் நமக்குப் புலப்படாத ஒரு மறைந்த சக்தி என்று கொள்வது கண்கட்டு. மதம் இதையே தெய்வத்தின் மேலேற்றிச் சொல்கிறது. கண்கட்டின் கலைத்திறமும் மதத்தின் சடங்கு மேன்மையும் அடிப்படையில் ஒருவர் மனத்தை நிறைக்க வல்லவையே அன்றி வேறல்ல. இவ்விரண்டும் கையாளும் முறைகள் ஏறத்தாழ ஒன்றையொன்று ஒத்தனவே என்னலாம். வழிவழிக் கையாளும் முறையே இரண்டுக்கும் பயனளிக்கக் கூடியது. எனவே கண்கட்டுக்கும் மதத்துக்கும் உள்ள வேறுபாடுதான் என்னவெனின், மதத்தைக் கண் என்று கொண்டால் கண்கட்டைக் கண்ணாடி என்று கொள்ளலாம். கண்ணால் உலகத்துப் பொருள்களை நாம் உண்மை வடிவில் காண்கிறோம். அவ்வாறே மதம் உலகத்து நிகழ்ச்சிகளின் காரணத்தை ஆராய்ந்து அறிகிறது. கண்கட்டு உலகத்துப் பொருள்களின் நிழலை உண்மையெனக் கொண்டு அந்நிழலின் போக்கைப் பின்பற்றி ஆராய்ச்சியற்ற வழியில் எல்லா வற்றுக்கும் காரணமாக ஏதோ மறைந்த ஒரு சத்தியைக் காட்டு கிறது. மனிதன் மிகத் தொன்மையான காலத்திருந்தே இயற் கையில் கண்ட எதையும், கிடைத்த எதையும் தன்னலத்துக்குப் பயன்படுத்திக்கொள்ளவே முயன்றான். எனவே இயற்கை நிகழ்ச்சிகளின் உண்மை அடிப்படைகளை ஆய்ந்து பார்த்துப் பயன்படுத்திக் கொள்வது மதமாகவும், ஆயாமலே கண்டபடியே கொண்டு பயன்படுத்திக் கொள்ள முனைவது கண்கட்டு என்றும் சொல்லலாம். ஆய்ந்து பார்ப்பதன் மூலம் பெற்ற மனவளர்ச்சியே மதமாகிறது. ஆய்ந்து பார்க்கும் முறையே அறிவியல் (*science*) கண்ட நன்முறை. இம்முறையால் வளர்ந்து வருவதே மனித சமூகம். அறிவியலுக்கு அப்பாற்பட்டதே கண்கட்டு. தவறான முடிவுகளைக் கொண்டு ஒன்றைச் செய்ய முனைவது கண்கட்டு. முற்கால மனிதன் இயற்கைக்கு அப்பாற்பட்டதைக் கண்டு அஞ்சியும் வழிபட்டும் வந்தான். அவனுக்கு இயற்கையே புரிந்துகொள்ள முடியாத ஒன்றாக இருந்தது. இயற்கையைப் புரிந்து செயலாற்ற முடிந்த அன்றுதான் அவன் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒன்றின் காரணத்தை ஆராய முடிந்தது. அவ்வாராய்ச்சியின் பயன்தான் மதம். அவனுடைய

மனவளர்ச்சியின் மூலம் கண்கட்டு அடைந்த மாற்றமே மதம் என்னலாம்.

மனிதன் தன் இயக்கத்துக்கே காரணமாக ஆத்துமா ஒன்றைக் கற்பித்தான். இவ்வாத்துமா இறப்பின்பொழுது ஒருவனின் உடலை விட்டு ஏகிவிடுகிறது. அப்படி ஏகும்பொழுது ஆவியாக (*spirit*) மாறிவிடுகிறது. இந்த ஆவி அவ்வுடல் எரிக்கப்பட்ட அல்லது புதைக்கப்பட்ட இடத்தில் இருந்து வருகிறது. இது திரும்பவும் வீடு நோக்கி வாராமல் இருக்க வேண்டியே சில இடங்களில் வீட்டின் பின்புறமாகவும், சில இடங்களில் வீட்டின் ஒரு சுவரைத்துளைத்து அதன் மூலமாகவும் வெளிக் கொண்டு வந்து குறுக்கு நெடுக்கு வழியாகவெல்லாம் செலுத்தி அதை எரித்த இடத்தைகூடத் திரும்பிப் பாராமல் வருவர். இவ்வாத்துமாவின் கோபத்துக்கு உள்ளாகாமல் இருக்கப் பல சடங்குகளையும் செய்வர். இறந்தவன் புதைக்கப்பட்ட இடமே ஒரு கோவிலாகி விடவும் செய்கிறது. இன்றும் பல சுடுகாடுகளில் ஆண்டுதோறும் வழிபாடுகள் நடைபெறுவதைக் காணலாம். தொல் காலத்திலிருந்தே இப்படி இறந்தவர் வழிபாடு இருந்து வருகிறதா எனின், இல்லை என்றே சொல்லலாம். மிகப் பழங் காலத்தில் இறந்தவர் வழிபாட்டை மனிதன் நம்பவில்லை என்றே சொல்லலாம். பின்னர் ஏற்பட்ட இந்நம்பிக்கைக்குக் காரணம் கண்கட்டாக இருக்கலாம். இன்றைய மதம் அவ்வழிபாட்டை வலியுறுத்தவில்லை யென்றாலும் உடல் என்றும், உயிர் என்றும் இருவேறு பொருள்களைக் காட்டி, முன்பிறவி என்றும் முன்பிறவிப் பயன் என்றும் சொல்லி, உயிர் செல்லும் உலகம் வேறெனக் கொண்டு, அவ்வுலகத்துத் தெய்வங்களை வணங்கச் செய்கிறது.

பசு, குரங்கு, பாம்பு போன்றவற்றை வணங்குவதும், மரங்களை வணங்குவதும்கூட பழங்காலத்திலிருந்து தொடர்ந்து நிகழும் ஒரு பழக்கமே. எவ்வழிபாட்டிற்கும் மூல காரணமாக இருப்பது அச்சம் அல்லது நன்றியுணர்வு என்றே துணிந்து கூறலாம். பாம்பைக் கண்டு அஞ்சினான்; எனவே அதற்குப் பாலை வார்த்து வழிபட்டான். பசு மனிதனுக்குப் பயன்மிகுந்த விலங்கு, எனவே தன் நன்றியுணர்வின் காரணமாக அதைப்

போற்றி வழிபட்டான். இராமனுக்கு நல்லுதவி புரிந்த ஹனுமானின் வடிவத்தை உடைய குரங்கைப் போற்றுவதன் காரணமும் அதுவே. நிழல் தரும் மரம், கனி தரும் மரம், நிலத்துள்ளிருந்து உலகத்துள் வளர்ந்து நிற்கும் மரம் இவற்றை வழிபட்டதன் கதையும் அப்படியே.

ஒரு நிகழ்ச்சியின் காரணத்தை வழிபட்டதன் காரணம் அச்சமே. இடி இடித்தது எனின், அதைக்கண்டு அஞ்சிய அன்றைய மனிதன் அவ்விடிக்குக் காரணனுக ஒருமனித உருவத்தைக் கற்பித்து அதை வழிபட்டான், இதை ஆங்கிலத்தில் "ஆந்த்ரோபோமார்பிஸம்" (*Anthropomorphism*) என்கின்ருேம். தமிழில் நிகழுடல் தன்மை என்னலாம்; அதாவது நிகழ்ச்சிக்கு ஓர் உடல் கொடுப்பது என்ருகும். கல்லையும் மண்ணையும் கூட வழிபட்டான். கல்லும் மண்ணும் நில மடந்தை (*Mother Earth*)க்குரியவை என்பதாலும், மனித உடலே மண்ணிலிருந்து உண்டானதென்பதாலும், இவை யாவும் மனிதனின் மனவளர்ச்சியைக் குறிக்கின்றன என்னலாம்.

பழங்குடியின் மதம் உலகத்து உயிர்ப்பொருள்கள் யாவற்றுக்கும் பிறப்பிடம் உள்சத்தி என்ற கருத்துடையது (*aniomism*). இம் பழங்குடி மதத்தில் கண்கட்டே முதலிடம் பெற்றது. பழங்குடி மதத்தின்படி மனிதன் பல புறச் சத்திகளுக்கு நடுவே பிறந்து இயங்கிச் செல்கிருன். இச்சக்திகள் உருவம் அற்றவை. ஒவ்வொரு ஒருவனுடைய வாழ்க்கையில் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் ஒவ்வொரு சத்தி காரணமாயிருக்கிறது. எடுத்துக்காட்டாக அம்மை போன்ற நோய்களுக்குக் காரணமாக ஒரு சத்தி உள்ளது. இச் சத்திகளைத் தம் வழிக்குக் கொண்டுவர இவற்றுக்குப் 'பூசை போடுவது, அதாவது இவற்றை வழிபடுவது, பழங்குடிகளில் இருந்து வரும் ஒரு பழக்கம். தமக்கு நலம் பயப்பதாக இருப்பின் எத்தனை சிறு தெய்வங்களை (*Gods and Goddesses*) வேண்டுமானுலும் வழிபடச் சித்தமாயிருக்கின்றனர் என்றே கூடச் சொல்லலாம். இந்துக்களிலும் சிலர் அவ்வாறே தம் நலம் கருதிப் பல பழங்குடித் தெய்வங்களை வழிபடுவதையும் காண்க.

பரம்பிக்குளத்துக் காடர் என்ற பழங்குடி மக்களின் மதத்தைப் பார்ப்போம். பிசாசுகள், பூதங்கள், யட்சிணிகள், கந்தர்வர்கள் மரங்களிலும், நிழல் தரும் மரங்கள் நிறைந்த ஆழ்ந்த நீர் நிலைகளிலும் இருப்பதாக நம்புகின்றவர். இந்த ஐந்து வகை ஆவிகளில் (sprits) ஆண் பெண் வேறு பாடும் உள்ளதாம். முனி என்ற ஒரு பெரும் ஆவியும் இவர்களால் சொல்லப்படுகிறது, ஆனால் மரங்களில் உள்ள ஆவிகள் அவ்வளவாகக் காடரின் மத வாழ்க்கையில் இடம் பெறவில்லை. இவை குழந்தைகளைப் பற்றுமாம்; ஆனால் இவை வணங்கப்படுவதில்லை. இவற்றைப் போக்க உடல் நடுக்கத்தை வரவழைத்துப் (அதாவது ஒருவர் மேல் சாமி வருவது.) பிறகு வாயால் அக்குழந்தைகளின் மேல் ஆவியை விடுவர். பத்ரகாளி வழிபாட்டில் இவர்கள் இம்மரத்து அணங்குகளை (sprits)ச் சேர்த்திருக்கின்றனர்.

மலவேயும் மலக்குறத்தியும் காடர்க்கு இரு மிகப் பழஞ் சிறு தெய்வங்கள். பூமிக்குக் கீழிருந்து உலகத்துக்கு வந்த முதல் உயிர்களே இவ்விரண்டும் என்பது அவர்கள் நம்பிக்கை. கரி மலையில் உள்ள கிராழி, புராபரா என்ற இரு பொந்துகளிலிருந்து வெளிப்பட்டவர்களாக இவர்களைக் கருதுகின்றனர். காடர்களில் முதல்ஆண் பெண்களைப் பிறப்பித்தவர்களும் இவர்களே என்று நம்புகின்றனர். ஆனால் காடர்களில் ஐயப்பனைப் பெருந் தெய்வமாக வழிபடுகிறவர்கள் பலர். காட்டுக்குச் செல்லும் பொழுதும், காட்டிலிருந்து வரும் பொழுதும் ஒவ்வொரு காடனும் 'ஐயப்பன் ரஷிக்கணும்' என்று சொல்ல வேண்டுமாம். அப்படிச் சொன்னால்தான் காட்டுப் புலிகளிடமிருந்து இவர்கள் காப்பாற்றப்படுவார்களாம். இது போலவே ஆனைக்குளம் பகவதி என்ற பெண் தெய்வத்தையும் வணங்க வேண்டுமாம். முன்சொன்ன மலவேயுக்கும் மலக்குறத்திக்கும் பிறந்த மகளாக அதுவச்சேரி அம்மா என்ற ஒரு சிறு தெய்வம் கருதப்படுகிறது. மலவேயும் மலக்குறத்தியும் தெய்வங்கள் அல்ல என்றும் காடர்களில் சிலர் கருதுகின்றனர். எப்படியும், இவ்விரு பெயர்களும் காடர் மத அடிப்படையில் இடம் பெருகின்றன என்பது மட்டும் தெளிந்த உண்மை.

காடர்கள் இறப்புக்குப் பிறகு உடல் கெடினும் ஆத்துமம் மறுபடியும் ஒரு விலங்கின் உடலுள்ளோ அல்லது மனிதனின் உடலுள்ளோ புகுகிறது என்று நம்புகின்றனர். ஆனால் இயற்கையாக முடிவு பெறாதவர்கள் சிறிது காலம் முதியாராகக் (*mudhiar*) காடுகளில் அலைவர் என்று நம்புகின்றனர். இயற்கை முடிவு அடைந்தவர்களின் ஆத்துமம் அவர் வீடுகளைச் சுற்றியே இருக்குமாம். ஆதியந்தரம் என்ற இரண்டாம் நினைவு நாளை (*second death ceremony*) நிறைவேற்றிய பின்னரே அவ்வாத்துமம் மேல் செல்லுமாம்.

இவர்கள் எருமைகளையோ மாடுகளையோ தின்பதில்லை. எருமைப்பாலைக்கூடப் பல காடர்கள் அருந்துவதில்லை. இன்றும் நம்மவர்களுள் பலர் எருமைப்பாலை வாய்வு உண்டாக்கக் கூடியது என்று தவிர்ப்பதை ஒப்பு நோக்கவும். இவர்கள் மலைதேவதைகளை வழிபடுகின்றனர்; தம்மைக் குன்று வாழ் நம்பூதிரிப்பிராமணர்களாகக் கருதுகின்றனர். தெய்வத்தின் , கட்டளைப்படி இவர்கள் மாடு எருமைகளைத் தின்னாமல் இருந்ததால் குன்றுகளில் வேர்களைக் கல்லியும் சேகரித்தும் உயிர்வாழ வேண்டியிருக்கிறது என்று சொல்லுகின்றனர். விளை நிலங்களில் காட்டுப் பன்றிகள் வருவதில்லையென்றும், காளி என்றொரு பெரும் சத்திவாய்ந்த பெண் தெய்வம் தன் நிலப்பரப்பில் விளைந்து வந்த பயிர்களைப் பாழ்படுத்தி வந்த காட்டுப் பன்றியொன்றைத் தன் நாயை ஏவிக்கொன்றமையால் ஒரு காட்டுப் பன்றியும் நெருங்குவதில்லை என்றும் ஒரு கதையைச் சொல்கின்றனர். எனவே எந்த ஒரு நிகழ்ச்சிக்கும் அல்லது செயலுக்கும் காரணமாக ஒரு தெய்வமோ (*god*) தேவதையோ (*goddess*) ஆவியோ (*sprits*) சொல்லப்படுகிறது.

பெரும் பாறைகளின்மேல் அமர்ந்த முனிகள் (*sprits*) காடர்களில் இளமையும் அழகும் வாய்ந்த பெண்களை விருப்ப மேலீட்டால் தூக்கிச் சென்று விடுகின்றனவாம். எனவே இவர்கள் பருவம் வந்த பெண்களைக் குளம், குட்டைகளுக்கோ மரங்கள் நிரம்பிய இடத்திற்கோ தனியே அனுப்புவதில்லை. நன்னிமித்தங்களிலும் முன்கூட்டிச் சொல்வதிலும் இவர்கள் பெரும் நம்பிக்கையுடையவர்கள் அல்லர் என்றே சொல்லலாம்.

எனினும் இவர்கள் வீட்டைவிட்டு வெளியே காட்டுக்குச் செல்லும் பொழுது ஒரு விதவை எதிர் வந்தாலோ, மண்குடத்துடன் அல்லது விறகுக் கட்டுடன் ஒருவர் எதிர் வந்தாலோ நல்ல நிமித்தமாகக் கருதுவதில்லை. ஏலக்காய், தேன் இவற்றைப் பெறும் காலங்களில் சில வழிபாடுகள் நிகழ்த்தப்படுகின்றன; வெற்றிலை தேங்காய், வாழைப்பழம், வெல்லம் இவையே வழிபாட்டுப் பொருள்கள். இவை இந்துக்களின் பூசைப் பொருள்களை ஒத்திருப்பதை நோக்கவும்.

எனவே, காடர்கள் பத்ரகாளி, பகவதி, ஐயப்பன், மாருதி என்ற தெய்வங்களைச் சத்தி வாய்ந்த தெய்வங்களாகக் கருதுகின்றவர்களாகவும், யட்சிணிகள், கந்தருவர்கள், பிசாசுகள், முனிகள் இவைகளில் நம்பிக்கையுடையவர்களாகவும், எருமை மாடு வகைகளை உண்ணுதவர்களாகவும், மலவே-மலக்குறத்தி ஆகியோரே இவர்களின் படைப்புக்குக் காரணம் என்று கொள்ளுகின்றவர்களாகவும், நன்னிமித்தங்களில் சிலவற்றையே நம்புகின்றவர்களாகவும் காணப்படுவதைக் கண்டோமல்லவா? இவற்றிலிருந்து காடர்கள் வேறு எவ்வித மதக் கொள்கைகளையும் கொண்டவர்கள் அல்லர் என்பதும், இவர்களுடைய மதத்தின் அடிப்படையில் அச்சம் ஒன்றே காணப்படுவதும் தெளிவாகிறது. ஒரு பழங்குடியின் மதம் இது. எனவே நாகரிக மதங்களில் ஒன்ருகிய சீக்கிய மதத்தையும் சற்று நோக்குவோம்.

பழங்குடி ஒன்றின் மதத்தைப் பார்த்தோம். இப்பொழுது இந்தியக் கிராமங்களில் ஒன்ருகிய தாலகே கிராமத்தில் நிலவி வருகிற சீக்கிய மதத்தைப் பார்ப்போம். 17-ஆம் நூற்ருண்டு வரை இக்கிராமத்து மக்கள் இந்துக்களாக இருந்தனர். இந்தக் கிராமத்தை நிறுவியவர் (*founder*) தலாசிங் என்பவர். குருகோவிந்த சிங் என்ற சீக்கிய மத குருவால் சீக்கியராக்கப்பட்ட நாளிலிருந்து மாற்றம் ஏற்பட்டது. இன்று வேளாண்மைத் தொழில் செய்தவரிலிருந்து வண்ணுன் தொழில் செய்பவர் வரை எல்லோருமே சீக்கியர்களாகிவிட்டனர். இக்கிராமத்தவர்கள் ஏறத்தாழ 400 ஆண்டுகளாக இஸ்லாம் மதச் செல்வாக்கில் இருந்து வந்தனர். எனவே இவர்கள் சீக்கியர்களான பிறகும்கூட முஸ்லிம் பீர்களின்

ஆலயங்களுக்குச் சென்று வருகின்றனர். ஆனால் பீர் (*Pir*) என்ற முஸ்லிம் சொல் பீர் (*Pir*) என்ற சீக்கியச் சொல்லாக மாறி இருப்பதைக் காணலாம். இவர்கள் தேவிகளையும் கிராம தேவதைகளையும்கூட இன்னும் வழிபடுகின்றனர்.

முன் சொன்ன தலா சிங்குக்கு இக்கிராமத்து நடுவே ஓர் ஆலயம் இருக்கிறது. இவரைப் பாபா ஷீதி சாஹிப் (*Baba Sheedi Sahib*) என்று அழைக்கின்றனர். குழந்தை பிறத்தல் போன்ற எந்த ஒரு நற்செயலின் பொழுதும் இவரை வழிபட்டு இவர்க்குக் காணிக்கை செலுத்துவது ஒரு வழக்கமாகிவிட்டது என்னலாம். இவ்வாலயத்துள் நாள்தோறும் அகல் விளக்கு எரிக்கப்படுகிறது. இதற்கு இத் தலாசிங்கின் நேர்வழி வந்த ஒருவர் நெய் விடுவதும் ஒரு வழக்கம். ஆனால் இவரை வழிபட்டு வேண்டிக் கொண்ட பிறகும் நெய்விட்டு விளக்கெரிக்கின்றனர். தலாசிங் வழிப்பாட்டை முன்னோர் வழிபாடு என்றே சொல்ல லாம். இவ்வாலயத்துள் வழிபாட்டுக்கென்றோ காணிக்கையைப் பெறுவதற்கென்றோ ஓர் ஆள் இல்லை. வழிபடுகின்றவர்களின் பொருள் அங்கு அந்த நேரம் கூடியுள்ளவர்களிடையே பகிரப் படுகிறது. சீக்கியரின் மத ஏடு (*holy book*) இவ்வாலயத்துள் சில காலம் வைக்கப்பட்டிருந்தது. பின்னரே குருத்துவாரம் கட்டப்பட்டு அங்கு அவ்வேடு கொண்டு வரப்பட்டது. எனவே இவ்வாலயமே ஒரு குருத்துவாரமாகவும் இருந்தது என்னலாம்.

இவர்களில் விசுவகர்ம என்ற முன்னோர் வழிபாட்டுத் தெய்வத்தைத் தர்க்கர்களும் (*Tarkhans*), லோஹர்களும், அதாவது தச்சர்களும் கருமார்களும் வணங்குகின்றனர். குப்பைக் காரர்களில் சீக்கியர், இஸ்லாமியர், இந்துக்கள் எல்லோருமே வால்மீகியைத் தம் முன்னோராகக் கொண்டு வழிபடுகின்றனர்.

முகம்மதியக் கல்லறைகளில் சில தெய்வச் சத்தியுடையவை என்ற எண்ணத்துடன் இவற்றைத் தொழுவது இக்கிராமத்தாரின் இயல்பு. பாகிஸ்தான் பிரிந்த பிறகும்கூட தொழுதல் என்னவோ நின்றுவிடமில்லை, ஆனால் முஸ்லிம்களுக்குப் பதிலாகச் சீக்கியர்களே இக்கல்லறைகளைப் பார்த்துக் கொள்கின்றனர். முஸ்லிம் பக்கிரிகளையும், பீர்களையும் இங்குள்ள சீக்கியர்கள் தம்

நலம் கருதிப் பெரிதும் மதித்தே வணங்குகின்றனர் என்னலாம். தோரி பீரி (*Dhori Piri*) ன் ஆலயத்துக்குப் பிராமண குருவும் உண்டு.

சீக்கியர் பேய் பிசாசுகளில் நம்பிக்கையுடையவர்களாதல் கூடாதெனினும் நம்பவே செய்கின்றனர். ஒருவருடைய உடல் நிலை கெட்டிருப்பின் அந்நிலையை மாற்ற மருத்துவரால் முடியவில்லை என்றால் மந்திரத்தால் 'கெட்ட காற்றை ஓட்டும்' கேதன் வாலாக்களை அழைக்கின்றனர்; தாயத்துக்கள் கட்டிக்கொள்கின்றனர். எனவே இவர்களில் அடிப்படை நம்பிக்கையென்னவோ அப்படியேதான் உள்ளது ; கோவில்களும் பெயர்களும் மட்டுமே மாற்றம் கொண்டுள்ளன என்பது விளங்கும். சீக்கியர் அமிர்தஸரஸில் உள்ள தம் பொற் கோவிலில் இருக்கும் தர்பார் சாஹிப் குளத்தில் முழுகி எழுந்தால் எவ்விதப் பிணியும் தீரும் என்று நம்புகின்றனர். இவர்கள் மாடுகளை மிகவும் மதிக்கின்றனர்.

மற்றக் குடியானவர்களைப் போலவே இக்கிராமத்துக் குடியானவர்களும் பிராமணர்களை அணுகி, நல்ல நாள் பார்த்து அந்நாளில் நன்செய் அல்லது புன்செய்ப் பயிர் விதைத்தனர். நிலம் தூங்கும்பொழுது விதைப்பின் பயன் தாராது என்று நம்பினர். ஆனால் இப்பொழுது இப்படிச் செய்வதில்லையென்றாலும், இவர்களுடைய மறைநூலை வணங்கிய பின்னரே விதைக்கின்றனர்.

இவர்கள் இஸ்லாமியச் செல்வாக்கின் கீழ் ஏறத்தாழப் பத்து நூற்றாண்டுகளும், தம் மதத்தின் செல்வாக்கில் மூன்று நூற்றாண்டுகளும் இருந்து வந்தும்கூடப் பழம் இந்துதெய்வ வழிபாட்டை இன்னும் விட்டபாடில்லை என்னலாம். இவர்கள் சிதாலா, ஜவலமுகி என்ற இரு தேவிமார்களை வழிபடுகின்றனர். சிதால தேவி நம் மாரியம்மனைப் போன்ற ஒரு தேவதை என்னலாம். ஏனெனில் மாரியம்மனைப் போலவே இத்தேவியையும் அம்மைக்குக் காரணமாக நினைக்கின்றனர்.

திருவிழாக்களில் நிரதா (*Nirata*), ராக்ரி (*Rakhri*), ஷ்ரத்தா (*Shradhas*), தசரா (*Dasara*), திவாலி (*Diwali*), மாகி

(*Maghi*), ஹோலி (*Holi*) என்ற வடவிந்திய விழாக்களும், வடவிந்தியாவில் பிராமணர்கள் மட்டுமே கொண்டாடும் ஜன்மாஷ்டமி (*Janma ashtami*), பாஹி சஜ்ரி (*Bahi Sajri*), திக்கா (*Tihka*), சிவராத்திரி விழாக்களும் கொண்டாடப்படுகின்றன. ஆனால் சீக்கியர்களோ கிறித்துவர்களோ இவற்றைக் கொண்டாடுவதில்லை. வசாகி (*Vasakhi*), குரு நவமி, லௌரி (*Lawri*), சவானி (*Sawani*), பசந்த் (*Basant*) என்ற விழாக்கள் எல்லோராலும் கொண்டாடப்படுகின்றன. குரு அர்ஜுன் என்ற சீக்கிய குருவின் பிறந்தநாள் விழாவும், மாஸ்யமும் (அமாவாசைத் திருவிழா) இக்கிராமத்தவர் யாவரும் கொண்டாடுகின்றனர். தீபாவளித் திருவிழாவின் கதையைப் பார்ப்போம். தீப-ஆவலி-தீபாவலி என்ற சொல் விளக்கு வரிசை என்ற பொருளது என்பது யாவரும் அறிந்ததே. ஆனால் இவ்விழாவைக் குறித்துப் பல கதைகள் சொல்லப்படுகின்றன. தென்னிந்தியக் கிராமத்தவர் சொல்லும் கதை: நரகாசுரன் என்ற அசுரன் தன் முன் பிறவியில் பூமாதேவிக்கு மகன் என்றும், இவன் தன் தவ மேன்மையால் தன்னைத் தன் தாய் தவிர வேறு எவரும் கொல்லக்கூடாது என்ற வரத்தைப் பகவானிடம் பெற்றான் என்றும், இவ்வரம் பெற்றபின் கெடு செயல்கள் பல புரிந்தான் என்றும், எனவே பூமாதேவியின் அம்சமான சத்தியபாமாவால் இவன் கொல்லப்பட்டான் என்றும், அப்படிக் கொல்லப்பட்டு இறக்கும் பொழுது இவ்வசுரன் மக்கள் அனைவரும் இந்நாளில் மகிழ்ச்சி நிரம்பியவர்களாக எண்ணெய் தேய்த்து, நீரில் முழுகிப் புத்தாடை உடுத்தி, விளக்கேற்றிப் 'படபட' ஒலி உண்டாக்கிக் கொண்டாட வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டான் என்றும், அதன்படியே ஆண்டுதோறும் இவ்விழா கொண்டாடப்படுகிறது என்றும் தென்னிந்தியக் கிராமத்தவர் சொல்வர்.

வடவிந்தியாவில் உள்ள தால்கே என்ற இக்கிராமத்துச் சீக்கியர் சொல்லும் கதை: சீக்கியர்களின் ஆறாவது மதகுருவான ஹர்கோவிந்த் என்றவர் குவாலியர் சிறையில் அடைபட்டு இருந்ததாகவும், இவருடன் 52 பேர் அரசர்களும் இருந்தாரென்றும், இக்குருவும் இவ்வரசர்களும் விடுதலையடைந்தபொழுது இக்குரு அமிர்தஸரஸுக்கு வந்ததாகவும் இவ்வருகையையே திவாலியாகக் கொண்டாடுவதாகவும் சொல்கின்றனர்.

இந்துக்கள் கொண்டாடும் ஹோலித் திருவிழாவுக்கு அடுத்த நாள் சீக்கியர்கள் ஹோலா திருவிழாக் கொண்டாடுவதை நோக்கவும், அக்கிராமத்தவர் இராமன், கிருஷ்ணன், சங்கரன், இந்திரன், அனுமன், பார்வதி, திரௌபதி என்ற பெயர்களை இன்னும் தெய்வங்களெனக் கொண்டுள்ளனர்; இவர்களைப்பற்றிய கதைகளையும் நம்புகின்றனர். என்றாலும் இத்தெய்வங்களுக்கு இக்கிராமத்தில் கோவில்கள் காணப்படவில்லை. மேற்சொன்ன யாவையும் இக்கிராமத்துச் சீக்கியர்கள் தம் பழைய் நிலையினை விளக்குவனவே என்னலாம். சீக்கிய மதத்தவர்களாக இவர்களிடம் காணப்படும் சில வழக்க ஒழுக்கங்கள் பின் வருமாறு :

சீக்கிய மதத் தலைவர்களான பத்துப் பேரிடமும் இவர்கள் மிகவும் பத்தியுடையவர்கள். அமிர்தஸரஸ் பொற்கோவிலில் வைக்கப்பட்டுள்ள கிரன்த் சாஹிப் என்ற மத ஏட்டை இவர்கள் மிக உயர்ந்த பொருளாகக் கருதி வணங்கவும் செய்கின்றனர். இவர்களுக்கென்று வெளித் தோற்றத்தில் சில குறியீடுகளைக் (*outer symbols*) காணலாம். முதலாவதாக இவர்கள் தம் தலைமயிரைக் கழிப்பதில்லை; மணிக்கட்டில் இரும்பால் செய்த வளை அணிந்துகொள்வர். வாள், சீப்பு இவற்றை இவர்கள் எப்பொழுதும் கொண்டிருப்பர், முழங்காலுக்கு மேல் வருகிற கீழாடை (*shorts*) உடுப்பர்; காலையும் மாலையும் கடவுள் வணக்கம் செய்வர். மேற்சொன்ன யாவும் சீக்கியர்கள் எப்படியும் கடைப்பிடிக்க வேண்டியவை. ஆனால் இவர்களில் கேசாதாரிகள் என்றும் சகஜ்தாரிகள் என்றும், அதாவது மயிர் வைத்துக் கொண்டுள்ளவர்கள் என்றும் மயிர் கழித்தவர்கள் என்றும் இருவகையினர் உண்டு. கேஸ் (மயிர்), கரா (இரும்பு வளை), கங்கா (சீப்பு), கிர்பான் (வாள்), கச்சா (சிறு கீழாடை : *shorts*) இவற்றைக் கொண்டவரே சீக்கியராகக் கருதப்படுகின்றனர். தாடியைத் திருத்தி வைப்பதையே இவர்கள் விதியை மீறுவதாக நினைக்கின்றனர். இவர்கள் புகையிலையைப் பயன்படுத்துவதில்லை. ஆனால் இவர்கள் நிரம்பக் குடிப்பர். திருமணத்தின் பொழுதோ, குழந்தை பிறந்த பொழுதோ, எந்த ஒரு வெற்றி அல்லது நன்னிகழ்ச்சியின் பொழுதோ க்ரன்த் ஸாஹிப் என்ற இவர்களுடைய மத ஏட்டை இரண்டு நாட்களில்

முதல் பக்கமிருந்து கடைசிப் பக்கம் வரை பலர் முறை வகுத்துக் கொண்டு படித்து முடிப்பர். இதற்கு அகண்ட பத்தி (*Achand path*) என்பது பெயர். ஏழு நாட்களில் படித்து முடிக்கும் சப்தாஹிக் பத் (*soptahek path*) என்ற முறையும் உண்டு. இம்முறை இறப்பின்பொழுதும் கொள்ளப்படுகிறது.

கடவுளை இவர்கள் வாஹெகுரு (*waheguru*) என்கின்றனர். அங்கிங் கெனுதபடி எங்கும் பிரகாசமாய், ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்த ஒரு பரம்பொருளே கடவுள் என்று தாயுமானுரின் பாடற்கிசைய இவர்கள் கடவுளைக் கொள்கின்றனர். ஆனல், இவர்கள் தம் மத குருக்களாகிய பதின்மரையே சிறப்பாக வழிபடுகின்றனர். இப் பதின்மரிலும் சீக்கிய மதத்தை உருவாக்கிய குருநானக் என்ற முதல்வரைச் சிலரும், அமிர்த ஸரஸ் என்ற பொற்கோவிலையும் பெருங்குளம் ஒன்றையும் கட்டிய குரு அர்ஜுன் என்ற ஐந்தாமவரைச் சிலரும், கால்ச பந்த்தை (*Khalsa panthi*) உண்டாக்கியவரும், ஒரு சீக்கியனை $1\frac{1}{4}$ லட்சம் பேருக்கு இணையாக்கியவருமான பத்தாமவரான குருகோவிந்த் சிங்கைச் சிலரும் முதலில் வைத்து வணங்குகின்றனர். குரு அர்ஜுன் மட்டும் இந்துக்களாலும், கிறித்துவர்களாலும் வணங்கப்படுவதைக் காணலாம். இக் குருவே சீக்கிய மத ஏட்டைத் தொகுத்தவரெனக் கொள்கின்றனர். இந்து தெய்வங்கள், முஸ்லிம் பக்கிரிகள் எல்லோரையும்விட மேம்பட்ட தெய்வ சத்தி வாய்ந்தவர்களென இப்பதின்மரையும் சீக்கியர்கள் கருதுகின்றனர். குருநானக் (*1469-1539*), குரு அங்கத் (*1504-1552*), குரு அமர்தாஸ் (*1479-1574*), குரு ராம்தாஸ் (*1534-1581*), குரு அர்ஜுன்(*1563-1606*), குரு ஹர்கோவிந்த் (*1595-1644*), குரு ஹர்ராய் (*1630-1661*), குரு ஹர்கெஸ்கர் (*1656-1664*), குரு டெக்பஹதூர் (*1621-1675*), குருகோவிந்த் சிங் (*1666-1708*) எனச் சீக்கியக் குருமார்கள் பதின்மராவர்.

சீக்கியர் மறுபிறவி உண்டு என்ற கருத்துடையவர். எனவே முக்தியடைய வேண்டும் என்ற எண்ணமும் இவர்களிடையே இருந்து வருகிறது. கோயிந்தவால் என்ற இடத்தின்கண் பவோலி (*Baoli*) என்ற பெருங்கிணறென்று உண்டு. அது பூமிக்குள் 84 படிகளுடன் செல்கிறது. ஒவ்வொரு படிக்கும் ஒரு ஜப்ஜீ

என்ற வணக்கமொழியினைச் சொல்லி அப் படியின் அடியில் உள்ள நீரில் முழுகிப் பின் அந்த 84 படிகளையும் கடந்து நீரில் மூழ்கின் அவர்கள் முக்தி பெறுவர் என்று கூறப்படுகிறது. இவர் கள் எந்த ஒரு நல்ல நிகழ்ச்சிக்கும் பிராமணனுக்குப் பதிலாகச் சீக்கியக் கிரந்தியை இருத்துகின்றனர். கிரந்தியால் மத ஏட்டில் உள்ள ஒரு பா பாடப்பட்டு அப் பாவின் முதல் எழுத்தைக் கொண்டு குழந்தைக்குப் பெயர் வைக்கும் வழக்கம் இவர்களில் காணப்படுகிறது. பிறந்த குழந்தையின் நாவில் "ஏகோங்கார்" (கடவுள் ஒருவரே) என்று எழுதி அமிர்தம் கொடுப்பதும் ஒரு வழக்கம். இதைக் கிரந்தி (*Granthi*) என்பவர் செய்து வைப்பர். இந்துக்களுக்குக் காசியும் இராமேசுவரமும் எப்படியோ, முஸ்லிம்களுக்கு மெக்கா எப்படியோ, கிறித்துவர்களுக்கு ஜெருஸலேம் எப்படியோ அப்படி இவர்களுக்கு அமிர்தஸரஸ். அங்குள்ள இவர்களுடைய பொற்கோவிலுக்குத் தர்பார் சாஹிப் (குருவின் சபை) என்றும், ஹரி மந்தர் என்றும் பெயர்கள் வழங்கு கின்றன. அங்குள்ள குளத்தில் முழுகி எழுந்தால் கருங்காக்கை வெண்ணன்னமாக மாறிவிடும் என்றும், தொழுநோயாளி அந்நோய் முற்றும் நீங்கப்பெறுவான் என்றும் நம்புகின்றனர். இந்தக் குளத்துள் முதலில் விஷ்ணுவும், பிறகு இராமன் சீதையின் மக்களான லவ, குசர்களும், கடைசியாக இவர்களுடைய குருவும் அமிர்தத்தைப் பொழிந்தனர் என்று நம்புவதைக் காண்க. சீக்கியர் களில் சிலர் கயை, காசி, ஹரிதுவாரம் போன்ற இடங்களுக்குச் சென்று வருவதையும் நோக்குக. இவர்கள் இப்படிச் செல்வது இவர்களுடைய மத குருக்கள் விரும்பாத ஒன்று. பிரோஜ்பூர் மாவட்டத்தில் குருவின் காசி என்றே இவர்களுக்கு ஒரு ஸ்தலம் இருக்கிறது.

மஹாராஜா ரஞ்சித் சிங்கிடம் இருந்த புரோகிதர்களில் பெரும்பாலோர் சீக்கிய மதத்தைத் தழுவினர். சீக்கியர்களில் சிலர் (*maz bhis* : மாழ்பிக்கள்) உணவு தரும் எவருடைய மதத்தையும் தம் மதமாகக் கொள்ளத் துணிந்தவர்களாயிருக் கின்றனர். எனவே, பொருளாதார நிலையேகூட ஒருவருடைய மதத்துக்கு அடிப்படைக் காரணமாக அமைந்துவிடுகிறது என்னலாம். அரசனின் ஆட்களாகிய புரோகிதர்கள் அவ்வரச

னின் மதத்தினராயினர் எனின் அவனுடைய நல்லுதவியைப் பெறவேகூட அப்படி மாறியிருக்கலாம் என்றே கூறலாம்.

மேற்சொன்னவற்றிலிருந்து இந்தியாவில் உள்ள எந்த ஒருவருடைய மதத்தை எடுத்துக் கொண்டும் அம்மதம் ஒன்றே இந்திய மக்கள் அனைவருடைய மதங்களுக்கும் ஓர் எடுத்துக் காட்டு என்று சொல்வதற்கில்லை யெனினும், ஒரு மதத்துக்கும் இன்னொரு மதத்துக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை எப்படியும் நன்கு தெரிந்து கொள்ளலாம். வளரும் ஒரு சமூகத்தில் மதம் என்ற ஒரு கோட்பாடு மட்டும் அப்படியே இருப்பதில்லை. எனவே இவ்வளர்ச்சி தொடர்ச்சியின் வழிவந்த வளர்ச்சியா (*Continued growth*) அல்லது மாற்றத்தின் வழிவந்த வளர்ச்சியா (*growth by change*) என்பதை நாம் தெரிந்து கொண்டோமானால், அதிலிருந்து இந்திய மக்களின் சமூக நிலையை ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். எனவே இங்கு எடுத்துக்கொண்ட சில மதங்களே யல்லாமல் இந்தியாவில் உள்ள மதங்கள் எல்லாவற்றையுமே ஆராய்தல் சீரிய பயன் தரும் ஒரு முயற்சி.

# 10. முடிவுரை

*(Conclusion)*

இந்நூலில் உள்ள இப்பத்துத் தலைப்புக்களில் மானிட வியல் நிறைவு பெற்றுவிடவில்லை எனினும், இவை பிற ஆராய்ச் சிப் பொருள்களுக்கு அடிப்படைகளாகவும், முன்னோடிகளாகவும் இருக்கும் என்றே 'முடிவுரை' என்ற தலைப்பில் இங்கு மேற் கண்ட பொருள்களின் சுருக்கத்தைத் தருகிறேன்.

வேதங்களில் மிகப் பழைமையதுயெனவும் முதலது என வும் கருதப்படுவது ரிக்வேதம். இக்காலத்திருந்தே சமூகப் பாகுபாடு இருந்து வந்திருக்கிறது. இப்பாகுபாடு இந்தியாவுக்கு மட்டும் ஆன ஒன்றன்று. உலகில் எங்கும் எக்காலத்தும் காணக் கூடிய ஒன்றே. இச்சொல் பலவாறாகப் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது என்றாலும் சிறப்பாக மக்களிடையே காணப்பட்ட பாகுபாடு அல்லது பிரிவு (*separation*) ஒன்றையே குறிக்கும் என்னலாம். இதற்கு அடிப்படைக் காரணமாகத் தகுதியைச் சொல்லலாம். இத்தகுதி அடிப்படையைக் கூட உயர்வு மனப் போக்கால், அதாவது தன்னுயர்வால் (*superiority complex*) உண்டானதே எனின் பொருந்தும். ஒருவன் வீரனாகவோ, செல்வந்தனாகவோ, அறிஞனாகவோ, வாழ்க்கை நுட்பங்களை அறிந்தவனாகவோ இருப்பின் அவனுக்கு அவ்வக்காரணத்தால் தன்னை உயர்வாக எண்ணிக்கொள்வது மனித இயற்கையாக இருந்து வந்திருக்கிறது. இம்மனித இயல்பே தகுதிக்கு இடம் தருகிறது. இத்தகுதியே பாகுபாட்டுக்கும் பிரிவுக்கும் மூல காரணம் என்னலாம். நாடு என்பது வீடு போன்ற ஓர் அமைப்பே யாதலின், நாட்டு மக்கள் நலம்பெற்று வாழ ஓர்

அமைப்புத் தேவைப்படுகிறது. இவ்வமைப்பில் மக்கள் பலவாராகப் பிரிந்து நின்றே செயலாற்றவேண்டியுள்ளது. இன்றும் இவ்வுண்மை மாருத ஒன்ருகவே உள்ளது. ஒரு நாட்டின் ஆட்சியில் கல்வித்துறையை ஒருவரிடம் ஒப்படைக்கிருேம். அவர் கல்வித் தொடர்புடையவற்றை யெல்லாம் நடத்தி வைப்பவராகின்ருர். ஆனல் இக் கடமையை மக்கள் தேர்ந்தெடுத்த எவரும் செய்யலாம். இவர் விலகின் இவர் வழிவந்தவர்க்கு இப்பதவியில் அதாவது இத் தகுதியில் பங்கில்லை. ஆனல் அக்காலத்தில் மக்களுக்கு அறிவு புகட்ட ஒரு தொகுப்பினர் இருந்தனர் என்ருல் அத் தொகுப்பினர் வழிவந்தவர்களுக்கே அத் தகுதியும் கொடுக்கப்பட்டது. இவ் வழக்கு (*practice*) இக்காலத்துக்கு ஒவ்வாத ஒன்று. இதைச் சாதி என்கிருேம். ஒரு சாதியினன் இன்னெரு சாதியினனுக ஆகவும் முடியாது. உலகில் உள்ள சாதிகளுக்கும் இந்தியாவில் உள்ள சாதிகளுக்கும் உள்ள அடிப்படை வேறுபாடு இது.

வேதகாலத்தில் ஆரியர்கள் என்றும் தாசர்கள் என்றும் இரு பெரும் பிரிவுகள் மட்டுமே இருந்தன என்று மானிடவியலறிஞர் கருதுகின்றனர். இவ்விரு பிரிவினரும் மதம், மொழி, நிறம், உடலமைப்பு எல்லாவற்றிலும் வேறுபட்டவர்களே என்னலாம். நாளடைவில் ஆரியர்கள் தம்முள் பிரிந்து, தாசர்களுடன் கொண்ட கலப்பால் வகுப்புப் பிரிவுகள், சாதிப்பிரிவுகளாயின என்றும் கருதுகின்றனர். ரிக் வேதத்திலும்கூட ஓர் இடத்தில் தவிர வழிவருதல் என்பது சிறப்பாகச் சொல்லப்படவில்லை யெனவே, அக்காலத்தில் மக்கள் தொழிலை அடிப்படையாகக் கொண்டு பிரிந்து வாழ்ந்தனரேயல்லாமல் பிறப்பை அடிப்படையாகக் கொள்ளவில்லை என்றே சொல்லலாம். பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரப் பெரும்பிரிவுகளிலிருந்தே இன்றுள்ள ஏறத்தாழ 3000 சாதிகளும் உண்டாயின என்னலாம். மேற்சொன்ன நான்கு பிரிவுகளையும் வருணங்கள் என்றனர். சாதித் தகுதி ஒருவர் செய்தொழிலின் தன்மையைப் பொருத்தெழுந்தது என்னலாம். தன் சாதியிலேயே மணம் செய்துகொள்ளல், தாழ்ந்த சாதியினரிடம் உணவு கொள்ளாமை ஆகிய இவ்விரு விதிகளும் ஒரு சாதியினன் கொண்டொழுகினன். தீட்டு, தீண்டாமை, நெருங்காமை, விலக்கு முதலியவை வளர வளரச் சாதிக்

கட்டுப்பாடு தீவிரமாயிற்று. இதனுல் தாழ்த்தப்பட்டவர்கள் மிகுந்தனர். சாதி எப்படித் தோன்றியது எனின், இப்படித் தோன்றியிருக்கலாம் என்று சொல்லலாமேதவிர, இப்படித்தான் தோன்றியிருக்கவேண்டும் என்று சொல்வதற்குப் போதிய சான்றுகள் இல்லை. சாதியமைப்புக்குப் பிறப்பிடம் வர்க்கம் என்பது ஒரு பொதுக் கருத்து. ஆனுல் சாதி வளர்ச்சிக்கு மக்களின் போக்கே காரணம் என்னலாம். இப்போக்குக்கும் காரணமாக அவரவர் செய்தொழிலைச் செய்யலாம். பிராமணர்களிலேகூட தொழில் காரணமாக உயர்வு தாழ்வு காணப்படுவதை மனுவும் எடுத்துச் சொல்கிருர். பல ஏழைப் பிராமணர்கள் தாழ்ந்த சாதிக்காரர்களுக்குப் புரோகிதர்களாகவும், சாவுச் சடங்குகளைச் செய்து வைப்பவர்களாகவும் இருப்பதால் இவர்கள் பிற பிராமணர்களால் ஒரு படி தாழ்த்தப்பட்டே இருக்கின்றனர். பொதுவாகவே சாதிக்குச் சாதி விலகியிருக்க முனைந்தனர். தீண்டாமையுடன் நெருங்காமையும் வளர்ந்து வந்தது. சாதி உணர்ச்சி முஸ்லிம்களையும் கிறித்துவர்களையும்கூட விடவில்லை.

ஆனுல் இன்று இவ்வமைப்பும் கெட்டு அனைவரும் ஒன்றுகூடி வாழும் வாழ்க்கை மலர்ந்து வருகிறது என்னலாம். நாகரிகம் வளரவும், கல்வி, அரசியல் முறை மாறவும் இச்சாதிப் பாகுபாடு குன்றியே வருகிறது. பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்கள் அனைவரும் எவ்வகைத் தொழிலையும் இக்காலத்தில் மேற்கொள்கின்றனராதலின் சாதி அமைப்பு வீட்டளவில், சடங்களவில் நின்றுவிட்டது என்றேகூடச் சொல்லலாம். சாதி ஒழிப்புக்கு அடிப்படை மக்களின் மனமாற்றம். நல்ல கல்வி, சிறந்த சட்டம், மக்கள் நலம் கருதும் அரசியல் திட்டம் இவையே இம்மாற்றத்தைத் தரும். சாதியால், இனத்தால் ஒருவருடைய மனத்தின்கண் நிலைத்துவிட்ட தன்னுயர்வு (*superiority complex*) இன அகந்தை (*ethnocentrism*) யாகியது எனினும் இன்று காரணமற்ற தன்னுயர்வு கெட்டு, அகந்தையும் கெட்டுப் பொதுவில் மக்கள் அனைவருடைய வாழ்க்கையும் உயரவே நம் நாடு முயற்சித்து வருவது போற்றற்குரிய ஒன்று என்னலாம்.

மக்களின் பெரும் பிரிவே இனமாகிறது. அப்பிரிவைச் சேர்ந்தவர்களின் தோற்றம், கால்வழிப் பொதுமையுடையன

வாகும். இனம், பண்பாடு என்ற சொற்கள் பலவகையாகப் பயன்படுத்தப்படுகின்றன. மானிடவியலார் இனத்துக்கு இனம் தோற்ற வேறுபாட்டைக் காண்கின்றனர். பண்பாட்டுக்குப் பண்பாடு வாழ்க்கை விதத்தில் வேறுபாட்டைக் காண்கின்றனர். இனத் தோற்றத்தைக் குறிக்கும்பொழுது ஒருவர்கூட இந்தியாவில் ஓர் இனம் தோன்றி வளர்ந்ததாகக் கூறுமை குறிப்பிடக் கூடியது. மனிதன் இன்ன உறுப்பியல்பு உடையவனாக இருக்கிறான் என்பதை எடுத்துக்கொள்வது இனம் எனின், அவன் இன்னின்ன பண்புடையவனாக வாழ்கிறான் என்பதை எடுத்துச் சொல்வது பண்பாடு என்னலாம். ஓரினம் மற்றோரினத்துடன் சேர்ந்து கலப்புறுவதுபோல் பண்பாடும் உறுகிறது. இரு வேறு பண்பாடுகள் ஒன்று கலந்து ஒரு பண்பாடாக ஆதலும் உண்டு. பண்பாட்டு வேறுபாடுகள் மாறுபட்ட இன வழியிலும் அமைப்பிலும் முடிவு செய்யப்படுகின்றன என்பது இந்நூல் வல்லுநரின் கருத்து. உயர்ந்த இனங்கள், உயர்ந்த பண்பாடுகளை உண்டாக்க முடியும். நாகரிகம் உண்டாவதற்கேகூட உயர்ந்த விழைவுகள் (*high desires*) தேவைப்படுகின்றன. எனினும் பண்பாட்டின் முன்னேற்றத்தை இனத்தில் காணமுடியாது; ஆனால், சூழ்நிலையில் காணலாம். ஒரு நாட்டின் மக்களிடையே உள்ள பண்பாடுகள் வெவ்வேறாக இருக்கலாம். ஆனால் ஓர் இனத்து மக்களிடையே பல வழக்க ஒழுக்கங்கள் வேறுபடுவதில்லை. மனிதன் ஒரு நாட்டினனாக வாழ இனத்தால் சில பண்புகளையும், சமூகத்தால் சில கட்டுப்பாடுகளையும், சூழ் நிலையால் சில மாற்றங்களையும் பெறுகிறான். ஆனால், நாட்டுப்பற்றால் பல பிரிவினருடனும் ஒற்றுமையுடன் வாழ்கிறான். எனவே நாளடைவில் பலர் பழக்கங்கள் அவனை அணுகுகின்றன. பின்னர் ஒரு தொகுப்பே உண்டாகி விடுகிறது. இத்தொகுப்பு அடிப்படையில் வேறுபாடுள்ளதாகவும் செயலில் வேறுபாடாற்றதாகவும் உள்ளது. இவ்வடிப்படை வேறுபாடும் திருமணக் கலப்பால் கெடுகிறது என்னலாம். அதாவது, திருமண உறவால் குடிவழி மாறி, பிறிதொரு பிரிவு உண்டாக அடிப்படையில் மாற்றம் உண்டாகிறது. எனவே இனமும் பண்பாடும் மாற்றத்துக்கு உட்பட்டனவே என்னலாம். ஆனால் இம்மாற்றம் எளிதில் உண்டாவதன்று. இந்த இனத்தினன், இந்தப் பண்பாட்டினன், இந்த நாகரிகத்தினன் என்று

ஒருவனைக் குறிப்பிட உடற்கூறுகள், வழக்க ஒழுக்கங்கள், சிந்தனைப் பொருள்கள் இத்தனையும் ஒருவனிடம் எப்படி அமைந்துள்ளன என்று தெரிந்துகொள்ள வேண்டும். இத்தனை வேறுபாடுகளுக்கிடையேயும் அடிப்படையில் மனித இனத்துக்கே பொதுவான சிந்தனை இயல்பும் உடல் அமைப்பும் இருக்கவே செய்கின்றன. தெய்வ வணக்கம், மதச் சடங்குகள் முதலியன பண்பாட்டுறுப்புக்கள். இவை ஒன்றுக்கொன்று கொண்ட உள்ளுறவின் வகையைப் பண்பாட்டுணர்ச்சி என்கிறோம். ஒரு பண்பாட்டைப்போன்ற பல பண்பாடுகளைத் தோற்றுவிக்கும் ஒரு பண்பாட்டுப் பெயர்ச்சிக்குச் சிதறல் என்பது பெயர். நாகரிகம் என்பது ஒரு செடியைப் போன்று பரவி வளரும் தன்மையதே அன்றித் தனித்து வளரக்கூடியது அன்று. வளர்ச்சியின் மூலமும், சிதறலின் மூலமும் பண்பாடு வளருகிறது என்னலாம். எனவே இந்தியரின் பண்பாடு எங்ஙனம் வளர்ந்தது எனின் அதன் வளர்ச்சி ஒரு தனிப் பண்பாட்டின் வளர்ச்சி அன்று; ஆனால் பல்வேறு பண்பாடுகளின் கலவை என்னலாம்,

இந்தோ ஆரியரின் பண்பாடு தொன்மை வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. கி. மு. 1500ல் வேதத்துக்கும் அவெஸ்தத்துக்கும் முற்பட்ட மொழி பேசப்பட்டதாக மித்தானிய ஏடுகளும் பிறவும் காட்டுகின்றன. நிசாதா, கிராடர், ஆரியர், திராவிடர் என்ற தொகுப்பினர் ஒன்றுசேர்ந்து இந்திய வழக்க ஒழுக்கங்களை உருவாக்கியதாகக் கொள்ளலாம். திராவிடம் பேசிய மக்கள் இரானிலிருந்து இந்தியா வரை பரவியிருந்தனர் என்று கருதப்படுகிறது. ஹாரப்பா, மோகஞ்சோதாரோவிலிருந்து அவர்கள் சீரிய எழுத்து முறையைத் அறிந்திருந்தனர் என்று அறிகிறோம். ரிக்வேதத்தில் திராவிடர்களைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது, வீடுகள் நிறைந்த ஓர் இடத்தை இவர்கள் நகர் என்றழைத்தாகவும் தெரிகிறது. வேதத்துக்கு முரண்பட்ட சிவ—உமா, விஷ்ணு–ஸ்ரீ வழிபாடுகள் இவர்களிடமிருந்து ஆரியர்கள் பெற்றதாகவும் கருதப்படுகிறது. ஆரியர்களைவிடத் திராவிடர்களிடமே மத வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் கலையும் கலையுணர்ச்சியும் மிக்குள்ளன. ஆரியர்கள் கி. மு. 1500க்குப் பிறகு இந்தியாவுக்குள் புகுந்தனரெனக் கருதப்படுகிறது. இவர்கள் ஒருதார

மணத்தை விரும்பியவர்கள். துணைவி இன்றி எந்த ஒரு பெரிய சமூக, மத நிகழ்ச்சியிலும் ஈடுபடமாட்டார்கள். இவர்களில் அக்காலத்தில் பெண்களும் பூணூல் போட்டு, வேதமும் கற்றனர். பிற்காலத்தில் வேறு இனப் பெண்களை இவர்கள் மணந்ததன் காரணத்தால்போலும் பெண்கள் உபநயனம், வேதபாராயணம் எல்லாம் நின்றன. இந்திய மனநிலையையும், பண்பாட்டையும் வளர்த்த இன்னொரு தொகுப்பினர் மாங்கொலாயிடுகள். இவர்களைப்பற்றி யஜுர், அதர்வ வேதங்களில் சொல்லப்பட்டுள்ளது. எனவே இந்தியா ஓர் இனம், ஒரு பண்பாடு, ஒரு மொழி கொண்டதாக இல்லாமல் பலவும் கலந்த ஒரு நாடாகவே இருந்துவந்திருக்கிறது என்னலாம்.

மிகப் பழைய பழங்கற்கால நாகரிகத்தைக் காட்டுவது கைக்கோடரிப் பண்பாடு. இது தொல்காலத்தில் தாய்வழிக்கு முதன்மை அளித்த மக்களால் தோற்றுவிக்கப்பட்டும், வளர்க்கப்பட்டும் வந்ததாகக் கருதப்படுகிறது. இதனால் தென்னிந்தியாவில் வேளாண்மைக்குக் காரணமான முதல் முயற்சிகள் தோன்றின என்றும் தெரிகிறது. தென் அரேபியா, மத்திய ஆப்ரிக்கா வழியாக மேற்கு ஐரோப்பாவுக்கு வெகுகாலத்துக்கு முன்னே இவ்வேளாண்மையும் இத்துடன் தாய்வழித் தலைமையும் சென்றிருக்கலாம். இந்தியாவின் புதுக்கற்கால நாகரிகம் விசித்திரமான மெருகும் உருவமும் தரப்பட்ட ஒருவகைப் பெரும் மையோலிதிக் கைக்கோடரிகளின் சீரிய மாற்றமாகிய வளைந்த வடிவக் கோடரிகள் மிகையாக உள்ளதைக் காட்டுகிறது. சரித்திர காலத்துக்கு முற்பட்ட மொகஞ்சோ தாரோவில் காணப்படும் தெரு அமைப்பிலிருந்து அக்காலத்து அந்நாகரிகத்தை உண்டாக்கியவர்களின் மனப்போக்கு இன்னதென்று தெரிந்துகொள்ள முடிகிறது. இச்சிந்துவெளி நாகரிகத்தின் பொது இயல்பைப் பார்த்தால், ஐயமின்றி அதன் தாய்வழித் தலைமை இயல்பும், அண்மைக் கிழக்கு நாகரிக முறைகளும்; அருமையாகச் செதுக்கப்பட்ட அழகிய நாட்டியக்காரியின் உருவத்தால் கலைச் சிறப்பும் நன்கு தெளிவாகின்றன. இவற்றால் மிகப் பழங்கால நாகரிகம் பல நூற்றாண்டுகளின் மாற்றங்களையும் மீறி இக்காலத்தும் இருந்து வருகிறது

என்றும், இந்நாகரிகம் ஆரிய காலத்துக்கு முற்பட்ட ஒரு சிறந்த நாகரிகம் என்றும் அறிகிறோம். இந்நாகரிகம் கி. மு. 2500-ல் உச்சநிலையை அடைந்திருக்கக்கூடும். அக்காலத்து மெசொபொடாமிய நாகரிகமும் சிந்துவெளி நாகரிகமும் பண்பாடு என்ற ஒரு மரத்தின் இருகிளைகளாக இருந்து அம்மரத்தின் வேர்கள் இருநாடுகளுக்கும் இடையே ஊன்றியிருக்கலாம். திராவிட மொழிகளுடனும், திராவிட மொழி பேசும் தென்னிந்திய மக்களின் பழம் நாகரிகத்துடனும் சிந்துவெளி நாகரிகம் தொடர்புள்ளது எனின் தவருகாது. ஏறத்தாழ கி. மு. 1000ல் ஆரியர்கள் இந்தியாவிற்குள் புகுந்தபொழுது, உயர்ந்த சிந்துவெளி நாகரிகம் மறைந்துவிட்டது என்னலாம்.

நாடோடிகளாக ஆடுகளை மேய்த்துவந்த ஆரியர்களின் அக்காலப் பண்பாடு இக்காலத்தில் எங்கும் இல்லை. அக்கால ஆரியப் பண்பாடு முற்பட்ட இந்திய நாகரிகங்களுடன் திருமணம் போன்ற பலவிதத் தொடர்புகளால் கலந்து விரிந்தும், வளர்ந்தும் மாறிவிட்டது என்னலாம். ஆரிய மொழிகள் பேசுவோரின் மதம் பெரிதும் மாறிய வளர்ச்சிபெற்ற உருவத்தில் பல கோடி திராவிட மொழிகள் பேசும் இந்துக்களிடம் பரவலாயிற்று. பெரும்பாலும் திராவிட மொழிகளே இந்திய உள்நாட்டுப் பெரும் நகர—நாகரிகங்களை முதலில் கொண்டிருந்தவை. ஆரியரின் தந்தை வழித் தலைமை மந்தையர் பண்பாடும் இந்தியாவில் இருந்துவந்த சிந்துவெளி நாகரிகத்துத் தாய்வழித் தலைமை நகரத்தார் பண்பாடும் கலந்து எண்ணற்ற பண்பாட்டு அமைப்புக்களையும் இயல்புகளையும் தோற்றுவித்தன என்னலாம். தொல்பண்பாட்டுடனும் தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் முதல் நிலையுடனும் சேர்ந்த அல்லது தொல்பண்பாட்டுக்கும் தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் முதல் நிலைக்கும் உரிய பழங்குடி மக்கள் இன்றுவரை காட்டுப் பழங்குடி மக்களின் மூலம் தம் பண்பாட்டின் அறிகுறியை இறுத்தி வந்தனர். ஆனால் இவர்களைவிட முன்னேறிய தாய்வழித் தலைமை இரண்டாம் நிலையினர் இந்துக்களின் சாதி அமைப்பின் தாழ்த்தும் செல்வாக்குக்கு இரையாயினர் என்னலாம். இப்படி இவர்கள் மாறிய நிலை இந்திய சமூகத்தின் அமைப்புக்கும் ஓர் அளவு பொருளாதார அமைப்புக்கும் காரணமாகிறது எனவே

முக்கியமானதாகிறது. இந்தியாவின் தெற்கிலும் மத்தியிலும் உள்ள டோடமிஸப் பழங்குடி மக்களின் தொகுப்பும் ஒரு முக்கிய மான பண்பாட்டுத் தொகுப்பு என்றே சொல்லலாம். டோடமிஸ மக்கள் முதலில் வேடுவர்களாக, பயிரிடுதலில் திறமையற்றவர் களாகக் குன்றுகள் நிறைந்த காட்டில் தங்கினர். கோந்துகளும் அவர்களைச் சார்ந்த சாதியினரும் கொண்ட தந்தைவழித் தலைமை முறை இந்தியாவின் மத்திய பாகங்களில் டோடமிஸப் பண்பாடு வருகையின் காலத்தது என்னலாம். மேற்குத் தொடர்ச்சி மலையைக் கடந்து டோடமிஸம் ஓர் அளவும் செல்ல வில்லை என்ற உண்மை, இது பிற்காலத்தில் வந்தது என்பதை யும், தாய்வழித் தலைமைப் பண்பாட்டின் இரண்டாம் நிலை இதற்கு முற்பட்டது என்பதையும் வலியுறுத்துகிறது.

திருமணம், செய்தொழில் முதலியவற்றில் ஒரே வித விலக்குகளுக்கு உட்பட்டவர்களாய், ஒருவருக்கொருவர் எவ்வகை யிலும் உதவி செய்துகொள்ளக்கூடிய தன்மையுடையவர்களாய்ப் பழங்காலத்திலிருந்து தற்காலம் வரை பல வழக்கஒழுக்கங்களை மாற்றத்துக்கு உள்ளாக்காமல் காத்து வருகின்றவர்களாய் இருக்கும் மக்களைப் பழங்குடி மக்கள் என்னலாம். இவர்கள் உள்மணத்தவர்கள். சாதி வேறு; பழங்குடி வேறு. நாடெங்கும் பழங்குடி மக்கள் தாழ்ந்த சாதியினரைப்போலப் பல தொழில் களில் ஈடுபட்டிருத்தலையும், வெகுகாலத்துக்கு முன்னிருந்தே பழங்குடி சாதியாக மாறிவருவதையும் காண்க. ஆனால் ஒரு பழங்குடி, ஒரு சாதியாக எப்பொழுது எவ்வண்ணம் ஆகிறது என்பதைத் திட்டமாகச் சொல்ல முடியாது. பழங்குடியினர் சிதைவுக்கு முக்கிய காரணம் நாகரிக வளர்ச்சியே என்னலாம். எடுத்துக்காட்டாக, கடத்திச் சென்று திருமணம் செய்துகொள்ளு தல் அவர்களின் திருமண முறைகளில் ஒன்று. ஆனால் இதை அரசியலார் இந்தியத் தண்டனை விதித் தொகுப்பின்படித் (*Indian Penal code*) தடுத்தனர். எனவே இவ்வழக்கம் கெட்டா யிற்று. உதவியற்ற நிலையில் பழங்குடிகள் கிறித்துவம் போன்ற மதங்களைத் தழுவலாயினர். ஏழ்மை அவர்களைப் பெருங்குற்ற வாளிகளாகவும் ஆக்கியுள்ளது. பழங்குடிகளைக் கீழாக நடத்து வதை இந்திய அரசியல் அமைப்பு மிகவும் குறைத்துள்ளது. மக்களவையிலும், மாநிலச்சட்ட அவைகளிலும் வரையறுக்கப்

பட்ட சாதிகளுக்கும் பழங்குடிகளுக்கும் 16-ஆம் பாகம், 330,332-ஆம் விதிகளின்படி சில இடங்கள் ஒதுக்கப்பட்டன. பழங்குடி மக்கள் முன்னேறவும் வேண்டும், ஆனால் அவர்களுடைய நல்ல பழக்கங்கள் கெடாமல் போற்றப்படவும் வேண்டும். அவர்களுடைய ஒன்றுகூடி வாழும் இயல்பு, குழந்தைகளை அன்புடன் வளர்க்கும் தன்மை, எளிய வாழ்க்கை எல்லாம் போற்றற் குரியனவே.

தோடர்: நீலகிரியில் வாழும் நல்ல உடற்கட்டும், முத்துப்போன்ற பற்களும், நேர் மூக்கும் உடைய ஒரு பழங்குடியினர். கோடவர் எனின் மலைவாசிகள் என்று பொருள்படும். இதன் திரிபே தோடர் என்பது. இவர்களுக்கும் பசுக்கூட்டம் மிகவும் புனிதமான ஒன்று. இவர்கள் தெய்வத்தைத் தமிழ்ச் சொல்லால் கடவுள் என்றே அழைக்கின்றனர். இவர்களில் பெண்பாலோர் குறைந்து வருவதும் இவர்களிடையே பலதார மணம் இருந்து வருவதும் நோக்கற்பாலன.

இருளர்: நீலகிரியில் ஏறத்தாழ 2000 பேர் உள்ளனர். பெரும் நிலப் பகுதிகளிலிருந்து இவர்கள் ஊதியம் பெறுகின்றனர். இவர்களில் ஆண் பெண் உறவுக்கு ஒரு கட்டுப்பாடு இல்லை. பெண்ணின் இசைவே முதன்மையாகிறது என்னலாம். சோம்பலுடையவர்கள் என்றும் சொல்லலாம்.

குரும்பர்: இவர்களில் குருமன், குரும்பன், குருபன் என்ற மூன்று வகையினரைக் காணலாம். திருமணச் சடங்கு ஒன்றும் இவர்களில் இல்லை. சிவ வழிபாடுடையவர்கள். பெண், பருவம் எய்துவதற்குமுன், அவளுக்கு என்று வரித்த ஒருவன் வீட்டில் இருந்து, தன் தாய் தந்தையர்க்குப் பணி செய்வதுண்டு. பருவம் எய்தியதும் அவளுடன் வெளிச் செல்வது இவர்களில் இருந்து வரும் ஒரு பழக்கம்.

காடர்: ஆனைமலைக் காடர்கள் தொல்கால உடற் கூறுகள் அமையப்பெற்றவர்; வேட்டையாடியும் காட்டுப்பொருள்களைச் சேகரித்தும் வாழ்கின்றனர். பருவம் எய்திய பிறகே இருவருடைய மன ஒப்பின்படி திருமணம் நடத்தப்படுகிறது. இவர்

களில் ஒருவன் எத்தனை மனைவிகளை மணந்து வாழ்க்கை நடத்து கிறானோ அத்துணை மதிப்புடையவனாகிறான். மகளிர் கற்புக் கெடாமல் நடந்துகொள்ளக்கூடியவர்கள் என்னலாம். காளி யைத் தொழுதாலும் ஐயப்பன், மலவாழி என்ற தெய்வங் களையும் தொழுகின்றனர்.

மலாசர் : மலையரசர் அல்லது மலையர் என்ற சொல்லின் திரிபே மலாசர் என்னலாம்; மக்கள் தாயத்தைப் பின்பற்று பவர். இவர்களுடைய தலைவர்க்கு மூப்பர்கள் என்பது பெயர். இவர்கள் உள்ள இடத்துக்குப் பாடி அல்லது பட்டி என்பது பெயர். பருவம் எய்துவதற்கு முன்பே பெண்கள் திருமணத் துக்கு உரியவர்களாகின்றனர். பலதார மணம் இவர்களில் உண்டு. வீரபத்திரன், பத்திரகாளி போன்ற தெய்வங்களை இவர்கள் வழிபடுகின்றனர். பிறர் பொருளைத் திருடினாலும் இவர் களுக்குள் ஒருவர் பொருளை ஒருவர் வெளவும் பழக்கம் இல்லை.

புலையர் : நீண்ட மயிர், கருந்தோற்றம் உடையவர்கள்; அழுக்குக் கந்தைகளை உடுப்பவர்கள்; எதையும் தின்பர். அடிமைப் பண்புள்ளவர்கள்.

முதுவர் : மலையாளம் கலந்த கொச்சைத் தமிழ் பேசுகின்ற வர்கள். வேறு சாதியினரை இவர்கள் சேர்த்துக்கொள்வதில்லை. ஏலமலை, கண்ணன் தேவன் மலை, ஆனைமலை போன்ற இடங்களி லெல்லாம் இவர்கள் உள்ளனர். பையன்கள் பருவம் எய்தின் விழாக் கொண்டாடுகின்றனர். மணக்க விரும்பும் ஒருத்தியும் ஒரு வனும் ஒரு குகையில் தனித்துச் சில நாட்கள் வாழும் பழக்கம் இவர்களில் காணப்படுகிறது. ஏலமலை முதுவர் பல கணவ அல்லது பல தார மணத்தை வெறுக்கின்றனர். மீனாட்சி, சொக்கர், பழநியாண்டவர், ஞாயிறு இவர்கள் வணங்கும் தெய்வங்கள். இவர்கள் தமிழ் பேசுகின்றனர். விதவைத் திருமணம் இவர்களில் உண்டு. இவர்கள் குரங்குகளைத் தின்கின்றனர்.

எரவாளர் : காட்டுப் பழங்குடி. மக்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைந்தவர்கள்; தமிழ் நாட்டிலும் கேரளத்திலும் உள்ளனர். குடியானவர்களுடன் சேர்ந்து உழைப்பவர்கள்; நம்பிக்கையுடன் எதையும் செய்துதரக் கூடியவர்கள்.

மலையாளிகள்: பெரிய மலையாளி, கொள்ளி மலையாளி, பச்சை மலையாளி என முப்பிரிவினருண்டு. இவர்களில் சிலருக்குக் காஞ்சி மண்டல வேளாளர் என்ற பெயர் உள்ளதை நோக்குக. ஏறத்தாழ அறுபதாயிரம் மலையாளிகள் உள்ளனர் என்னலாம். பிறப்பு, பூப்பு, இறப்புக் காலங்களில் சில நாட்களைத் தீட்டு நாட்களாகக் கொள்கின்றனர். இவர்களுடைய மத ஒழுக்க வழக்கங்கள் ஏறத்தாழ இந்துக்களின் வழக்க ஒழுக்கங்களை ஒத்திருக்கின்றன என்னலாம். திருமணத்தில் பரியம் கொடுக்கின்றனர்.

பாலியர்: மிகப் பிற்போக்கான ஒரு பழங்குடி; தமிழ் பேசுகின்றனர்; வேட்டையாடி உணவைச் சேகரித்து வாழ்கின்றனர்; மாயாண்டி போன்ற தெய்வங்களை வழிபடுகின்றனர். இவர்களில் பலர் கிறித்துவர்களாக மாறிவிட்டனர்.

செஞ்சுக்கள்: நல்லமலை வாசிகள். இவர்கள் ஏனாதிகளுடன் திருமண உறவு கொள்வது உண்டாம்; சோம்பல் மிகுந்தவர்கள். கொள்ளையடிப்பதில் வல்லவர்கள்; நரசிம்ம சுவாமியை வணங்குகின்றனர். விதவைத் திருமணமும் பலதார மணமும் இவர்களுக்கு உடன்பாடே; காக்கை, பல்லி, கரடி, மயில், கருங்குரங்கு முதலியவற்றைத் தின்கின்றனர்.

லம்பாடிகள்: தெலுங்கு, கன்னட மாவட்டத்தினர். கணவனை இழந்தவள் வேறொருவனுடன் இருந்து வாழலாம். இவர்களுடைய மொழிக்கு எழுத்துக்கள் இல்லை. இவர்களில் பெண்கள் நல்ல உடற்கட்டுடையவர்கள்; அச்சம் அற்றவர்கள்; மகிழ்ச்சி குன்றாமல் உள்ளவர்கள். பாட்டு, நடனம் போன்ற கலையறிவும் உடையவர்கள் என்னலாம்.

குறவர்கள்: குன்றுகளில் வாழ்பவர்கள். எனவே குறவர்கள் எனப்படுகின்றனர். முருகனின், மனைவியாகிய வள்ளி இவர்கள் கூட்டத்தினர் எனப்படுவதை நோக்குக. இவர்கள் பேசும் மொழி கொச்சைத் தமிழ். பிறர் கையாளாக இருந்து கொள்ளையடிப்பதில் வல்லவர்கள். இவர்கள் கருமணி, செம்மணி, ஊசி விற்றுப் பிழைப்பதை இன்றும் காணலாம்.

ஏனாதிகள்: எயினர் என்ற சொல் ஏனாதி என்றாயிற்று எனின் தவறாகாது. தெலுங்கு பேசுகின்றனர்; நெல்லூர், சித்தூர், செங்கற்பட்டில் இவர்களைக் காணலாம். மாட்டிறைச்சியைத் தின்பதில்லை; செஞ்சு தேவதையை வணங்குகின்றனர். இவர்களில் பெண்ணும் பிள்ளையும் ஒப்புக்கொண்டால் ஒப்புக் கொண்ட அன்றிலிருந்து கணவன் மனைவியாக வாழலாம்; கற்பில் மிகக் குறைந்தவர்கள் என்னலாம்; குறி சொல்வதில் தேர்ந்தவர்கள்.

கள்ளர்கள்: கள்ளர், மறவர், அகம்படியர் என்ற முப்பிரிவில் முதல் இருவரும் குற்றவாளிப் பழங்குடிகளாகக் (*Criminal tribes*) கருதப்படுகின்றனர். இவர்களில் நிலமுடைய பெருமக்களும் அறிஞர்களும் இருந்திருக்கின்றனர்.

ஷோலசர்: ஒருவகைப் பழைய கொச்சைக் கன்னட மொழியைப் பேசுகின்றனர்; ராகியை உண்கின்றனர்; மலையுச்சிகளில் வாழ்கின்றனர்.

மேற்கூறப்பட்ட பழங்குடிகளைப் பற்றி மாணவர்கள் மேலும் தெரிந்துகொள்ள முயற்சித்தல் வேண்டும். இங்குச் சில மிக முக்கியமான அடிப்படைகளையே சுருங்கச் சொல்லவேண்டியுள்ளதால், ஒவ்வொரு பழங்குடியைம் பற்றியுப் மிக விரிவாக எடுத்துச் சொல்வதற்கில்லை. எனவே, அடுத்துவரும் குடும்பத்தைப் பார்ப்போம்,

கூடி வாழ்வது குடும்பம் என்பது எவரும் அறிந்த ஒன்றே. ஆனால் இக்குடும்பம் பலவகைப்படுகிறது. முக்கியமாகத் திருமணத்தின் அடிப்படையில் இது பலவாறாகிறது. எனினும் ஒருவகையில் ஒரு கட்டுப்பாடும் அமைப்பும் இருந்தே வருகின்றன. குடும்பம் எப்படி ஏற்பட்டது என்ற கேள்விக்கு விடையாக எவர் எதைச் சொல்லினும், மனிதன் ஆண் பெண் உறவால் கட்டுப்பட்டு, அவ்வுறவு தந்த கடமைக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டியவனாக இருப்பதே இதற்கு அடிப்படைக் காரணம் எனின் பொருந்தும். தாய், தந்தை, அவர்கள் பெற்ற குழந்தைகள், மற்றும் இப்படிப் பலர் சேர்ந்து ஒரு குடும்பமாகிறது.

மன நிறைவுடன் ஒருவர் வாழ, எந்நிகழ்ச்சியும் ஊறு செய்யாதபடி பலரும் ஒருவரை ஒருவர் காத்து வாழ வழி செய்வது குடும்பம். நல்ல வழக்கஒழுக்கங்களைச் சொல்லித் தருவது குடும்பம். எந்தச் சமூகத்திலும் காணப்படும் ஒரு நிலைபெற்ற வாழ்க்கை முறை இது. குடும்ப அமைப்பு என்றும் கெடாத நிலையே நாட்டின் நலன் என்னலாம். ஏனெனில் பள்ளிகளும் கல்லூரிகளும், அறிஞர்களும், ஆசிரியர்களுமே நன்மக்களைப் பெருக்கிவிட முடியாது. ஒருவனோ ஒருத்தியோ நல்ல பண்புடையவனாக, நல்ல பண்புடையவளாக வாழக் குடும்பம் பெரிதும் உதவுகிறது.

மக்கள் சிலர் கூடிய கூட்டம் சமூகம் அன்று. தம் வாழ்க்கையின் முடிவு இன்னதெனக் கொண்டு, அம்முடிவின் நிறைவுக்கு ஆவன செய்தற்கு அத்தனை பேரும் ஒருவருக்கொருவர் உதவியாக இருந்து வாழும் ஒரு கூட்டமே, ஓர் அமைப்பே சமூகம் என்னலாம். கட்டுப்பாடில்லாமல் எதையும் எப்படியும் எந்த நேரத்திலும் செய்து வாழும் விலங்குகள் உள்ள காட்டில் ஒரு சமூகத்தைக் காண முடியாது. கடுமையான வேலைகள் ஆடவராலும், சற்று எளிய வேலைகள் மகளிராலும் செய்யப்பட்டுப் பல பொதுப் பொருள்கள் ஆக்கப்படுகின்றன. இப்பொருள்கள் பொதுவாக உண்டாக்கபடினும் சமூகத்து உறுப்பினர்களுக்குப் பயன்படுகின்றன. எடுத்துக்காட்டாகச் செப்பனிட்ட பாதைகள், புகைவண்டிகள் முதலியவற்றைக் காண்க. திறமையும் தகுதியும் எப்படியோ, அப்படியே ஒருவர்க்கு ஒரு வேலையும் சமூகத்தால் தரப்படுறது. தொழிலைப் பகிர்ந்து பொருளை உண்டாக்குவது சமூகத்து ஆக்க முறையாக இருப்பினும் தொழில் பகுப்பு ஒன்றே தொழில் அமைப்பு என்று கொள்ளக் கூடாது. சமூக அமைப்புக்குப் பொருள் உற்பத்தி மிக முக்கியம். ஒரு சமூகத்தின் பொருளாதார நிலை அச்சமூகத்து மக்களுடைய செய்திறமையையும், தேவைகளையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது என்னலாம். எனவே சமூக அமைப்பில் மக்களே அல்லாமல் பொருள்களும் இடம்பெறுவது விளங்கும். ஒருவன் சமூகத்துக்கு எதைச் செய்ய முடியுமோ அதையே அவனிடம் சமூகமும் எதிர்பார்க்கிறது என்னலாம். மக்களையும் அவர்கள் செய்யும் தொழில்களையும் மதித்து, அவர்களுக்குத்

தகுதிகள் வழங்கி, அவர்களுக்கும் சமூகத்துக்கும் ஒரு சிறந்த தொடர்பை உண்டாக்கி வரும் இன்றைய சமூகத்தைப் பாராட்டிப் போற்றவே வேண்டும். சமூகத்து இப்பெரும் பணிக்குத் துணையாக இருந்து வருவதே சட்டம். அச்சட்டத்தை உண்டாக்குவதும் மக்களேயாதலின், சட்டம் மக்களின் மனப்போக்கின் ஒரு ஒழுங்குமுறைத் திரட்சி எனின் பொருந்தும்.

நம் நாட்டில் ஏறத்தாழ அரை மிலியன் கிராமங்கள் இருக்கின்றன என்னலாம். காந்தியடிகள் கிராம முன்னேற்றத்துக்குப் பாடுபட்டது எவரும் அறிந்ததே. கிராம முன்னேற்றமே இந்தியாவின் முன்னேற்றம் என்று துணிந்தே சொல்லலாம். மானிடவியலாரும் சமூகவியலாரும் சேர்ந்து உழைத்தல் கிராம முன்னேற்றத்துக்குப் பெரும்பயன் தரக்கூடிய ஒரு செயலாகும். இந்தியக் கிராம அமைப்பையோ நிலையையோ தெரிந்துகொள்ளவேண்டுமாயின் சில கிராமங்களை மட்டும் எடுத்துக்காட்டாகப் படித்துப் பயனில்லை. ஏனெனில் ஒரு கிராமம் இன்னொரு கிராமத்தினின்றும் பழக்கவழக்கங்களிலும், நம்பிக்கைகளிலும் மாறுபாடவே செய்கிறது. இம் மாறுபாடு மிகப்பெரும் அளவு இல்லையென்றாலும்கூட கிராமத்து அமைப்பை நன்கு புரிந்துகொண்டு திருத்தங்கள் பல செய்ய வேண்டுமாயின் இம்மாறுபாட்டைச் சிறப்பாகப் பார்க்கவேண்டியிருக்கிறது. எடுத்துக்காட்டாகத் தென்னிந்திய வட இந்தியக் கிராமங்களைப் பாருங்கள். வட இந்திய கிராமமொன்றைப் பார்த்தவர் தென்னிந்தியக் கிராமமொன்றின் பொதுத் தோற்றத்தை வேண்டுமானால் தெரிந்துகொள்ளலாமே தவிர, அதன் அமைப்பையோ, நிலையையோ, வாழ்க்கை முறையையோ தெரிந்துகொள்வது கடினம். இந்திய மக்களை எப்படி இந்தியர்கள் என்கின்றோமோ அப்படித்தான் இந்தியாவில் உள்ள கிராமங்களை இந்தியக் கிராமங்கள் என்பதும் கூட. தமிழன் வாழ்க்கை மராட்டியனின் வாழ்க்கையினின்றும் வேறுபட்டதே. எனினும் பொதுத் தோற்றம் என்னவோ ஒன்று என்னலாம். இப்படித்தான் கிராமங்களும், கிராம அமைப்பு, உறவுமுறை, ஒரு சாதியின் ஆட்சிச் சிறப்பு, சாதிக் கட்டு எல்லாமே தனிச் சிறப்புள்ளவை என்னலாம். அடிப்படைச் சிறப்பியல்புகளையே சில கிராமங்கள் தரவல்லவை. யென்வே கிராம முன்னேற்றத்துக்

கும் பாடுபடுகின்றவர் ஒரு கிராமத்து மக்களின் முன்னேற்றத்துக்கு மட்டும் ஆவன செய்யும்பொருட்டுத் தம் முயற்சியைச் செலவிடல் நலம்.

காரணத்தைத் தெரிந்துகொள்ள முடியாத காலத்தில்கூட மனிதனின் மனத்தில் நம்பிக்கையுணர்ச்சி என்னவோ இருந்தே வந்தது. ஆனல் நம்பிக்கையை மாற்ற அவன் உடனே முயற்சி எடுக்கமாட்டாதவனாய் இருந்தான். இன்று எதற்கும் ஏன் என்ற கேள்வி தோன்றிவிடுகிறது ; எனவே அன்றைய மனிதனின் நம்பிக்கை வேருகவும், இன்றைய மனிதனின் நம்பிக்கை வேருகவுமே உள்ளது என்னலாம்.

அன்றைய மனிதன் மதம் என்ன ? பெரும்பாலும் அச்சத்தை அடிப்படையாகக் கொண்டு அச்சத்தைத் தோற்றுவிக்கும் காரணியிடம் கொண்ட நம்பிக்கையே அன்றைய மனிதனின் மதம். அதாவது தொல்கால மனிதனின் மதம் என்னலாம். ஆனல் நாள் செல்லச் செல்ல, மனிதனின் அறிவு முதிர முதிர, சூழ்நிலையும் வாழ்முறையும் மாற மாற இயக்கத்துக்கும் இயங்கிக்கும் (*Cause and effect*) உள்ள தொடர்பை ஆய்ந்து ஏற்கும் முடிவில் கொள்ளும் மனநிறைவு மதமாகிறது எனின் தவருகாது.

முண்டர்கள் மலையுச்சிகளிலிருந்து பெரும்பாறைகளை உருட்டிவிடின் அப்பாறைகள் உண்டாக்கும் ஓசை இடியோசையைப் போன்றதெனவே மழை வரும் என்ற நம்பிக்கையுடையவர்களாம். இன்றும் இந்துக்களில் பலர் புரோகிதர்களைக் கொண்டு மழைவேண்டி ஓமம் செய்வதில் நம்பிக்கையுடையவர்களாக இல்லையா ? மழை எப்படி உண்டாகிறது என்பதை அறிவியல் தெரிவிக்கிறது. எனவே முண்டர்கள் நம்பிக்கைக்கும் இந்துக்கள் நம்பிக்கைக்கும் சிறிது வேறுபாடே உள்ளமை காண்க.

ஒரு நிகழ்ச்சிக்குக் காரணம் நமக்குப் புலப்படக்கூடிய, அதாவது நம் அறிவுக்கு எட்டிய ஒன்றே என்ற நம்பிக்கையுடையது அறிவியல். ஒரு நிகழ்ச்சிக்குக் காரணம் நமக்குப் புலப்படாத ஒரு மறைந்த சத்தி என்ற நம்பிக்கையுடையது கண்கட்டு. இந்நம்பிக்கையை தெய்வத்தின்மேல் வைப்பது மதம்.

